# சைவ நெறி

## ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி

## தரம் - 11



தேசிய கல்வி நிறுவகம்
மகரகம
இலங்கை

அச்சிடலும் விநியோகமும் - கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# சைவநெறி

# தரம் 11

## ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி



சமயக் கல்வித் துறை மொழிகள், மானிடவியல்,
சமூக விஞ்ஞான பீடம் தேசிய கல்வி நிறுவகம்

அச்சிடலும் விநியோகமும் - கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# பணிப்பாளர் நாயகத்தின் செய்தி

தற்போதைய ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது ஆசிரியர்கள் தமது பாடங்களைக் கற்பிப்பதற்குப் பின்பற்ற வேண்டிய அவசியமான கற்றல் - கற்பித்தல் அணுகுமுறைகளை மேற்கொள்வதற்கு சிறந்த ஒரு வழியாட்டியாகும்.

இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது நீங்கள், உங்கள் வகுப்பறைச் செயற்பாடுகளை மாணவர் - மையக் கற்றலுக்கு ஏற்ற வகையில் ஒழுங்கமைப்பதற்கான வழிகாட்டலை வழங்குகின்றது. இன்றைய வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டை மாணவர் மையமாக ஒழுங்கமைப்பதென்பது எமது இலங்கை ஆசிரியருக்கும் வகுப்பறைக்கும் ஒரு புதிய அனுபவமன்று. எவ்வாறாயினும் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி மூலம் மாணவர் மையக் கற்றல் - கற்பித்தல் முறைமையியலுக்கு ஒரு புதிய பண்புக் கூறு கிடைக்கிறது.

இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது மாணவர்களின் பங்குபற்றுதலை உறுதிப்படுத்தும் வகையில் பாடத்தைத் திட்டமிடுவதற்கு அவசியமான பாதையை வழங்குவதோடு மட்டுமல்லாது அதற்கு அவசியமான சூழலை மதிநுட்பத்துடன் கட்டியெழுப்பவும் உதவுகிறது.

ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியின் உள்ளார்ந்த அடிப்படையானது ஆசிரியர் என்பவர் வெறுமனே அறிவை ஊடுகடத்துபவராக அல்லாது அறிவில் மாற்றத்தை ஏற்படுத்துபவராகவும் இருக்க வேண்டும் என்னும் தத்துவத்தைக் கொண்டுள்ளது. இச்செயற்பாடானது மாணவரை கற்பவர் என்னும் நிலையிலிருந்து அறிவைத் தேடுபவர் என்னும் நிலையை அடைவதற்கும், இதன் மூலம் புதிய அறிவை உருவாக்கவும் உதவுகின்றது. ஆகவே, ஆசிரியர் என்பவர் மாணவருக்கு புதிய அறிவை ஆய்ந்தறிந்து கண்டுபிடிப்பதற்கான வழிகாட்டியாகவும் தூண்டியாகவும் செயற்பட வேண்டும்.

ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியின் உள்ளார்ந்த தத்துவமும் செயற்பாட்டு வடிவமைப்பும் பழமையான கற்பித்தல் முறைமையியலையும் சிந்தனைகளால் உண்டாகும் தடைகளையும் தகர்த்தெறிய ஆசிரியர்களைத் தூண்டும் என நம்பப்படுகின்றது. எனவே, ஆசிரியர்கள் புதிய கற்பித்தல் அணுகுமுறைகளையும் கற்பித்தல் முறைகளையும் அவசியம் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும். புதிய ஆயிரமாம் ஆண்டானது மிகப் பரந்த எல்லையற்ற புதிய அறிவின் தோற்றத்தையும் உருவாக்கத்தையும் கண்டுள்ளது. ஆகவே, ஒவ்வொருவரும் தமது புதிய செயற்பாடுகளை ஒரு முகப்படுத்தித் திட்டமிடுவதற்குப் பழைய முறைகளை மாற்றியமைக்க வேண்டிய தேவையுள்ளது.

ஆசிரியர் தனது கற்பித்தல் பணியில் பயன்படுத்தக்கூடிய அடிப்படையான அறிவுறுத்தல்களை வழங்குவதுடன் உயர் அணுகுமுறைகளை நோக்கி அவரை வழிநடத்துவதும் இவ்வகையான ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டிகளில் உள்ளடக்கப்பட்டுள்ள தகவல்களின் ஊடாக எதிர்பார்க்கப்படுகிறது. அத்துடன் ஆசிரியர், இவ் அறிவுரைப்பு வழிகாட்டியை உரிய முறையில் கற்று அதனுடைய நோக்கங்களைக் கொண்டு வகுப்பறையில் உச்ச பயனைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது. இதன் மூலம், வகுப்பறையை வினைத்திறன் மிக்கதும் தரமானதுமாக்குவதுடன் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை உயர்வடையச் செய்வதற்கும் ஆசிரியர் பெரும் முயற்சி மேற்கொள்ளுவார் என்பது எனது நம்பிக்கையாகும்.

இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியைத் திறம்படத் தயாரித்து வெளியிடுவதற்கு தமது நேரத்தையும் சிறப்புத் திறமைகளையும் பங்களிப்பு செய்த தேசிய கல்வி நிறுவகத்தைச் சேர்ந்த பாட நிபுணத்துவர்களுக்கும் வெளி வளவாளர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

**பேராசிரியர் லால் பெரேரா**
பணிப்பாளர் நாயகம்
தேசிய கல்வி நிறுவகம்
மகரகம

# கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகத்தின் செய்தி

யாவருக்கும் கல்வி என்னும் நோக்கத்தை மையமாகக் கொண்டு எமது அரசு நாட்டிலுள்ள சகல பாடசாலை மாணவர்களுக்கும் இலவசமாகப் பாடநூல்களை வழங்கி வருகின்றது. அத்துடன் ஆசிரியர்களுக்கு ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டிகளை ஆக்கி வழங்குவதானது கற்றல் - கற்பித்தல் செயன்முறையில் பண்புத்தர விருத்தியை ஏற்படுத்தும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

வகுப்பறைக்குள்ளும் அதற்கு வெளியேயும் மாணவர்களின் அறிவுவிருத்திச் செயற்பாட்டுக்கு வழிகாட்டுவோர் ஆசிரியர்களே. மேலும், பாடத்திட்டத்தால் எதிர்பார்க்கப்படும் தேர்ச்சி மட்டங்களை நோக்கி மாணவர்களை வழிநடாத்தும் முக்கிய நபரும் ஆசிரியரேயாவார். இந் நோக்கத்தை அடைவதற்கு இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி உங்களுக்குக் கைகொடுக்கும். இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியில் குறிப்பிடப்பட்டுள்ள வழிகாட்டல்களைக் கற்றுப் பின்பற்றுவதன் மூலம் கற்றல் - கற்பித்தல் செயன்முறையை அதிக பயனுறுதியுடையதாக மாணவர்களுக்கு வழங்கும் பொறுப்பு ஆசிரியர்களாகிய உங்களைச் சார்ந்ததாகும். இப் பொறுப்பை உணர்ந்து செயற்படும் நீங்கள் பெறுமதிமிக்க ஒரு வளம் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

அறிவு, திறன்கள், மனப்பாங்குகள், தேர்ச்சிகள் என்பவற்றையும் வலிமையான சமூக மற்றும் உள்ளார்ந்த திறன்களையும் கொண்ட முழுமையான பிரசைகளை சமூகத்திற்கு வழங்கும் பொறுப்பு உங்களுடையதே. தற்கால உலகின் சவால்களுக்கு முகங்கொடுக்கக்கூடிய எதிர்கால சந்ததியை நீங்கள் உருவாக்குவீர்கள் என்பதே என் எதிர்பார்ப்பாகும். உங்கள் ஆற்றலை உறுதியாக்குவதன் மூலம் அவ் எதிர்பார்ப்பை வெற்றிகரமாக்குவதற்கு இவ் அறிவுரைப்பு வழிகாட்டி உங்களுக்கு உதவும் என உறுதியாக நம்புகின்றேன்.

டபிள்யு.எம்.என்.ஜே புஸ்பகுமார
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
'இசுருபாய'
பத்தரமுல்ல
12-11-2009

# முன்னுரை

இலங்கையின் கலைத்திட்டக் கொள்கைகளுக்குப் பாடசாலைக் கலைத்திட்டமானது, எட்டு வருடங்களுக்கு ஒரு முறை காலத்திற்கு இயைந்ததாக மறுசீரமைக்கப்பட்டு வருகின்றது. அதற்கேற்ப 2007 ஆம் ஆண்டிலிருந்து நடைமுறைக்கு வந்த கல்விச் சீர்திருத்தத்தின் கீழ் இப்பாடத்திட்டமும் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி நூலும் அறிமுகஞ் செய்யப்படு கின்றன.

இதுவரை நடைமுறையில் இருந்த பாடத்திட்டங்களில் குறித்த பாடத்துடன் தொடர்பான விடயங்களும் அவற்றின் உள்ளடக்கமும் வழங்கப்பட்டு, அவற்றைக் கற்பிக்கும் பணி ஆசிரியரின் மீது சுமத்தப்பட்டிருந்தது. இந் நடைமுறைகள் காரணமாக ஏராளமான தகவல்களை மாத்திரம் அறிந்த மாணவர் பரம்பரையொன்று உருவானது.

புதிய கலைத்திட்டச் சீர்திருத்தத்தின் கீழ் அறிமுகஞ் செய்யப்படுகின்ற பாடத்திட்டங்களில் அவ்வப் பாடங்களில் மாணவர் அடையவேண்டிய தேர்ச்சிகள் பல முன்வைக்கப்பட்டுள்ளன. இந்தப் புதிய அணுகுமுறை மூலம் அதிகமான விடயங்களைக் கற்று, அவற்றை நடைமுறையில் செயற்படுத்துகின்ற, தேர்ச்சி கொண்ட மாணவர் பரம்பரையொன்றை உருவாக்குவது எதிர்பார்க்கப்படுகின்றது. இதனால், புதிய பாடத்திட்டத்தைக் கையாள்கின்ற ஆசிரியர்கள் இவ்வேறுபாட்டைச் சரியாகப் புரிந்து கொள்வதுடன், அதில் விஷேட கவனமும் செலுத்த வேண்டும்.

இந்நூலின் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டிப் பகுதியில், புதியதொரு கற்றல் கற்பித்தற் செயலொழுங்கு விதந்துரைக்கப்பட்டுள்ளது. இச்செயலொழுங்கின் கீழ் மாணவர் நூலகத்தைப் பயன்படுத்துதல், நூல்களை வாசித்தல், சுற்றாடலை அவதானித்தல், தகவல் அறிந்தோரைச் சந்தித்து விடயங்களைச் சேகரித்தல், தமது சகபாடிகளிடமிருந்து பல்வேறு விடயங்களைக் கற்றல், தாம் அறிந்தவற்றை அவர்களுடன் பரிமாறிக் கொள்ளல், இயலுமெனில் இணையத்தளம் மூலம் தகவல் திரட்டல் முதலான கண்டறிதல் மூலமான கற்றல் கலாசாரம் ஒன்றைக் காணமுடியும். இதற்கு, கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தின் மூலம் வழங்கப்பட்டுள்ள பாடநூலை உசாத்துணையாகப் பயன்படுத்தலாம். இவ்வாறு கண்டறியப் படுகின்ற தகவல்கள் மிகச் சரியாகவும் ஒழுங்காகவும் முழுமையாகவும் மாணவர்களை அடையச் செய்வதே ஆசிரியர்களின் பணியாகும். இந்தவகையில் ஆசிரியரின் வகிபாகம் புத்தறிவுகள் மூலம் போசிக்கப்படுவது அவசியமாகும். இங்கு மாணவர் ஏராளமான விடயங்களைக் கண்டறிந்து, பல்வேறு அம்சங்களையும் தெரிந்தவர்களாக மாறுகின்றனர். இத்தகைய செயற்பாட்டுக் கற்றற் சூழலானது மாணவர்களைப் பெரிதும் கவர்வதாக அமையும்.

இதற்காக, இந்த ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி நூலில் விதந்துரைக்கப்பட்ட மாதிரிச் செயற்பாடுகளைக் கையாள்வதற்கும் இன்னும் பல்வேறு செயற்பாடுகளை உருவாக்கிக் கொள்வதற்கும் இந்நூலை ஒரு வழிகாட்டியாகக் கொள்ளுங்கள். இதனூடாக, புத்தாக்கத் திறனுடைய ஓர் ஆசிரியராகச் செயற்பட்டு பல்வேறு புதிய செயற்பாடுகளை உருவாக்கிக் கொள்வீர்களென எதிர்பார்க்கின்றோம்.

இந்தப் புதிய வகுப்பறைக் கற்றல் கற்பித்தற் செயலொழுங்கின் போது, மாணவர் எப்பொழுதும் செயற்படுபவர்களாகக் காணப்படுவர். அதனால், அவர்களது திறமைகள், ஆற்றல்கள் வெளிக்கொணரப்படும். அவற்றுக்கு நீங்கள் மதிப்பளியுங்கள். அவர்களை உற்சாகப்படுத்துங்கள். இன்னும் சில சந்தர்ப்பங்களில் மாணவர் எதிர்கொள்ளும் கஷ்டங்கள்,

இடர்ப்பாடுகளை நீங்கள் அவதானிக்க முடியும். அவ்வாறான சந்தர்ப்பங்களில் நீங்கள் உதவி செய்யுங்கள். அயலில் உள்ள சகபாடிகளுக்கு உதவி செய்ய மாணவரை வழிப்படுத்துங்கள். இவ்வாறு செயற்படும் போது இடம்பெறுகின்ற கணிப்பீட்டுச் செய லொழுங்கானது சிறந்த கற்றலுக்கு உதவியாக அமையும்.

இந்த ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி நூலில் குறிப்பிடப்பட்டுள்ள கற்றல் கற்பித்தற் செயற்பாட்டினை விரிவுபடுத்துவதற்கான உபகரணமானது ஒப்படையாக அல்லது பயிற்சியாக மாணவர் கற்றவற்றை, மேலும் பலப்படுத்தக் கூடிய விதத்தில் ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது. இதனைச் செயற்படுத்துவதில் உங்களது அவதானத்தைச் செலுத்துங்கள். இதனை மாணவரை மதிப்பீடு செய்வதற்கான சந்தர்ப்பமாகவும் ஆக்கிக் கொள்ளுங்கள். இவ்வாறான கற்றல் கற்பித்தலை விரிவுபடுத்தும் கருவிகளைத் தயாரித்து, பல்வேறு பயிற்சிகளில் மாணவரை ஈடுபடுத்துவதில் உங்களது கவனத்தைச் செலுத்துங்கள்.

இதனூடாகப், புதிய உலகிற்குப் பொருத்தமான தேர்ச்சிகளுடன் கூடிய மாணவர் பரம்பரையொன்றை உருவாக்கலாம். அதற்குப் பொருத்தமான ஆசிரியர் வகிபாகமும், வகுப்பறையும், புதிய கற்றல் கலாசாரத்திற்கேற்ப உருவாகவேண்டுமென எதிர் பார்க்கின்றேன்.

விமல் சியம்பலாகொட,
உதவிப் பணிப்பாளர் நாயகம்,
மொழிகள், மானுடவியல், சமூக விஞ்ஞான பீடம்
தேசிய கல்வி நிறுவகம்.

# அறிமுகம்

தேசிய கல்வி நிறுவகத்தினால் வழங்கப்பட்டுள்ள இந்த ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது மூன்று பகுதிகளைக் கொண்டது.
அவையாவன:

- விரிவான பாடத்திட்டம்
- செயற்பாடுகளின் தொடரகம்
- கற்றல் - கற்பித்தற் செயற்பாட்டை மேலும் விரிவுபடுத்துவதற்கான கருவிகள்

சைவநெறிப் பாடத்தைக் கற்பதன் மூலம் அடைய வேண்டுமென எதிர்பார்க்கப்படும் தேர்ச்சிகளை அடையும் வகையில், வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு வேண்டிய இறை நம்பிக்கை, சமய நம்பிக்கை, சமய ஒழுகலாறு, வழக்காறு, விழுமியங்கள், தத்துவங்கள், சமய சமூக நடைமுறைகள், இலக்கியம், கலாசாரம், செயன்முறை அனுபவம் என்பவற்றின் அடிப்படையில் தேர்ச்சிகளும் இதனை அடிப்படையாகக் கொண்டு ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியும் தயாரிக்கப்பட்டுள்ளன.

மாணவரினால் அபிவிருத்தி செய்யப்பட வேண்டிய தேர்ச்சி மட்டங்கள் தொடர்பான விடய உள்ளடக்கம் இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியில் குறிப்பிடப்பட்டிருத்தல் சிறப்பம்சமாகும். கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகளுக்கு உதவும் சாதனங்கள், தரவிருத்தி உள்ளீடுகள் கொடுக்கப்பட்டிருப்பதால், முன்கூட்டியே கேட்டு அவற்றை உரிய நேரத்திற்குப் பெற்றுக் கொள்வதற்கு இதன் மூலம் வாய்ப்புக் கிடைக்கின்றது.

பாடத்திட்டத்தின் மூலம் எதிர்பார்க்கப்படும் விளைவுகளை உறுதிசெய்து கொள்வதற்குரிய பெறுமதிமிக்க ஆலோசனைகள் பல, 'கணிப்பீடும் மதிப்பீடும்' என்ற பகுதியிலே உள்ளடக் கப்பட்டுள்ளன.'பாடசாலைக் கொள்கையும் வேலைத்திட்டமும்' என்ற பகுதியை பாடசாலைக் கல்வியோடு சார்ந்த அனைவரும் முறையாக வாசித்து விளங்க வேண்டியது அவசியமாகும். ஆசிரியர்களுக்குக் கற்றல் கற்பித்தற் செயற்பாடுகளை வழங்கும் போதும் (ஒப்படைக்கும் போதும்) ஆசிரியர் பணிகளை மேற்பார்வை செய்யும் போதும், உரியவாறு நேரத்தை ஒதுக்கிக் கொள்வதற்கும், பாடசாலை முகாமைத்துவத்தில் ஈடுபடுவோருக்குத் தேவையான விளக்கத்தை அளிக்கிறது.

ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியின் இரண்டாம் பகுதியிலே பாடத்திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்கு உரிய செயற்பாட்டுத் தொடரகம் அறிமுகம் செய்யப்பட்டுள்ளது. இச்செயற்பாடுகளை அவ்வாறே ஆசிரியர்கள் செயற்படுத்த வேண்டுமென எதிர்பார்க்கப் படவில்லை. தமது ஆக்கபூர்வமான ஆற்றல்களுக்கும் ஆய்வுச் சிந்தனைகளுக்கும் ஏற்ப, செயற்பாடுகளை ஏற்றவிதமாக ஒழுங்குபடுத்திக் கொள்வது ஆசிரியரிடமிருந்து எதிர் பார்க்கப்படுகின்றது. உதாரணமாக, நான்கு குழுக்களை அமைக்க வேண்டும் எனக் கூறியிருப்பினும், வகுப்பிலுள்ள மாணவர்களின் தொகைக்கேற்ப அதனை மாற்றிக் கொள்ளலாம். குழுச் செயற்பாடுகளுக்குச் சந்தர்ப்பத்தை அளிக்கும் விதமாக உரிய தீர்மானங்களை எடுக்கும் போது ஆசிரியர் சாதுரியமாக நடந்துகொள்ள வேண்டும். உரிய தேர்ச்சி மட்டத்தினை நிறைவு செய்யும் வகையில் செயற்பாடுகளுக்கு உரிய நேரம் வேறாக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் 40 நிமிடப் பாடவேளைக்கு அப்பாற் செல்ல நேரிடலாம். ஒவ்வொரு தேர்ச்சி மட்டத்தையும் நிறைவேற்றிக் கொள்வதற்குப் போதியளவு நேரம், அந்தந்தச் செயற்பாடுகளுக்குப் பெற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. அத்துடன் நேர

அட்டவணையில் வழங்கப்பட்டுள்ள தனிப் பாடவேளை, மற்றும் இரு பாடவேளைகளுக்கு ஏற்றவாறு இச்செயற்பாடுகளை, ஆசிரியர்கள் பகுதிகளாக வகுத்துக் கொள்ள வேண்டுமென ஆசிரியரிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. முதல் நாள் ஆரம்பித்த செயற்பாடொன்றை, மேலும் தொடர்ந்து மறுநாள் செய்யும்போது. முதன் நாள் நிறைவு செய்தவற்றை மீண்டும் அறிமுகஞ் செய்து, தொடரவேண்டும் என்பதும் உங்களிடம் எதிர்பார்க்கப்படுகிறது.

யாதேனும் ஒரு தேர்ச்சி மட்டத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கு வெவ்வேறான செயற்பாடுகளை அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதை நீங்கள் அறிவீர்கள். அதன்படி உத்தேச செயற்பாடானது அவ்வாறே நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என உங்களிடம் எதிர்பார்க்கப்படவில்லை. மிகவும் சிறந்த பிரவேசத்துடன் கூடிய ஆய்வுகளைக் கொண்ட கற்றல் - கற்பித்தற் செயற்பாட்டை விரிவுபடுத்தக் கூடிய வெவ்வேறு உபகரணங்களைப் பயன்படுத்தி, மேற்கொள்ளப்படும் சிறந்த கற்றல் ஒன்றையே நாம் உங்களிடம் எதிர்பார்க்கின்றோம். புதிய விடயங்களை அறிமுகப்படுத்தும் போது, உங்கள் வினைத்திறனையும், விளைதிறனையும் மேம்படுத்தும் நோக்கில் இவ்வழிகாட்டி நூலைத் தேசிய கல்வி நிறுவம் வழங்கியுள்ளது.

இந்த ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியின் மூன்றாம் பகுதியிலே கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகளை மேலும் அபிவிருத்தி செய்வதற்கு உதவும் உபகரணத் தொகுதிகள் (கருவிகள்) உள்ளடக்கப்பட்டுள்ளன. செயற்பாட்டுத் தொகுதி ஒன்றினை மையமாகக் கொண்டு வழங்கப்படும். இவ்வுபகரணங்கள், வகுப்பறைக்கு வெளியேயும், மாணவர்கள் தொடர்ச்சி யாகக் கற்பதற்குத் துணைபுரியும். இவ்வுபகரணங்களைப் பயன்படுத்தி, மாணவரின் கற்றலைப் பரிசீலனை செய்து, உரிய மீளவலியுறுத்தல்களை வழங்குவது உங்கள் பணியாகும்.

கற்றல் - கற்பித்தற் செயற்பாட்டின் வெற்றிக்கு மதிப்பீட்டு முறைகளில் பாரிய மாற்றங்கள் தேவைப்படுகின்றன. மாணவரின் சிந்திக்கும் ஆற்றல், சமூகத் திறன்கள், மற்றும் தனியாள் திறன்களை என்பவற்றை விருத்தி செய்யும் வகையில் பயனுள்ள கற்பித்தலில் ஈடுபடுவீர்கள் என்பது எமது நம்பிக்கையாகும்.

ஆலோசனையும் வழிகாட்டலும் : பேராசிரியர். ஜே. டபிள்யூ. விக்கிரமசிங்க
பணிப்பாளர் நாயகம், தேசிய கல்வி நிறுவகம்.

திரு. விமல் சியம்பலாகொட
உதவிப் பணிப்பாளர் நாயகம்
மொழிகள், மானுடவியல், சமூக விஞ்ஞானப் பிரிவு
தேசிய கல்வி நிறுவகம்.

பணிப்பு : கலாநிதி மாபுல்கொட சுமணரத்ன தேரர்
பணிப்பாளர், சமயக் கல்வித் துறை
தேசிய கல்வி நிறுவகம்.

: திரு. உ. நவரத்தினம்
பதிற் பணிப்பாளர், சமயக் கல்வித் துறை
தேசிய கல்வி நிறுவகம்.

இணைப்பாக்கம் : செல்வி. வ. விஜயலெட்சுமி
பிரதான செயற்திட்ட அதிகாரி, சமயக் கல்வித் துறை
தேசிய கல்வி நிறுவகம்.

விடய ஆலோசனை : பேராசிரியர். வை. கனகரத்தினம்
தமிழ்த் துறை
பேராதனைப் பல்கலைக்கழகம்.

எழுத்தாளர் குழு : செல்வி. வ. விஜயலெட்சுமி
பிரதான செயற்திட்ட அதிகாரி, சமயக் கல்வித் துறை
தேசிய கல்வி நிறுவகம்.

திரு. ந. ஞானவேல்
உருகுணை தேசிய கல்வியியற் கல்லூரி, காலி.

திரு.பொ.ஜெயரூபன்
ஆசிரியர், எக்பர்த் தமிழ் வித்தியாலயம்
இரத்தினபுரி.

திரு. ந. பத்மானந்தன்
ஆசிரியர், உடப்பு த.ம.வி.

திரு. தா. சண்முகதாஸ்
ஆசிரியர், வந்தாறுமூலை ம.ம.வி.

திரு. பெ. பேரின்பராசா
ஆசிரியர், செட்டிபாளையம் ம.வி.

பதிப்பு : செல்வி. வ. விஜயலெட்சுமி
பிரதான செயற்திட்ட அதிகாரி, சமயக் கல்வித் துறை
தேசிய கல்வி நிறுவகம்.

கணனி வடிவமைப்பு : செல்வி. கமலவேணி கந்தையா
தேசிய கல்வி நிறுவகம்.

அட்டைப்படம் : செல்வி. மு. சுஜனி

காரியாலய உதவி : திரு. பி.எச்.எஸ்.பி. டயஸ்
திரு. ஐ. ஜி. போஜித

# உள்ளடக்கம்

# பகுதி - 1

## பாடத்திட்டம்

## 11.1.1 அறிமுகம்

விஞ்ஞான விருத்தியும் பொருளாதார மாற்றமும் நிகழ்ந்து கொண்டிருக்கும் இக்கால கட்டத்தில், மாணவர்களின் வாழ்வில் குறுக்கிடும் பிரச்சினைகளுக்கும் சவால்களுக்கும் முகம் கொடுக்கத்தக்க ஆளுமையுள்ளவர்களாக்குவது கல்வியின் கடமையும் பொறுப்பு - மாகும். மாணவர்களை ஆளுமையுள்ளவர்களாக வளர்ப்பதில் சமயபாடம் முக்கிய பங்கினை வகிக்கிறது. சமயம் ஒரு வாழ்க்கை நெறி. மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்கான நெறிமுறைகளையும் பண்புகளையும் அது அமைத்துத் தருகின்றது.

மனித வாழ்வில், சமயம் வகிக்கின்ற முதன்மை நிலை உணரப்பட்டமையாலேயே சைவநெறி இலங்கையின் பாடசாலைக் கலைத்திட்டத்தில் ஒரு பாடமாக இடம்பெற்று வருகிறது. அத்துடன், 2007 ஆம் ஆண்டிலிருந்து நடைமுறைப்படுத்தப்பட்டுள்ள புதிய கலைத்திட்டத்தில் இப்பாடம், பிரதான பாடங்கள் ஐந்தினுள் ஒன்றாகவும் அங்கீகரிக்கப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

சைவநெறிப் பாடத்தினூடாக மாணவரின் அறிவு, திறன், மனப்பாங்கு மட்டுமன்றி, சமய அடிப்படையில் வையத்துள் வாழ்வாங்கு வாழும் திறனை விருத்தி செய்யக்கூடிய ஒழுக்கம், பண்பாடு, அறநெறிகள், ஆன்மீகப் பண்புகள், ஆளுமை பண்புகள் என்பனவும் விருத்தி செய்யப்பட வேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

2008 இலிருந்து நடைமுறைக்கு வரும் கலைத்திட்டமானது, நடைமுறை வாழ்வியலுக்குத் தேவையான அடிப்படைத் தேர்ச்சிகளை வழங்கி, மாணவர்களை நல்ல பிரஜைகளாக உருவாக்குவதற்கு சமயக் கல்வியை எவ்வாறு பயன்படுத்தலாம் என்பதைப் பிரதான நோக்காகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது.
அத்துடன்,

- இறைசிந்தனை
- சமய நம்பிக்கை
- சமய ஒழுகலாறுகளும் விழுமியங்களும்
- சமய இலக்கியங்களும் தத்துவங்களும்
- சமயமும் சமூக நடைமுறைகளும்
- சமயங்களின் மத்தியில் சமரசம்

என்னும் விடயங்களுக்கு முதன்மையளிக்கும் வகையில் இப்பாடத்திட்டம் வடிவமைக்கப் பட்டுள்ளது.

இப்பாடத்திட்டத்தில் மாணவர்கள் அடையவேண்டுமென எதிர்பார்க்கப்படும் தேர்ச்சிகள் வழங்கப்பட்டுள்ளன. அத்தகைய தேர்ச்சிகளை மாணவர்கள் பெற்றுக் கொள்ள ஆசிரியர்கள் தம்மாலான ஒத்துழைப்பை வழங்க முன்வர வேண்டும்.

## 11.1.2 பாடத்திட்டத்தின் நோக்கங்கள்

01. அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் வகையில் சமய ஒழுக லாறுகளை, இறை சிந்தையுடன் கடைப்பிடித்தல்.
02. சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றைக் கடைப்பிடித்தல்.
03. திருமுறைப் பாடல்களையும் பாசுரங்களையும் தோத்திரப் பாடல்களையும் பண்ணோ டும் பக்தியோடும் பாடுதல்.
04. ஆலயங்களில் சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுதல்.
05. இலங்கை, இந்திய சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவற்றை முன்மாதிரியாகக் கொள்ளல்.
06. சைவசித்தாந்தக் கோட்பாடுகளை விளங்கிக் கொள்ளல்.
07. நாட்டார் சமய வழக்காறுகளையும் வரலாறுகளையும் அறிந்து, அவற்றுக்கு மதிப்பளித்தல்.
08. ஈழத்துச் சைவமரபுகளைப் பேணிக்காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்தல்.
09. சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விளங்கி நடைமுறைப் படுத்துதல்.

## 11.1.3 தரம் 11 க்குரிய தேர்ச்சிகள்

1.0 அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் வகையில் சமய ஒழுக லாறுகளை இறை சிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.
2.0 சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றைக் கடைப்பிடிப்பர்.
3.0 திருமுறைப் பாடல்களையும் பாசுரங்களையும் தோத்திரப் பாடல்களையும் பண்ணோ டும் பக்தியோடும் பாடுவர்.
4.0 சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவர்.
5.0 சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.
6.0 சைவ தத்துவக் கோட்பாடுகளை விளங்கித் தெளிவு பெற்று, அவை தொடர்பான கருத்துக்களை வெளிப்படுத்துவர்.
7.0 நாட்டார் சமய வழிபாடுகளையும் வழக்காறுகளையும் அறிந்து, அவற்றுக்கு மதிப்பளிப்பர்.
8.0 ஈழத்துச் சைவ மரபுகளைப் பேணிக்காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.
9.0 சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விருத்தி செய்வர்.

## 11.1.4 பாடத்திட்டம்

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | உள்ளடக்கம் | பாடவேளை |
|---|---|---|---|
| 1.0 அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கத்தக்கதாக சமய ஒழுகலாறுகளை இறை சிந்தனையுடன் கடைப்பிடிப்பர். | 1.1 கடவுள் ஒருவரே உண்மையானவர் என்பதையும், எல்லாச் செயல்களுக்கும் அவரே எல்லாவற்றுக்கும் ஆதாரம் என்பதையும் ஏற்று சைவ சித்தாந்த நூல்கள் ஊடாக விளக்குவர். | • **கடவுள்**<br>- கடவுள் உண்மையைச் சைவ சித்தாந்த நூல்கள் ஊடாக விளக்குதல். | 14 |
| | 1.2 நற்பண்புகளை மேம்படுத்துவதற்காக நாளாந்தக் கடமைகளிலும், ஏனைய செயற்பாடுகளிலும் இறை சிந்தனையுடன் ஈடுபடுவர். | • **வீட்டில் சமயம்**<br>- வீட்டில் விசேட தினங்களில் பின்பற்றவேண்டிய நடைமுறைகள்.<br>• **பாடசாலையில் சமயம்**<br>- பாடசாலையில் கொண்டாடப்படும் சமய விழாக்கள், அவற்றின் முக்கியத்துவம்<br>• கோயிலும் சமயமும்<br>கோயில் வளர்ச்சியில் சமயமும், சமய வளர்ச்சியில் கோயிலும் ஒன்றுக்கொன்று உதவியாக அமைய வேண்டும் என்பதை விபரித்தல். | |
| | 1.3 வாழ்வின் பல்வேறு கட்டங்களிலும் சமய ஒழுகலாறுகளையும் வழக்காறுகளையும் பின்பற்றுவர். | • **சமய விழுமியங்கள்**<br>- சமய ஒழுகலாறுகளின் வழிநின்று, சமயியாக வாழ்தல்.<br>- நற்பிரஜையாக வாழ்தல்<br>- தானதருமம் செய்தல்<br>- தமக்கும் சமூகத்துக்கும் உதவியாக வாழ்தல்.<br>- அர்ப்பண சிந்தையுடன் ஈடுபடுதல்.<br>- மகிழ்வான மனநிலையைச் சகலருக்கும் ஏற்படுத்தல்.<br>- சமூக நோக்குடன் செயற்படுதல். | |
| | 1.4 வாழ்க்கை முன்னேற்றத்திற்காக வாழ்வியல் சடங்குகளையும், அவற்றின் முக்கியத்துவங்களையும் இனங்கண்டு, அவற்றுக்கு மதிப்பளிப்பர். | • திருமணச் சடங்கு<br>- பல்வேறு வகையான திருமணச் சடங்குகள்<br>- திருமணச் சடங்கின் முக்கிய அம்சங்கள்<br>- திருமணச் சடங்கின் சமூக நோக்கு | |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | உள்ளடக்கம் | பாடவேளை |
|---|---|---|---|
| | 1.5 விரதங்களின் சமய, சமூக முக்கியத்துவங்களை விளங்கி, விரதங்களை அனுட்டிப்பர். | • **விரதங்கள்**<br>- ஆடி அமாவாசை விரதம்<br>- சித்திரா பௌர்ணமி (சித்திரைப் பூரணை) | |
| | 1.6 வாழ்வியலில் பண்டிகைகள் உணர்த்தும் முக்கியத் துவத்தை அறிந்து கொண் டாடுவர். | • **பண்டிகைகள்**<br>• **தீபாவளி**<br>- கடவுள் வழிபாடு<br>- நன்றி மறவாமை<br>- கொடுத்துண்ணும் பண்பு<br>• **ஆடிப்பிறப்பு**<br>- கடவுள் வழிபாடு<br>- உணவைப் பகிர்ந்து உண்ணல். | |
| 2.0 சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து அவற்றைப் பின்பற்றுவர். | 2.1 நாயன்மாரின் கதைகளின் ஊடாக சமய நம்பிக்கையை இனங்கண்டு, தம் வாழ் விலும் பக்தியைக் கடைப் பிடிப்பர். | • சாக்கிய நாயனார் | 01 |
| 3.0 திருமுறைப் பாடல்களையும் பாசுரங்களை யும்,தோத்திரப் பாடல்களையும் பக்தியோடும் பண்ணோடும் பாடுவர். | 3.1 பாசுரங்களையும், தோத்திரப் பாடல்களைப் பக்தியோடும் இசையுடனும் பாடுவர். பிழையறப் பண்ணோடு பாடுதல்; பக்தியை வெளிப் படுத்தும் வகையில் பாடுதல் பொருள் கூறுதல், அருஞ் சொற்களை விளக்குதல், பொழிப்புரை எழுதுதல், சந்தர்ப்பம் கூறுதல். | • பாசுரங்கள்<br>- நாலாயிரத் திவ்விய பிரபந்தம் "குடதிசை முடியை வைத்து......"<br>• தோத்திரப் பாடல்கள்<br>1. அபிராமி அந்தாதி<br>(அ) "ஆத்தாளை எங்கள்......"<br>2. சகலகலாவல்லிமாலை<br>(அ) "பண்ணும் பரதமும்......"<br>3. கந்தபுராணம்<br>(அ) "அருவமும் உருவுமாகி......"<br>4. கந்தரனுபூதி<br>(அ) "உருவாய் அருவாய்......"<br>5. திருப்புகழ்<br>(அ) "பக்தியால் யானுன்னை......"<br>6. பராபரக்கண்ணி<br>(அ) "எவ்வுயிரு மென்னுயிர்......"<br>(ஆ) "வந்தித்து நின்னை......"<br>(இ) "கெட்டவழி யாணவப்......"<br>(ஈ) "மூர்த்தி தலந் தீர்த்தம்......"<br>(உ) "சிந்தித்த வெல்லாம்......" | 16 |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | உள்ளடக்கம் | பாடவேளை |
|---|---|---|---|
| | 3.2 சமய இலக்கியங்களில் (பன்னிரு திருமுறைகள்) இடம் பெறும் புராண இதி - காசக் கதைகள், தத்துவங் கள், நாட்டார் வழக்காறு கள் முதலியவற்றை இனங் கண்டு அவை பற்றித் தொகுத்தும் வகுத்தும் விபரிப்பர். | • புராண இதிகாசக் கதைகள்<br>• தத்துவங்கள்<br>• நாட்டார் வழக்காறுகள் | |
| | 3.3 கந்தபுராணத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட பாடல் களை அடிப்படையாகக் கொண்டு, சமய உணர்வு களை விருத்தி செய்வர். | • சமய இலக்கியம் (கந்தபுராணம் - திருப்பெருவடிவம்)<br>• கதைச்சுருக்கம்<br>• அறப்பண்புகள், தத்துவக் கருத்துக்கள்<br>• இரசனை உணர்வு<br>• புராண படனம் | |
| 4.0 சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவதன் அவசியத்தை முன்வைப்பர். | 4.1 ஆலயம், தலயாத்திரை என்பவற்றுக்கு இடையிலான தொடர்பினை விபரிப்பர். | • தல யாத்திரை<br>• பக்தியுடன் மேற்கொள்ளல். | 01 |
| 5.0 சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவற்றை முன்மாதிரி யாகக் கொண்டு ஒழுகுவர். | 5.1 நாயன்மார் (நால்வர்) பணிகளை அறிந்து, அவற்றை விபரிப்பர். அவர் களுக்கு மதிப்பளித்து அவர்கள் வழி ஒழுகுவர். | • நாயன்மார் நால்வரதும் சமய, சமூகப் பணிகள்<br>• சமயத்துக்கும் சமூகத் துக்கும் இடர்வரும் போது, நாயன்மார்கள் காட்டிய வழியில், அதனைப் பாதுகாக்க முன்வருதல். | 08 |
| | 5.2 சந்தான குரவர்களையும் அவர்களது பணிகளையும் விளக்குவர். | • சந்தான குரவர்களும் அவர்களது பணிகளும்<br>• சந்தான குரவர்கள் சமயத்துக்கு ஆற்றிய பணிகளை இனங்கண்டு விளக்குதல். | |
| | 5.3 சித்தர்களது ஆன்மீக ஞானம் பற்றிய விளக்கத்தைக் கூறுவர். | • ஈழத்துச் சித்தர்கள்<br>• பொது அறிமுகம்<br>(5 சித்தர்களின் வரலாறு)<br>1. யோகர் சுவாமிகள்<br>2. பெரியானைக்குட்டிச் சுவாமிகள்<br>3. சித்தானைக்குட்டிச் சுவாமிகள்<br>4. நவநாதச்சித்தர்<br>5. முத்துலிங்க சுவாமிகள் | |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | உள்ளடக்கம் | பாடவேளை |
|---|---|---|---|
| | 5.4 சமயம் வளர்த்த பெரியார் களது சாதனைகளை வெளிப்படுத்துவர். | • குமரகுருபரரின் சமயப்பணி | |
| | 5.5 இலங்கையில் சமய, சமூக, கல்விப் பாரம்பரியத்தை வளர்த்த பெரியார்களையும் அவர்களது பணிகளையும் அறிந்து, அவர்களுக்கு மதிப்பளிப்பர். | • ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்<br>• அவர்களின் சமய, சமூக, கல்விப் பணிகள் | |
| 6.0 சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளங்கி, வெளிப் படுத்துவர். | 6.1 சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்ளும் முப்பொருள் உண்மைகளையும் அதன் இயல்புகளையும், நூலா தாரங்களுடன் விளக்குவர். | • முப்பொருள் விளக்கம் (சிவஞானபோதம், சிவப் பிரகாசம், சிவஞான சித்தியார், திருவருட்பயன் முதலான நூல்களின் ஊடாக)<br>• பதியின் இயல்பை விபரித்தல்.<br>• பசுவின் தன்மைகளை எடுத்துக்கூறல்.<br>• பசுவுக்கும், பதிக்கும் இடையிலான தொடர்பை இனங்காணல்.<br>• பாசம், பாசத்தின் இயல்பு பற்றி விளக்கல்.<br>• பாசத்திற்கும், பசுவிற் கும் இடையிலான தொடர்பை விளக்குதல்.<br>• பாசத்திலிருந்து விடுபடும் மார்க்கங் களைக் கூறல். | 04 |
| | 6.2 ஆன்மீக விடுதலை நோக் காகக் கொண்டு அதற்கான செயற்பாடுகளில் ஈடுபடுவர். | • தீட்சை<br>• சைவ நாற்பாதங்கள் | |
| 7.0 நாட்டார் சமய வழிபாடுகளை யும், வழக்காறு களையும் அறிந்து, அவற்றுக்கு மதிப்பளிப்பர். | 7.1 நாட்டார் தெய்வங்கள், அவற்றின் வகைகள் பற்றி விளக்குவர். | • வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயம்<br>• காரைதீவுக் கண்ணகை அம்மன் ஆலயம் | 04 |
| | 7.2 நாட்டார் தெய்வ வழிபாட் டில் சடங்கை ஆற்றுப் படுத்துவோர் பற்றிய விளக்கத்தைப் பெறுவர். | • நாட்டார் தெய்வ வழிபாட் டில் சடங்கு முறை<br>• கட்டாடியார், கப்புகனார், பூசாரியார் பற்றிய விளக்கம். | |
| | 7.3 நாட்டார் தெய்வ வழிபாட் டிற்கும் சமூகத்திற்குமிடை யிலான தொடர்பினை இனங்காண்பர். | • நாட்டார் தெய்வ வழிபாடும் சமூகமும் | |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | உள்ளடக்கம் | பாடவேளை |
|---|---|---|---|
| 8.0 ஈழத்துச் சைவ மரபினை பேணிக்காக்க வேண்டும் என்னும் மனப் பாங்கினை விருத்தி செய்வர். | 8.1 ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்ப வற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர். | • இலங்கையில் சைவ சமய வளர்ச்சி<br>• பௌத்தத்துக்கு முந்திய காலத்தில் சைவம்<br>• அனுராதபுரக் காலத்தில் சைவம்<br>• பொலனறுவைக் காலத்தில் சைவம்<br>• கோட்டை, கண்டி இராச்சியத்தில் சைவம்<br>• யாழ்ப்பாண இராச்சியத்தில் சைவம்<br>• போர்த்துக்கேயர் - ஒல்லாந்தர் காலத்தில் சைவம்<br>• 19 ஆம் நூற்றாண் டில் சைவம் (ஆங்கிலேயர் காலம்)<br>• 20 ஆம் நூற்றாண் டில் சைவம்<br>• பௌத்த சைவ உறவு | 16 |
| | 8.2 ஈழத்துச் சைவ ஆலயங் களையும் அவற்றின் சிறப்பம்சங்களையும் விபரிப்பர். | • ஆலய வகைகளையும் அவற்றின் பல்வேறு அம்சங்களையும் பகுத்து ஆராய்வர்; அவை பற்றி விபரிப்பர்.<br>• விநாயகர் ஆலயம்<br>• மாமாங்கப்பிள்ளை யார் ஆலயம்<br>• சிவாலயங்கள்<br>• திருக்கேதீச்சரம்<br>• திருக்கோணேச்சரம்<br>• பொன்னம்பல வாணேச்சரம்<br>• முருகன் ஆலயங்கள்<br>• திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயம்<br>• மாவிட்டபுரம் கந்த சுவாமி ஆலயம் | |
| | 8.3 ஈழத்துச் சைவப் பிரபந்தங் களின் வகைகளை இனங் கண்டு விளக்கம் பெறுவர். | • ஈழத்துச் சைவ இலக்கிய மரபுகளில் சமயக் கருத் துக்களை இனங்காணல்.<br>• ஈழத்துச் சைவ மரபுகள்<br>• கண்ணகி வழக்குரை காதை<br>• பிள்ளையார் கதை | |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | உள்ளடக்கம் | பாடவேளை |
|---|---|---|---|
| | 8.4 ஈழத்துச் சமய நிறுவனங்களையும் அவற்றின் பணிகளையும் பகுப்பாய்வு செய்வர். | • இராம கிருஷ்ண மிஷன்<br>• சைவ பரிபாலன சபை | |
| 9.0 சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விருத்தி செய்வதற்கான முயற்சிகளில் ஈடுபடுவர். | | • சமய வாழ்க்கையும் சூழலும்<br>• நீர் நிலைகளைப் பாதுகாப்பர்.<br>• தண்ணீர்த்தொட்டி, தண்ணீர்ப்பந்தல் அமைத்தல்.<br>• தல விருட்சம் வைத்தல்.<br>• நந்தவனம் அமைத்தல்<br>• அன்னசத்திரம், தங்குமிடம் அமைத்தல்<br>• ஆலய வீதிகளில் சுத்தம் பேணல்<br>• ஆலயச் சூழலில் சமூக ஒருமைப்பாடு பேணல். | 01 |

## 11.1.5 கற்றல் - கற்பித்தல் முறை

கற்றல் என்பது வாழ்க்கைக்குத் தேவையான அறிவு, அனுபவங்களைப் பெற்றுக் கொள்வதாகும். கல்விச் செயலொழுங்கின் மூலம் எதிர்பார்க்கப்படும் மாணவர்களது அடைவு மட்டம், பயனுறுதிமிக்க கற்றல் - கற்பித்தலிலேயே தங்கியுள்ளது. பயனுறுதிமிக்க கற்றல் - கற்பித்தல் முறையினைத் தீர்மானிக்கையில் கட்டுருவாக்கவியல் சிந்தனையில் உருவான 5E மாதிரி மிகச் சிறப்பான ஓர் அம்சமாகும். புதிய கருத்துக்கள், விடயங்கள் போன்றவை பற்றித் தாமாக விளங்கிக் கொள்ளும் ஆற்றலை, மாணவர்களிடம் கட்டி எழுப்புவதே இதன் பிரதான அடிப்படை நோக்கமாகும்.

மாணவர்களது வாழ்வியலுக்குத் தேவையான ஆக்கத் திறன், கற்பனைத் திறன், தொடர்பாடல் திறன், சமூகத் திறன் முதலானவற்றையும் ஒழுக்கம், விழுமியம், ஆன்மிகம் சார்ந்த பண்புகளையும் விருத்தி செய்யக்கூடிய ஒரு கற்றல் முறையாகவும் இது அமைந்துள்ளது. குறிப்பாக மாணவரது அறிவு, திறன், மனப்பாங்கு என்பவற்றினூடாக மாணவர் நடத்தையில் ஏற்படுகின்ற தெளிவானதும், நிலையானதுமான மாற்றமொன்றை இலக்காகக் கொண்டு தேர்ச்சிகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. சமயபாடத்தைப் பொறுத்தவரை முக்கியமாக எதிர்பார்ப்பது, நடத்தை மாற்றமேயாகும். அதனை ஏற்படுத்த ஓர் இலகு வழியாக தேர்ச்சிமையக் கற்றல் - கற்பித்தல் அணுகுமுறை அமைந்துள்ளது. தேர்ச்சி மையக் கல்வியில் ஆசிரியரது வகிபாகம் தெளிவானதொரு மாற்றத்தை வேண்டி நிற்கின்றது. தாம் பெற்றிருக்கும் அறிவை மாணவர்களுக்கு அப்படியே ஒப்புவிப்பதன் மூலம் அறிவை இடமாற்றம் செய்பவராக விளங்கிய ஆசிரியரின் ஆதிக்கம் மாற்றப்பட வேண்டியதொன்றாகும். தேர்ச்சியை மையமாகக் கொண்டமைக்கப்பட்ட சைவநெறி பாடத்திட்டத்தில், சமயம்சார் செயன்முறை அனுபவங்கள் உள்ளடக்கப்பட்டிருப்பதால், இங்கு மாணவரின் செயற்பாடு, பங்குபற்றல் என்பவற்றுக்கு அதிக இடம் வழங்கப்பட்டுள்ளது. பாடத்திட்டத்தினூடாக மாணவர் அடைய வேண்டுமென எதிர்பார்க்கின்ற குறைந்தபட்ச அடைவுமட்டத்தையேனும் அடையச் செய்வதற்கு உதவி செய்ய வேண்டியது ஆசிரியரின் கடமையாகும். அத்துடன் மாணவரைச் சரியாக இனங்கண்டு, கற்றலுக்குத் தேவையான முறையான உபகரணங்களினூடாக அவர்களது அடைவுமட்டத்தை எய்துவதற்கு வழி காண்பது ஆசிரியரது கடமையாகும்.

கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டின் ஆரம்பத்திலேயே மாணவரிடம் விருப்பு, எதிர்பார்ப்பு என்பவற்றை ஏற்படுத்த வேண்டும். இங்கு விருத்தி செய்துகொள்ள வேண்டிய அடிப்படைத் தேர்ச்சிகளுடன் தொடர்புடைய முன்னறிவு நினைவு கூரப்படுவது அவசியமாகும். இதற்குப் பல்வேறு உத்திகளைக் கையாளலாம். வினாக்களைக் கேட்டல், படங்களைக் காட்சிப்படுத்தல், புதினத்தாள் செய்திப் பிரசுரங்களை முன்வைத்தல், அட்டைகளைக் காட்சிப்படுத்தல், திருமுறைப்பாடல் என்பவற்றைப் பாடச் செய்தல், போலச் செய்தல், பாடல்கள், ஒளி ஒலி நாடாக்கள் என்பவற்றைப் பயன்படுத்தல், செய்துகாட்டல் முதலானவை அவற்றுட் சிலவாகும்.

சைவநெறி வாழ்வியலுடன் தொடர்புடைய ஒரு பாடமாகும். அதனால், கற்றல் - கற்பித்தற் செயற்பாட்டின் ஊடாக மாணவரிடம் நடத்தை மாற்றத்தை ஏற்படுத்துவதில் ஆசிரியரின் வகிபங்கு முக்கிய இடத்தைப் பெறுகின்றது. ஆதலால், ஆசிரியர் கற்றல் - கற்பித்தற் செயற்பாட்டை நடத்துவதற்காகத் திறந்த உள்ளத்துடனும் போதிய திட்டமிடலுடனும் ஆயத்தமாக வரவேண்டும். இங்கு மாதிரிகள் மட்டுமே தரப்பட்டுள்ளன. தமது தற்றுணிவுக்கேற்ப மாதிரிகளை மாற்றியமைத்துக் கொள்வதற்கு ஆசிரியர் உரிமையுடையோராவர்.

## 11.1.6 பாடசாலைக் கொள்கையும் வேலைத்திட்டமும்

- சைவசமயக் கல்வி கற்றல் - கற்பித்தல் தொடர்பாக பாடசாலையிலும் அயலிலும் கிடைக்கின்ற பௌதிக வளங்களையும் மனித வளங்களையும் மிக உச்ச அளவில் பயன்படுத்துவதற்கு ஒவ்வொரு பாடசாலையும் திட்டமிட்டுச் செயற்படுத்துவது அவசிய மாகும்.
- சைவ சமய வணக்கம், வழிபாட்டு முறைகளுக்கும், சமயம் சார்ந்த நடவடிக்கை களுக்குமென பாடசாலைக் கொள்கை இருத்தல் வேண்டும்.
- சைவசமயக் கல்வியின் அவசியத்தை, தகுந்த ஆதாரங்களுடன் பாடசாலை அபிவிருத்திச் சங்க உறுப்பினர்களுக்கும் எடுத்துக் கூறுவதன் மூலம் அவர்களின் உதவிகளையும் பெற்று கற்றலை வெற்றிகரமாக நிறைவு செய்யலாம்.
- சைவசமயத்தைக் கற்பிப்பதற்கு, பாடசாலையில் வளப்பற்றாக்குறை ஏற்பட்டால் அதனை நிவர்த்தி செய்வதற்குப் பெற்றோர், நலன்விரும்பிகள், பழைய மாணவர், சமய நிறுவனங்கள் போன்றவற்றின் ஒத்துழைப்புகளைப் பெறலாம்.

மேற்படி கொள்கைகளை நடைமுறைப்படுத்துவதற்கும், ஆற்றல் மிக்கோரை உருவாக்கு வதற்கும், சமயக் கல்வியையும் அதன் பாரம்பரியத்தை வளர்த்தெடுப்பதற்கும் பொருத்தமான பின்னணி பாடசாலைகளில் உருவாக்கத்தக்க வகையில் பாடசாலைக் கொள்கை இயைவுபடுத்தப்படுதல் அவசியமாகும்.

சைவநெறிப் பாடத்தினூடாக, புதிய ஆக்கபூர்வமான சிந்தனையின்பால் வழிப்படுத்தப்படும் மாணவரின் அறிவு, திறன், மனப்பாங்கு என்பவற்றை விருத்தி செய்யும் வகையில் பாடசாலை வேலைத்திட்டத்தை அமைத்துக்கொள்ளல் பொருத்தமுடையதாகும். இப்புதிய பாடத்திட்டத்தை பாடசாலையில் நடைமுறைப்படுத்தும் பொழுது சைவசமய பாரம்பரியங்களைப் பின்பற்றும் வகையில் பின்வரும் நிகழ்ச்சிகளையும் ஒழுங்கமைக்கலாம்.

- பாடசாலையில் தினசரிப் பிரார்த்தனைகள், வெள்ளிக்கிழமைப் பிரார்த்தனை என்ப வற்றுக்கு ஏற்ற வசதிகள் அளித்தல், மாணவர் அனைவரும் கலந்து கொள்ள வழி வகை செய்தல்
- ஆசிரியர்கள், மாணவர்கள் நற்சிந்தனை கூற இடமளித்தல்
- முடியுமானவிடத்து, வகுப்பறையில் சுவாமிப் படங்களை வைத்து வழிபட ஊக்குவித்தல்
- பாடசாலைக்கு அண்மையிலுள்ள ஆலயங்களுக்குச் செல்ல வழிப்படுத்தல்
- சமய தீட்சை வழங்கல்
- குருபூசை, பாடசாலைச் சமய விழா என்பவற்றினை ஒழுங்கு செய்தல்
- சமய அறிஞர்களின் சொற்பொழிவுகளைக் கேட்க ஒழுங்கு செய்து கொடுத்தல்
- மாணவரின் ஒத்துழைப்புடன் கூட்டாகச் செயற்படக்கூடிய சைவசமய மன்றங்களை அமைத்து நடத்தல்
- சமயப்பேச்சு, பண்ணிசை, நாடகப்போட்டிகளை ஒழுங்கு செய்தல்
- சமயம் தொடர்பான கல்விக் கண்காட்சிகளை வகுப்பறைகளிலும் பாடசாலையிலும் நடத்த ஒழுங்கு செய்தல்
- பாடவிடயம் தொடர்பான முக்கிய இடங்களுக்கு வெளிக்களச் சுற்றுலாக்களையும் சமயச் சுற்றுலாக்களையும் திட்டமிட்டு, சரியாக நிறைவேற்றுதல்
- ஒப்படைகள், செயற்றிட்டங்கள், புத்தாக்கம் போன்றவற்றில் ஈடுபட மாணவரை ஊக்குவித்தல்
- வெவ்வேறு தலைப்புகளில் திட்டமிடப்பட்ட விவாதங்கள், உரையாடல்கள் முதலான வற்றை நடத்துதல்
- சமயக் கருத்தரங்குகள், சமய விழாக்களில் பங்குகொள்ள ஊக்குவித்தல்

மேற்கூறியவற்றினூடாக மாணவரின் பல்வேறு திறன்களும், மனப்பாங்குகளும் விருத்தி யடையக் கூடிய வகையில் செயற்பாடுகளை வழங்கலாம்.

மேற்படி பணிகளை வெற்றிகரமானதாக்கிக் கொள்வதற்கு அதிபர் உட்பட ஆசிரியர்களதும் மாணவர்களதும் ஆர்வமிக்க பங்களிப்பு இன்றியமையாததாகும். இப்பாடத்தைப் பாடசாலையில் நடைமுறைப்படுத்துவதற்காக அர்ப்பணிப்புடன் செயற்படும் ஆசிரியர்களுக்குத் தேவையான வசதிகளையும் ஒத்துழைப்பையும் வழங்க அதிபர் தயங்கலாகாது. மேற்படி செயற்பாடுகளை ஒழுங்குசெய்வதற்காக மரபுரீதியான பாடசாலைக் கொள்கைகள், வேலைத்திட்டங்களிலிருந்து சற்று விலகி, பாடசாலைக்கெனச் சிறப்பான கொள்கையையும் வேலைத்திட்டத்தையும் வகுத்துக் கொள்ளல் வேண்டும். அதனை வெற்றிகரமானதாக்கிக் கொள்வதற்காக, பாடசாலையுடன் தொடர்புடைய சமுதாயத்தினரின் ஈடுபாட்டையும் வளவாளர்கள் மற்றும் நிறுவனங்களின் உதவியையும் பெற்றுக்கொள்ளலாம். மேலும், செயற்பாடுகளை வெற்றிகரமாக நடத்திச் செல்வதற்காக, தகைமை வாய்ந்த பயிற்சி பெற்ற ஆசிரியரை ஈடுபடுத்தலும் பயனுறுதி மிக்க நேரமுகாமையும் மிக முக்கியமானவையாகும்.

பாடசாலைகளில் இக்கலைத்திட்டத்தை மேற்குறிப்பிட்டவாறு நடைமுறைப்படுத்துவதனால், அடுத்த தசாப்தத்தில் எமது நாட்டின் அபிவிருத்திக்குத் தேவையான தேர்ச்சிகளைக் கொண்ட புத்தாக்கம் புரிவோரையும் மனிதப் பண்புள்ளவர்களையும் குறைவின்றி உருவாக்கலாம் என்பதில் ஐயமில்லை.

### 11.1.7 கணிப்பீடும் மதிப்பீடும்

கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினூடாக, மாணவர் அடைய வேண்டும் என எதிர்பார்க்கப்படும் தேர்ச்சிகளை அடைந்துள்ளனரா என்பதை அறிவதற்கு ஏற்ற இலகுவான வழிமுறைகளாக கணிப்பீடும் மதிப்பீடும் அமைந்துள்ளன.

மாணவரின் நடத்தைசார் பண்புகள், சமய வழிபாடுகளில் அவர்கள் கொண்டுள்ள அக்கறை, சமய, சமூக செயற்பாடுகளில் காட்டும் ஆர்வமும் ஈடுபாடும், இணைப்பாடவிதானச் செயற்பாடுகளின் போது வெளிக்காட்டும் தன்மை, பங்கேற்கும் தன்மை என்பன கணிப்பீடு செய்யப்பட வேண்டும். இவற்றை முறை சார்ந்த, முறை சாராத வழிகளில் வகுப்பறைக்கு உள்ளேயும், வெளியேயும் கணிப்பீடு செய்ய முடியும்.

மதிப்பீட்டினைப் பல வழிகளில் மேற்கொள்ள முடியும். பாடம் தொடர்பான மதிப்பீடு பாட அலகின் கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகளின் போது, வாய்மொழிப் பரீட்சை, எழுத்துப் பரீட்சை, செயற்றிட்டம் போன்ற செயற்பாடுகளினூடாக மேற்கொள்ள முடியும். தவிர, தவணை இறுதியில் ஒப்படை, செயற்றிட்டங்களை வழங்குதல் என்பவற்றினூடாகவும் மதிப்பீட்டினை மேற்கொள்ள முடியும்.

மேலும், திருமுறைகள் தோத்திரப் பாடல்கள் பாடும்போது, மாணவர் பிழையற மனனம் செய்து, உச்சரிப்புத் தெளிவு, பண், இசை என்பவற்றுடன் சரியான நிலையில் நின்று பாடுகிறார்களா என்பதையும் கணிப்பீடு செய்ய வேண்டும். அவ்வாறே, ஆலய வழிபாடு, அங்கு செய்யப்படும் வணக்க முறைகளையும் தெய்வங்களை வழிபடும் ஒழுங்கு முறை களையும் அவதானிக்க வேண்டும். இவற்றுக்கு ஏற்ற மாதிரி மதிப்பீட்டுக் கருவிகளை முன்கூட்டியே தயாரித்துக் கொள்ள வேண்டும்.

# பகுதி - 2

## செயற்பாடுகளின் தொடரகம்

11.2.1 கற்றல் - கற்பித்தல் முறை - விளக்கம்

11.2.2 தரவிருத்தி உள்ளீடுகள்

11.2.3 செயற்பாட்டுத் தொடரகம்

## 11.2.1 கற்றல் - கற்பித்தல் முறை

இக்கற்கைநெறிக்குரிய கற்றல் - கற்பித்தல் முறையினைத் தீர்மானிக்கையில், தேடி ஆய்வு செய்தலை அடிப்படையாகக் கொண்டு, மாணவரது தேர்ச்சிகளை உருவாக்கத்தக்க வகையில் கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகளைத் திட்டமிடுவது குறித்துக் கவனஞ் செலுத்தப்பட்டுள்ளது. இவ்வாறாகத் தேர்ச்சிசார் கல்விக்காக ஆயத்தமாகும் போது, ஆசிரியரது வகிபாகத்திலும் தெளிவான மாற்றம் எதிர்பார்க்கப்படுகின்றது.

பண்டைக் காலந்தொட்டு பரவலாக நடைமுறையில் இருந்த மரபு வழியான கடத்தல் வகிபாகம் (Transmission Role), பிற்காலத்தில் அறிமுகஞ் செய்யப்பட்ட கொடுக்கல் வாங்கல் வகிபாகம் (Transaction Role) என்பன எமது வகுப்பறைகளில் தற்போதும் நடைமுறையில் உள்ளன. பாடசாலையை விட்டுச் செல்லும் பிள்ளைகளின் கற்பனைத் திறன்கள், தனிப்பட்ட திறன்கள், சமூகத் திறன்கள் எல்லாம் நலிந்த (குறைந்த) நிலையில், கற்றல் - கற்பித்தல் முறையினை அபிவிருத்தி செய்ய வேண்டியதன் அவசியத்தையும் அதனை எவ்வாறு செய்வது என்பதையும் இனங்காணல் கடினமாகவுள்ளது.

கடத்தல் வகிபாகத்தில், தாம் கற்க வேண்டிய அனைத்தையும் அறிந்தவர் ஆசிரியரே என மாணவர் ஏற்றுக் கொள்வர். மாணவருக்கு எதுவுமே தெரியாது எனக் கருதும் ஆசிரியர் தமது அறிவை மாணவருக்கு கடத்துபவராகச் செயற்படுகின்றார். ஆசிரியரிடத்தில் இருந்து மாணவருக்கு அறிவு கடத்தப்படுதல் மாத்திரம் இடம்பெறும். இவ்வகிபாகம் விரிவுரை போன்றதாகவே அமையும். இக்கற்றல் - கற்பித்தற் செயன்முறை மாணவரது சிந்தனையை - கற்பனையைத் தட்டியெழுப்புவதிலோ அவர்களது ஆளுமை மற்றும் சமூகத்திறன்களை விருத்தி செய்வதிலோ கணிசமான பங்களிப்பைச் செய்வதில்லை.

ஆசிரியர் வகுப்பறையில் நடத்தும் கலந்துரையாடல், கொடுக்கல் - வாங்கல் வகிபாகத்தின் தொடக்கமாகும். ஆசிரியருக்கும் மாணவருக்கும், பின்னர் மாணவருக்கும் ஆசிரியருக்கும் இடையிலான கருத்துப் பரிமாற்றமும், அதனைத் தொடர்ந்து, மாணவருக்கும் மாணவருக்கும் இடையில் உருவாகும் இடைத்தொடர்புகளும் படிப்படியாக ஓர் உரையாடலாக மாற்றம் பெறும். அறிந்தவற்றில் இருந்து அறியாதவற்றுக்கும், எளிமையானவற்றில் இருந்து சிக்கலானவற்றுக்கும் காட்சி (தூல) நிலையில் இருந்து கருத்து நிலைக்கும் மாணவரை இட்டுச் செல்வதற்காக ஆசிரியர் தொடர்ந்து வினாக்களை விடுப்பார்.

தேர்ச்சியடிப்படைக் கல்வியில் மாணவரது பணிகள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. வகுப்பில் ஒவ்வொரு மாணவரும் குறிப்பிட்ட தேர்ச்சியில் குறைந்தபட்சம் பாண்டித்திய மட்டத்தையோ அதற்கு அண்மிய மட்டத்தையோ அடையத்தக்க வகையில் தலையிடும் வளவாளராக (Resource Person) ஆசிரியர் செயற்படுவார். கற்றலுக்குத் தேவையான உபகரணங்களையும் ஏனைய வசதிகளையும் சூழலையும் உருவாக்கி மாணவரது இயலுமைகளையும் இயலாமைகளையும் இனங்காணல். தேவையான முன்னூட்டலும் பின்னூட்டலும் வழங்கி மாணவரது கற்றலை மேம்படுத்தல், வகுப்பறைக்கு அப்பாலும் கற்றல் - கற்பித்தலை இட்டுச் செல்வதற்காக, பொருத்தமான உபகரணங்களைத் தயார்ப்படுத்தல் போன்றவை எல்லாம் ஆசிரியரால் ஆற்றப்பட வேண்டிய அடிப்படைப் பணிகளாகும். மேற்போன்றவாறான பணிகளை உள்ளடக்கிய ஆசிரியர் வகிபாகமே நிலைமாற்ற வகிபாகம் (Transformation Role) எனப்படுகின்றது.

இதன் முதலாம் பகுதியில் பாடத்திட்டம் அறிமுகஞ் செய்யப்பட்டுள்ளது. இப்பாடத்திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்காகப் பயன்படுத்தத்தக்க செயற்பாட்டுத் தொடர் இரண்டாம் பகுதியில் அடக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு செயற்பாடும் குறைந்தபட்சம் மூன்று படிமுறைகளில் அடங்கும் வகையில் தயாரிக்கப்பட்டுள்ளது. மாணவரைக் கற்றலின்பால் ஈர்ப்பதே செயற்பாட்டின் முதலாவது படிமுறையாகும் இதனால் இப்படிமுறை தொடர்புறுத்தும் படிமுறை (Engagement step) எனப்படுகிறது. இதன் தொடக்கத்தில் ஆசிரியர் கொடுக்கல் வாங்கல் வகிபாகத்தின் பண்புகளை வெளிக்காட்டியவாறு மாணவருடன் உரையாடுவர். இது பின்னர் விருத்தி செய்துகொள்ள வேண்டிய அடிப்படைத் தேர்ச்சிகளுடன் தொடர்புடைய முன்னறிவு நினைவு கூரப்படும். மேலும், செயற்பாடுகள் குறித்த கோடிகாட்டல்களும்(ஊகங்கள்) வழங்கப்படும். இவ்வாறான கருத்துப் பரிமாற்றத்துக்காக ஆசிரியர் பல்வேறு உத்திகளைக் கையாளலாம். வினாக்கள் கேட்டல், படங்களைக் காட்சிப்படுத்தல், புதினத்தாள் நறுக்குகளை முன்வைத்தல், காட்டி மறைக்கும் அட்டைகளைக் (Flash cards) காட்டுதல் போன்ற தூண்டல் முறைகளைக் கையாளுதல், பிரச்சினைகள், புதிர்கள், விடய ஆய்வு (Case study) போன்றவற்றை முன்வைத்தல், உரையாடல், போலச் செய்தல், படம், செய்துகாட்டல் (Demonstration) போன்றவற்றை முன்வைத்தல், ஒலி நாடாக்கள், ஒலி - ஒளி நாடாக்கள் போன்றவற்றைப் பயன்படுத்தல் போன்ற பல்வேறு உத்திகளை இதற்காக ஆசிரியர் பயன்படுத்தலாம். சுருக்கமாகக் கூறுவதாயின், பின்வரும் மூன்று நோக்கங்களையும் அடைவதைக் கருத்திற் கொண்டே செயற்பாட்டின் முதலாவது படிமுறை நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

- வகுப்பின் கவனத்தைக் கவர்ந்து ஈர்த்தல்.
- தேவையான முன்னறிவை நினைவு கூருவதற்கு மாணவர்களுக்கு வாய்ப்பளித்தல்.
- செயற்பாட்டின் இரண்டாம் படிமுறையின் போது மாணவரை ஈடுபடுத்த எதிர்பார்க்கும் தேடியாய்வின் அடிப்படை அம்சங்களை அம்மாணவர்க்கு அறிமுகஞ் செய்தல்

மாணவருக்கு கண்டறியும் வாய்ப்பை வழங்குவதற்காகவே செயற்பாட்டின் இரண்டாம் படிமுறை திட்டமிடப்பட்டுள்ளது. கண்டறிதலுக்கென விசேடமாகத் தயாரிக்கப்பட்ட அறிவுறுத்தற் படிவத்தை அடிப்படையாகக் கொண்டே மாணவர் கண்டறிகையில் ஈடுபடுவர். பிரச்சினையின் வெவ்வேறு அம்சங்களைக் குழுநிலையில் கண்டறிந்து ஒத்துழைத்துக் கற்கத்தக்க வகையில் இக்கண்டறிகையை (Expoloration)ஆசிரியர் திட்டமிடல் வேண்டும். தரப்பட்டுள்ள மூல வளங்களைப் பயன்படுத்தி விழிப்புணர்வுடன் குழுக் கலந்துரையாடலை நடத்தியவாறு மாணவர்கள் கண்டறிகையில் ஈடுபடுவதே இப்படிமுறையின் சிறப்பியல்பாகும். தொடர்ந்தும் இவ்வாறான குழுச் செயற்பாடுகளில் ஈடுபடுவதனால் தன்னடக்கம், ஏனையோரின் கருத்துக்களுக்குச் செவிமடுத்தல், ஏனையோருடன் ஒற்றுமையாகச் செயற்படல், ஏனையோருக்கு உதவி புரிதல், நேர முகாமை, உயரிய தரமுடைய உற்பத்திகளைப் பெறல், நேர்மை போன்ற அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான முக்கியமான பல தேர்ச்சிகளை விருத்தி செய்து கொள்வதற்கு இப்படிமுறையூடாக மாணவர்க்கு வாய்ப்புக் கிடைக்கும்.

கண்டறிகைக்காக மாணவரை வழிப்படுத்துகையில் மாணவர் குழுக்களின் தலைமைத்துவம் குறித்து ஆசிரியர் முடிவெடுத்தலாகாது. மாறாக, மாணவர் குழுவில் ஒருவர் தலைவராக உருவெடுப்பதற்கான சூழ்நிலையை உருவாக்குதல் ஆசிரியரின் பொறுப்பாகும். இலை மறை காயாகக் காணப்படும் ஆற்றல்கள் வெளிக்கொணரப்பட்டு, தருணத்திற்கு ஏற்ப தலைமைத்துவத்தை ஏற்கும் வாய்ப்பு மாணவருக்குக் கிடைக்க இது வழிகோலும்.

செயற்பாட்டின் மூன்றாம் படிமுறையின் போது, ஒவ்வொரு குழுவுக்கும் தாம் கண்டறிந்த வற்றை அதாவது தமது கண்டறிகையின் பெறுபேறுகளை ஏனையோரும் அறிந்து கொள்ளும் பொருட்டு, முன்வைப்புக்களை வைப்பதற்கு மாணவரைத் தூண்டுவதே இங்கு ஆசியரின் பணியாகும்.

ஒவ்வொரு மாணவருக்கும் பொறுப்புக்களை ஆற்றும் வாய்ப்புக் கிடைக்கும் வகையில் முன்வைப்பைத் திட்டமிட்டுக் கொள்ளுமாறு மாணவரை வழிப்படுத்துதல் பயனுடையதாகும். வழக்கமாக ஆசிரியரின் குரல் ஒலிக்கும் வகுப்பறையில் மாணவரின் குரல் ஓங்கி ஒலிப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தலானது மாணவர் தாம் கண்டறிந்தவற்றுக்கு விளக்கமளித்தலுடன் (Explanation) தொடர்புடைய இப்படிமுறையின் சிறப்பியல்பாகும்.

இரண்டாம் படிமுறையில் கண்டறிந்தவற்றை விரிவுபடுத்தும் (Elaboration) வாய்ப்பு மூன்றாம் படிமுறையின் போது வழங்கப்படும். ஒவ்வொரு குழுவும் தத்தமது முன்வைப்பை நிறைவு செய்த பின்னர், அது தொடர்பாக ஆக்கபூர்வமான கருத்துக்களைத் தெரிவிக்குமாறு முதலில் அந்தந்தக் குழுவின் அங்கத்தவர்களுக்கும் பின்னர் ஏனைய குழுக்களுக்கும் வாய்ப்பளிக்கப்படும். இறுதியில் முழுவதையும் தொகுத்து வழங்கும் (Review) பொறுப்பு ஆசிரியரையே சாரும். மாணவரது கண்டறிகையில் அடங்கும் முக்கியமான சகல விடயங்களும் தெளிவுபடுத்தப்படும் வகையில் எண்ணக்கருக்களும் கொள்கைகள் கோட்பாடுகளும் மாணவரது மனதில் தெளிவாகப் பதியும் வகையிலும் மீளாய்வை முன்வைத்தல் ஆசிரியரின் பொறுப்பாகும்.

வகுப்பறையில் கற்றல் கற்பித்தற் செயன்முறை எதிர்பார்க்கப்பட்ட வகையில் வெற்றிகரமாக நிகழுகின்றது என்பதை இடையறாது தேடியறிதல் இச்செயன்முறையை நடைமுறைப்படுத்தும் ஆசிரியரின் பிரதான பொறுப்பாகும். இதற்காக கணிப்பீட்டையும் மதிப்பீட்டையும் பயன்படுத்த வேண்டும். திட்டமிடப்பட்ட செயற்பாடு தொடர்பாக, கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டின் போது இதற்காக போதிய அவகாசத்தைப் பெறுவதற்கான வாய்ப்பு ஆசிரியருக்கு வழங்கப்பட்டுள்ளது. செயற்பாட்டின் இரண்டாவது படிமுறையின்போது மாணவர்கள் கண்டறிகையில் ஈடுபட்டிருக்கையில் கணிப்பீட்டையும் (Assessment) செயற்பாட்டின் மூன்றாவது படிமுறையின் போது மாணவர் தாம் கண்டறிந்தவற்றை விளக்குகையில் மதிப்பீட்டையும் (Evaluation) நடத்துவதற்கு ஆசிரியருக்கு வாய்ப்பு வழங்கப்பட்டுள்ளது. கணிப்பீடு, மதிப்பீடு ஆகியன பற்றிய விரிவான விளக்கம் இவ்வாவணத்தில் பிறிதொரு இடத்தில் தரப்பட்டுள்ளது.

மேலே விபரிக்கப்பட்ட கற்றல் - கற்பித்தல் முறையியல், நிலைமாற்ற வகிபாகத்தை நடைமுறைப்படுத்தும் வாய்ப்பை ஆசிரியருக்கு வழங்குகின்றது. இச்செயன்முறையின் போது குழுநிலைக் கண்டறிகை முதலிடம் பெறுகின்றது. கொடுக்கல் வாங்கல், உரையாடல், சிற்றுரை போன்றவற்றில் ஈடுபடுவதற்கு ஆசிரியருக்கு வாய்ப்புக் கிடைக்கின்றது. முதலாவது படிமுறையின்போது கொடுக்கல் வாங்கலுக்கும் உரையாடலுக்கும் வாய்ப்புக் கிடைக்கின்றது. இறுதிப் படிமுறையின்போது மீட்டாய்வை நடத்துகையில் சிற்றுரை நடத்துதல், எண்ணக்கருக்களை வலியுறுத்திப் பதித்தல் ஆகியவற்றுக்கு வாய்ப்புக் கிடைக்கின்றது. புத்தாயிரமாம் ஆண்டின் முதலாவது கல்வி மறுசீரமைப்பிற்கு அமைவாக முன்வைக்கப்படும் இக்கலைத்திட்டத்துடன் தொடர்புடைய கற்றல் - கற்பித்தல் முறையியலை அபிவிருத்தி செய்யும் போது ஆசிரியரின் நிலைமாற்ற வகிபாகம் தொடர்பாக மட்டுமன்றி, கடத்தல் வகிபாகம், கொடுக்கல் வாங்கல் வகிபாகம் ஆகியவற்றின் நல்ல அம்சங்களும் கவனத்திற் கொள்ளப்பட்டுள்ளன என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

## 11.2.2 தரவிருத்தி உள்ளீடுகள்

- டிமை கடதாசிகள், எழுது கடதாசி
- பிளாற்றினம் பேனா / நிறப் பேனாக்கள்
- பென்சில்கள்
- அடிமட்டம்
- றெஜிபோம்
- பிறிஸ்டல் (கடதாசி) போர்ட்
- ஒலி / ஒளிப்பதிவுக் கருவி
- ஒலிப்பதிவு நாடாக்கள்
- ஒளிப்பதிவு நாடாக்கள், இறுவட்டுக்கள்
- தேவையான சுவாமிப் படங்கள்
- சமய, சந்தான குரவர் படங்கள், சைவப்பெரியார் படங்கள்
- பசை நாடா (செலோரேப்)
- பின்வரும் நூல்கள்
  - தரம் - 10 சைவநெறி - கல்வி வெளியீட்டுத் திணைக்களம் (1999)
  - தரம் - 11 சைவநெறி - கல்வி வெளியீட்டுத் திணைக்களம் (2000)
  - இந்துக் கலைக்களஞ்சியம் - இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்கள வெளியீடு
  - பன்னிரு திருமுறைகள்
  - பிள்ளையார் கதை
  - கண்ணகி வழக்குரை
  - பெரியபுராணம்
  - இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள் - இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்கள வெளியீடு
  - இலங்கையில் இந்து சமயம் - அகில இலங்கை இந்து மாமன்ற பொன்விழா வெளியீடு

தேர்ச்சி 1.0 : அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கும் வகையில் சமய ஒழுகலாறுகளை இறைசிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

தேர்ச்சி மட்டம் 1.1 : கடவுள் ஒருவர் உள்ளார் என்னும் உண்மையை ஏற்று, எல்லாச் செயல்களுக்கும் அவரே ஆதாரம் என்பதையும் ஒப்புக் கொண்டு, அதனைச் சைவசித்தாந்த நூல்களை அடிப்படையாகக் கொண்டு விளக்குவர்.

செயற்பாடு 1.1 : கடவுள் ஒருவரே உளர் என்னும் உண்மையை ஏற்று அவரை வழிபடுவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 1.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- சைவசித்தாந்த நூல்கள்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்

**கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :**

படி 1.1.1 :

- மனித வாழ்வுடன் கடவுள் எவ்வாறு பிணைந்துள்ளார் என மாணவர்கள் கூறுவதற்கு இடமளியுங்கள்.
- சைவசித்தாந்த நூல்கள், திருமுறைப் பாடல்கள் என்பவற்றோடு தொடர்புபடுத்தி, கடவுள் உண்மையை எடுத்துக் கூற மாணவர்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - கடவுள் உலக இயக்கத்திற்கு ஆதாரமாக விளங்குகின்றார்.
> - ஆன்மாக்களது வினைப்பயன்களின் பொருட்டு இறைவன் ஐந்தொழில்களைப் புரிகின்றார்.
> - கடவுள் அனைத்து உயிர்களுக்கும் முதல்வனாக விளங்குகின்றார்.
> - ஆன்மாக்களின் தலைவன் என்பதால் பசுபதி என அழைக்கப்படுகின்றார்.
> - கடவுளின் பரத்துவம், இயல்பு என்பன சைவ சித்தாந்த நூல்களில் விளக்கப்பட்டுள்ளன.

(10 நிமிடங்கள்)

படி 1.1.2 :

- வகுப்பிலுள்ள மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் இணைப்பு 1.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவத்தை வழங்குங்கள்.

- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.
- அவர்களைச் செயற்பாட்டில் ஈடுபடுத்துங்கள்.
- ஒவ்வொருவர் மீதும் கவனம் செலுத்தி முழுக் குழு வினரையும் அறிக்கைகளைச் சமர்ப்பிக்க ஏற்றவாறு ஆயத்தம் செய்யுங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 1.1.3 :

- அறிக்கையைச் சமர்ப்பிக்க, குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- சமர்ப்பித்த குழுவின் ஏனைய அங்கத்தவர்கள், அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- ஏனைய குழுக்களும் தமது ஆக்கபூர்வமான கருத்துக் களை வழங்க இடமளியுங்கள்.
- எல்லாக் குழுக்களின் அறிக்கைகளையும் தொகுக்கும் வகையில் கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- கடவுள் பல பெயர்களால் அழைக்கப்பட்டாலும் பல வடிவங்களைக் கொண்டிருந்தாலும் அவர் ஒருவரே. இதனைச் சிவஞானசித்தியார், "யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்" என்னும் பாடல் மூலம் குறிப்பிடுகின்றது.
- சிவஞானபோதம்,
  "அவன் அவள் அது என ......" (பரத்துவம்)
  "அவையே தானாய்......" (ஒன்றாய் உடனாய் வேறாய்)
  "ஏகனாகி இறை பணி நிற்க......"
  எனவும் குறிப்பிடுகின்றது.
- சைவசித்தாந்தம் உலகப் படைப்புக்கான நிமித்த காரணராக இறைவனைக் குறிப்பிடு கின்றது.
- திருவருட்பயனில் பதிமுது நிலை கடவுளின் பரத்துவத்தைக் கூறுகின்றது.
  "அகர உயிர் போல் அறிவாகி எங்கும்....."
  "பெருமைக்கும் நுண்மைக்கும்......"
  "பல்லாருயிர் உணரும் பான்மையென....."
  "ஆக்கி எவையும் அளித்தா சுடன் அடங்க......"
- இறைவன் பெருங்கருணை வடிவானவர்.
- ஒரே இறைவனே ஆன்மாக்களுக்கு உதவும் வகையில் திருமேனிகள், ஐந்தொழில்கள், எண் குணங்கள் என்பவற்றை எடுக்கின்றார்.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- கடவுள் ஒருவர் உள்ளார் என்பதை ஆதாரங்களுடன் குறிப்பிடுவர்.
- கடவுள் ஒருவர் உளர் என்னும் உண்மையை ஏற்று அவரை வழிபடுவர்.
- கடவுள் ஒருவர் உளர் என்னும் உண்மையையும், அவன் ஒருவனே என்பதையும் சைவசித்தாந்த நூல்களை ஆதாரமாகக் கொண்டு எடுத்துக் கூறுவர்.
- குழுவாக இணைந்து மற்றவர்களிடம் கடவுள் நம்பிக்கையை ஏற்படுத்துவர்.
- கடவுள் நம்பிக்கையுடன் தமது வாழ்வை வளம்படுத்துவர்.

**இணைப்பு 1.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- ஒவ்வொரு குழுவும் தத்தமது செயற்பாட்டுப் படிவம் குறித்து, கவனம் செலுத்துங்கள்.
- உங்கள் குழுவினருடன் கலந்தாலோசித்துச் செயற்பாட்டில் ஈடுபடுங்கள்.
- உங்கள் குழுவின் கருத்துக்களை அறிக்கையாக்கி, அதனை வகுப்பில் சமர்ப்பிக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப் படிவம்**

**குழு 1, 3 (இரு பிரதிகள்)**

1. கடவுள் ஒருவர் உளர் என்னும் உண்மையைச் சைவசித்தாந்த நூல்களை ஆதாரமாகக் கொண்டு கருத்துக்களை முன்வையுங்கள்.
2. ஆதாரங்களுக்கான பாடலடிகளைத் தேடி எழுதுங்கள்.

**குழு 2, 4 (இரு பிரதிகள்)**

1. கடவுள் ஒருவர் உளர் என்னும் உண்மையைத் தெளிவுபடுத்தும், அறிவைப் பெறும் வழிகளை முன்வையுங்கள்.
2. கடவுளின் சொரூப லக்கணங்களுள் ஐந்தினையும் தடத்த லக்கணங்களுள் ஐந்தினையும் எழுதுங்கள்.

தேர்ச்சி 1.0 : அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கும் வகையில் சமய ஒழுகலாறுகளை இறைசிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

தேர்ச்சி மட்டம் 1.2 : நாளாந்தக் கடமைகளிலும், ஏனைய செயற்பாடுகளிலும் இறைசிந்தனையுடன் ஈடுபடுவர்.

செயற்பாடு 1.2 : வீடுகளிலும், பாடசாலைகளிலும், கோயில்களிலும் சமயச் செயற்பாட்டில் ஈடுபடுவோம்.

நேரம் : 120 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 1.2.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 1.2.1 :
- வீடுகளிலும், பாடசாலைகளிலும், கோயில்களிலும் அன்றாடமும் விசேட தினங்களிலும் கடைப்பிடிக்கும் சமயப் பழக்க வழக்கங்களை மாணவர் கூறுவதற்கு இடமளியுங்கள்.
- சமயப் பழக்க வழக்கங்களைக் கடைப்பிடிப்பதால் கிடைக்கும் பயன்களைக் கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழேவரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

- மாணவர்கள் பின்பற்ற வேண்டிய சமயச் செயற்பாடுகள் பல உள்ளன. அவையாவன:
  - தினமும் வீட்டில் காலையும் மாலையும், விளக்கேற்றி நீர், பூ என்பன வைத்து, தோத்திரம் பாடி, கடவுளை வணங்குதல்.
  - விசேட சமய தினங்களையொட்டி வீடு வாசலைச் சுத்தம் செய்து, தோரணம் கட்டி, கோலமிட்டு, கும்பம் வைத்துக் கடவுளை வழிபடல்.
  - தினமும் ஆலயம் சென்று வழிபடலும் தொண்டு செய்தலும்.
  - விசேட காலங்களில் சகல அடியார்களுடனும் இணைந்து தொண்டு செய்தல், தண்ணீர்ப்பந்தல் வைத்தல், அன்னதானம் வழங்கல், கூட்டுப் பிரார்த்தனையில் ஈடுபடல்.

- பாடசாலையில் ஆசிரியர்களுக்கு மரியாதை செலுத்துதல், காலை ஆராதனையில் பங்குபற்றுதல், சமய நற்சிந்தனை கூறல், நவராத்திரி, சிவராத்திரி, குருபூசை முதலான காலத்தில் சமய நிகழ்வுகளை ஒழுங்குபடுத்தி நடத்துதல்.

(15 நிமிடங்கள்)

படி 1.2.2 :
- வகுப்பிலுள்ள மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவிற்கும் குழு ஆய்வுக்கான செயற் பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபடுவதை அவதானியுங்கள்.

(45 நிமிடங்கள்)

படி 1.2.3 :
- ஒவ்வொரு குழுவுக்கும் அறிக்கை சமர்ப்பிக்கச் சந்தர்ப்பமளியுங்கள்.
- குறைநிரப்புச் செய்வதற்கு அதே குழுவின் ஏனைய அங்கத்தவர்களுக்குச் சந்தர்ப்பமளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினரும் கருத்துக்களை முன்வைக்க இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- வீடுகளில் கொண்டாடப்படும் விழாக்களில் பின்வருவன அடங்கும்.
  - தைப்பொங்கல்
  - சித்திரை வருடப்பிறப்பு
  - ஆடிப்பிறப்பு
  - நவராத்திரி
  - தீபாவளி
  - கார்த்திகை விளக்கீடு
  - ஓணம் பண்டிகை
- பாடசாலையில் கொண்டாடப்படும் விசேட சமய விழாக்களில் பின்வருவன அடங்கும்.
  - சமய குரவர் குருபூசை
  - சமயப் பெரியார் குருபூசை
  - நவராத்திரி விழா
- ஆலயங்களில் கொண்டாடப்படும் விசேட சமய விழாக்கள் வருமாறு:
  - திருவிழா
  - விநாயக சதுர்த்தி
  - திருவெம்பாவை

| |
|---|
| • சமய ஒழுகலாறுகளைக் கடைப்பிடிப்பதன் மூலம் அவை மனிதனை நற்பண்புடையவனாக்க வழிவகுக்கின்றன. |

(60 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:

- வீடுகளிலும், பாடசாலைகளிலும், ஆலயங்களிலும் கொண்டாடப்படும் விழாக்களின் நடைமுறைகளையும், அவற்றின் முக்கியத்துவத்தையும் குறிப்பிடுவர்.
- வாழ்க்கையில் சமயச் செயற்பாடுகளிலும் விழாக்களிலும் ஈடுபட்டு, நற்பண்புகளை மேம்படுத்திக் கொள்வர்.
- வீடு, பாடசாலை, கோயில் முதலானவற்றில் கொண்டாடப்படும் விசேட தினங்கள் எவை எனப் பட்டியற்படுத்துவர்.
- சமய விழாக்களைக் கொண்டாடுவதன் மூலம் கூட்டு மனப்பாங்கை வளர்த்துக் கொள்வர்.
- இறை சிந்தனையுடன் வாழ்வை வளப்படுத்துவர்.

இணைப்பு 1.2.1

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- ஒவ்வொரு குழுவும் தத்தமது செயற்பாட்டுப் படிவம் குறித்துக் கவனம் செலுத்துங்கள்.
- உங்கள் குழுவினருடன் கலந்தாலோசித்துச் செயற்பாட்டில் ஈடுபடுங்கள்.
- உங்கள் குழுவின் கருத்துக்களை அறிக்கையாக்கி, அதனை வகுப்பில் சமர்பிக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப் படிவம்

குழு 1

1. வீடுகளில் கைக்கொள்ளப்படும் சமய விழாக்கள் நான்கினைக் குறிப்பிடுங்கள்.
2. இத் தினங்களையொட்டி நடைபெறும் செயற்பாட்டையும் சமூக உறவினையும் எழுதுங்கள்.

குழு 2

1. பாடசாலையில் கொண்டாடப்படும் சமய விழாக்களைக் குறிப்பிடுங்கள்.
2. அவற்றினால் பெறும் பயன்களை எழுதுங்கள்.

குழு 3

1. எமது சமய வளர்ச்சியில் கோயில் வகிக்கும் பங்கினைக் குறிப்பிடுங்கள்.

குழு 4

1. சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சியில் கோயிலின் முக்கியத்துவத்தினைக் குறிப்பிடுங்கள்.

**தேர்ச்சி 1.0** : அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கும் வகையில் சமய ஒழுகலாறுகளை இறைசிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

**தேர்ச்சி மட்டம் 1.3** : வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் சமய ஒழுகலாறுகளையும் வழக்காறுகளையும் பின்பற்றுவர்.

**செயற்பாடு 1.3** : சமய விழுமியங்களைக் கடைப்பிடிப்போம்.

**நேரம்** : 120 நிமிடங்கள்

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 1.3.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்

**கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 1.3.1** :

- உங்கள் வாழ்க்கையில் நீங்கள் செய்த நற்கருமங்கள் (செயல்கள்) எவை? என மாணவரிடம் கேட்டு, அவர்கள் விடை கூற இடமளியுங்கள்.
- நல்வாக்கியங்களைப் பட்டியற்படுத்தி அவற்றைக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே வரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - சமய விழுமியங்களைப் பின்பற்றி வாழ்பவன் ஒரு நல்ல சமயத்தவனாவான்.
> - எல்லோரிடமும் அன்பாகவும், நேர்மையாகவும் வாழ்தல் ஒரு நல்ல சமய வாழ்வுக்குரிய பண்பாகும்.
> - சமய ஒழுகலாறுகளைக் கடைப்பிடிப்பதன் மூலம் மகிழ்ச்சியான வாழ்வை எப்போதும் பெற்றுக் கொள்ள முடியும்.

**(15 நிமிடங்கள்)**

**படி 1.3.2** :

- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்விற்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டினையும் வழிப்படுத்திக் கண்காணியுங்கள்.

**(45 நிமிடங்கள்)**

**படி 1.3.3** :

- ஒவ்வொரு குழுவுக்கும் அறிக்கை சமர்ப்பிக்கச் சந்தர்ப்பமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க அதே குழுவுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.

- ஏனைய குழுக்களிடமிருந்து வரவேற்கத்தக்க கருத்துக் களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- கீழே குறிப்பிடும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சமய ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து ஒவ்வொரு வரும் உண்மையான சமயியாக வாழ்தல் வேண்டும்.
  - ஆலய தரிசனம் செய்தல்
  - ஏழைகளுக்கு உதவுதல்
  - கோயிற் தொண்டுகளில் ஈடுபடல்
- நல்லொழுக்கம், ஒருவரை நற்பிரஜையாக வாழ வழிவகுக்கும்.
  உ-ம்:
  - சமூகத் தொண்டுகளில் ஈடுபடல்
  - பெரியோரை மதித்தல்
  - மாதா, பிதா, குரு போன்றோரை மதித்தல்
- நல்லொழுக்கம், வீட்டில் ஆரம்பத்திலிருந்தே வளர்க்கப்பட வேண்டும்.
- ''அறம் செய்ய விரும்பு'' என்பதற்கு இணங்க வாழ்தல் வேண்டும்.
  உ-ம்:
  - அன்னதானம் வழங்கல்
  - தர்மம் செய்தல்
- நாம் வாழும் சூழலில் உள்ள சமூக மேம்பாட் டிற்கு உதவியாக வாழ்தல் வேண்டும்.
  உ-ம்:
  - சமூகப் பணிகளில் ஈடுபடுதல்
  - இன்ப துன்பங்களில் கலந்து கொள்ளல்
- சமூக சமயப் பணிகளில் ஈடுபடும்போது கூடுமான வரை அர்ப்பண சிந்தையுடன் ஈடுபடுதல் வேண்டும்.
- தாம் செய்யும் பணி மூலம் சமூகம் மகிழ்வாக இருக்கத் தங்களைப் பழக்கிக்கொள்ள வேண்டும்.
- சமூக நலனுக்காக அர்ப்பணிப்புடன் எப்போதும் செயற்படுதல் வேண்டும்.

(60 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சமய ஒழுக்கங்கள் நான்கினைக் குறிப்பிடுவர்.
- பெரியோர்களுக்கு மதிப்பளித்து நடப்பர்.
- சமூகத்திற்குத் தேவையான உதவிகள் எவையெனத் தேடியறிவதில் ஈடுபடுவர்.
- குழுவாகச் சேர்ந்து தான தர்மங்கள் செய்வதில் ஈடுபடுவர்.
- சமூகத்தில் நல்லொழுக்கங்களை வளர்க்க முன்வருவர்.

இணைப்பு 1.3.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுவிற்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவிற்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்

(எல்லாக் குழுக்களுக்கும் பகிர்ந்தளியுங்கள்.)

1. உண்மையான சமயியாக வாழ உங்களால் கடைப்பிடிக்கப்படும் சமய ஒழுக்கங் களைப் பட்டியற்படுத்துங்கள்.

2. நீங்கள் இதுவரை காலமும் மேற்கொண்டு வந்த தான தர்மங்களைக் குறிப்பிடுங்கள்.

3. சைவசமயி ஒருவன் தன் சமூகத்துக்கு ஆற்ற வேண்டிய உதவிகளை எடுத்துரை யுங்கள்.

தேர்ச்சி 1.0 : அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கும் வகையில் சமய ஒழுகலாறுகளை இறைசிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

தேர்ச்சி மட்டம் 1.4 : வாழ்க்கை முன்னேற்றத்திற்காக வாழ்வியல் சடங்குகளையும், அவற்றின் முக்கியத்துவங்களையும் இனங்கண்டு, அவற்றுக்கு மதிப்பளிப்பர்.

செயற்பாடு 1.4 : திருமணச் சடங்கு பற்றி அறிவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 1.4.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- இணைப்பு 1.4.2 இல் உள்ள தகவற்கோவை
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 1.4.1 :

- எமது சமூகத்தில் மேற்கொள்ளும் வாழ்வியல் சடங்குகளைக் கூற இடமளியுங்கள்.
- வீடுகளில் நடைபெற்ற வாழ்வியல் சடங்குகள் பற்றிக் கூறுவதற்கு இடமளியுங்கள்.
- கீழே வரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - வாழ்வியல் சடங்குகள் மனித வாழ்க்கையை ஒழுங்குபடுத்த உதவியாக அமைகின்றன.
> - வாழ்வியற் சடங்கில் திருமணச் சடங்கும் ஒன்றாகும்.
> - சிவன், சக்தி பாவனையில் எமது திருமணச் சடங்கு நடைபெறும்.

(10 நிமிடங்கள்)

படி 1.4.2 :

- இணைப்பு 1.4.2 இல் உள்ள தகவற் கோவையை மாணவர் வாசித்து விளங்க இடமளியுங்கள்.
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 1.4.3 :

- ஒவ்வொரு குழுவுக்கும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக குறைநிரப்புக் கருத்துக்களை ஒவ்வொரு குழுவும் வழங்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.

- ஒவ்வொரு குழுவிடமிருந்தும் விருத்திகரமான கருத்துக் களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- வீட்டிலே நடைபெறும் மங்கலகரமான கிரியைகள் பூர்வக் கிரியைகள் எனப்படும்.
- பூர்வக் கிரியைகளுள் திருமணக் கிரியை முக்கியமானதொன்றாகும்.
- திருமணக் கிரியை என்பது கருத்தொருமித்த ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நடை பெறும் மங்கல நிகழ்வாகும்.
- திருமணத்தின்போது இடம் பெறும் கருமங்கள் பல உள்ளன.
  உ-ம்:
  - திருமணம் தொடங்கும் நிகழ்வு
  - பொருத்தம் பார்த்தல்
  - நாள் குறித்தல்
- திருமணத்தின்போது ஆசாரியார் செய்ய வேண்டியவை; ஸ்தான சந்தியாவந்தன ஜெபங் களால் தன்னைத் தயார்ப்படுத்தல்.
- திருமணத்தின்போது ஆசாரியாரால் மேற்கொள் ளப்படும் பூசை முறைகள்:
  - சங்கற்பம்
  - விக்கினேஸ்வரர் பூசை
  - புண்ணிய யாகம்
  - பஞ்சகௌவியம்
  - காப்புக் கட்டுதல்
  - முளைப்பாலிகை இடுதல்
  - சிவ கும்ப பூசை
  - நவக்கிரக பூசை
  - அக்கினி காரியம்
- அக்கினிக்கு மேற்கே, மணவறை அமைக்கப்படும்.
- முதலில் மணமகனின் வலப்பக்கத்திலே மணமகளை கிழக்கு நோக்கி இருத்தி, பஞ்சகௌவியம் கொடுத்துக் காப்புக் கட்டுதல் நடைபெறும்.
- பின்பு கன்னிகாதானம் நடைபெறும். அதில் மணமகனைச் சிவனாகப் பாவித்து, சிவாசாரியார் மணமக்களின் முதாதையர்களின் மூன்று (ஆண்) பெயர் கூறுவார். இதன் பின், பெண்ணின் பெற்றோர் வெற்றிலை, பாக்கு, பொன் என்பவற் றுடன் பெண்ணின் வலது கையை மணமகனின் வலக்கையில் சேர்த்து வைத்து, தீர்த்த நீரை வார்த்துத் தத்தம் செய்வார். இதனைக் கைப்பிடித்துக் கொடுத்தல் எனவும் அழைப்பர்.

- பின்னர் கூறை, தாலி என்பவற்றைச் சபை யோரிடம் ஆசீர்வதித்து, மணமகன் தனது கையால் மணமகளுக்குக் கொடுப்பார்.
- அதன் பின் கூறை கட்டும் நிகழ்வு இடம்பெறும். பின்னர் மங்கல வாத்தியத்துடனும், மந்திர ஒலியுடனும், சுற்றத்தார் பூக்கள், அறுகரிசி தூவ, மணப்பெண்ணுக்குத் திருமாங்கல்யம் கட்டப்படும்.
- மணமக்களை இடம் வலமாக மாறியிருக்கச் செய்து, அவர்களை உமா மகேஸ்வரராகப் பாவனை செய்து ஆகுதி செய்வர்.
- தாலி கட்டிய பின், பின்வருவன நிகழ்தல் வழக்கமாகும்.
  - அம்மி மிதித்தல்
  - அக்கினியை வலம் வருதல்
  - அக்கினியில் நெற்பொரி சொரிதல்
  - நீர்க்குடத்திற்குள் மோதிரம் எடுத்தல்
- மணமக்களுக்குப் பால், பழம் உண்ணக் கொடுத்து பசுக்கன்றைத் தரிசித்தல் இடம்பெறும்.
- அடுத்து ஆசீர்வாதம், அறுகரிசியிடல், வாழ்த்து அருந்ததி காட்டல் என்பன இடம்பெறும்.
- தம்பதிகள் சுபநேரத்தில் மணமகளின் வீட்டுக்குச் செல்லல்.
- இறுதியாகச் சாந்தி முகூர்த்தம் நடைபெறும். இந்நிகழ்வு எமது நாட்டில் வழக்கில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.
- திருமணம் இல்லங்களிலும் ஆலயங்களிலும் பொது மண்டபங்களிலும் நடைபெறும்.
  ''இல்லறம் நல்லறம்''
  ''ஒருவனுக்கே ஒருத்தி'' என்பன ஆன்றோர் வாக்கு.
- திருக்குறள் மூலம் இல்வாழ்க்கையின் சிறப்பினை வள்ளுவப் பெருந்தகை இவ்வாறு விளக்குகிறார்.
  ''இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
  நல்லாற்றில் நின்ற துணை''.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- திருமணக் கிரியையின் போது ஆசாரியாரால் மேற்கொள்ளப்படும் கிரியைகள் நான்கினைக் குறிப்பிடுவர்.
- திருமணக் கிரியையின் அவசியத்தை உணர்ந்து மதிப்பளிப்பர்.
- பல்வேறு பிரதேசங்களில் காணப்படும் திருமணக் கிரியை முறைகளைத் தேடியறிவர்.
- குழுவாகச் சேர்ந்து திருமணக் கிரியைகளின் அவசியத்தை எடுத்துக் கூறுவர்.
- உறவினர்களுள் இடம்பெறும் திருமணக் கிரியைகளின்போது அவர்களுடன் இணைந்து செயற்படுவதற்கு முன்வருவர்.

இணைப்பு 1.4.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவிற்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

1. திருமணத்தின் முன் இடம் பெறவேண்டிய கருமங்களைப் பட்டியற்படுத்துங்கள்.
2. திருமணக் கிரியையை மேற்கொள்ளும் ஆசாரியாரால் பின்பற்றப்படும் கருமங்களை நிரற்படுத்துங்கள்.
3. கன்னிகாதானம் என்றால் என்ன? அது எவ்வாறு இடம் பெறுகின்றது என்பதை விபரியுங்கள்.
4. மனித வாழ்க்கையில் திருமணத்தின் அவசியத்தைக் குறிப்பிடுங்கள்.

இணைப்பு 1.4.2

## தகவற்கோவை

### வீட்டில் நடைபெறும் கிரியைகள்

ஒவ்வொருவரும் தமது சுய நன்மையின் பொருட்டுச் செய்யப்படும் கிரியை ஆன்மார்த்தக் கிரியை எனப்படும். இவை பூர்வக்கிரியை, அபரக்கிரியை என இருவகைப்படும். பூர்வக் கிரியையாவது, தாயின் கருப்பத்தில் இருந்து பிறந்து வாழ்ந்து இவ்வுலகில் நடமாடும் வரை செய்யப்படுவது. அபரக்கிரியையாவது, ஒருவர் இறந்த பின்பு ஈமக்கிரியை, அந்தியேட்டி, சிராத்தம், அமாவாசை முதலியனவாகச் செய்யப்படுவது. பூர்வக்கிரியைகள் சீமந்தம், ஜாதகர்மம், நாமகர்ணம் (பெயர் வைத்தல்), கர்ணவேதனம் (காதுகுத்தல்), அன்னப்பிராசனம் (சோறூட்டல்), சௌளகர்மம் (மயிர் களைதல்), வித்தியாரம்பம் (ஏடு தொடக்கல்), உபநயனம், தீட்சை, திருமணம் முதலியனவாகும். சீமந்தம் என்பது, கருப்பவதியின் கூந்தலை உச்சி வகிர்ந்து முடித்து அவளுக்கு மங்கல நீராட்டி வளை காப்பணிந்து செய்யப்படும் கிரியையாகும். பூர்வக் கிரியைகளில் மிக முக்கியமானது திருமணமாகும்.

### திருமணக் கிரியை:

இல்லற தர்மம் நல்லறமாக நடைபெற்றால் வீடும் நாடும் சிறக்கும். ஓர் ஆண்மகனுக் கேற்ற பதிவிரதையைச் சேர்த்து வைக்கும் கிரியையே திருமணக் கிரியையாகும். பழந் தமிழ் நூல்களில் ஒருவனும் ஒருத்தியும் தம்முள் தாமே விரும்பி மணம்புரியும் கந்தருவ முறையே பேசப்பட்டது.

நல்லொழுக்கமும் அழகும் செல்வமும் தூயகுணமும் குற்றமற்ற தாய் தந்தையரும் சகோதரரும் சுற்றத்தாரும் உடைய கன்னியைத் தெரிந்தெடுத்து, இருவரும் பொருந்தி வாழக்கூடிய வழிவகைகளை ஆராய்ந்து, ஒரு சுபவேளையில் ஆசாரியரைக் கொண்டு மணம் முடித்து வைக்கப்படும்.

திருமணத்தை நிகழ்த்தும் ஆசாரியர், தன்னை ஸ்தான, சந்தியாவந்தன செபங்களால் தயார்ப்படுத்திக் கொண்டு உரிய சுபவேளையில் திருமண நிகழ்ச்சியைத் தொடங்குவார். முறையே சங்கற்பம், விக்கினேஸ்வர பூசை, புண்ணியயாகம், பஞ்சகௌவியம், காப்புக் கட்டுதல், முளைப்பாலிகை இடுதல், சிவ கும்பபூசை, அக்கினி காரியம் என்பன ஒழுங்காக நடைபெறும். அக்கினிக்கு மேற்கே மணவறை அமைய வேண்டும். மணமகனை முதலிலே இடப்பக்கத்திலும் மணமகளை வலப்பக்கத்திலும் இருத்தி, கிழக்கு நோக்கி இருக்கக்கூடியதாக இருவருக்கும் பஞ்சகௌவியம் கொடுத்துக் காப்புக் கட்டுதல் நடைபெறும். பின்பு கன்னிகாதானம் நடைபெறும். மணமகனைச் சிவனாகப் பாவித்துக் கொள்ள வேண்டும். சிவாசாரியர் மணமக்களின் மூன்று சந்ததியைப் (ஆண்) பெயர் கூறியபின் பெண்ணின் பெற்றோர் வெற்றிலை, பாக்கு, பொன் என்பவற்றுடன் பெண்ணின் வலது கையை மணமகனின் வலக்கையிலே சேர்த்து வைத்துத் தீர்த்தநீரை வார்த்துத் தத்தம் செய்து கொடுப்பர். பின்பு கூறை, தாலி என்பவற்றைச் சபையோர் மூலம் ஆசீர்வதிப்பித்துப் பின்பு மணமகன் தனது கையால் மணமகளுக்குக் கொடுப்பர். கூறை உடுத்தபின் மங்கல வாத்தியத்துடனும் மந்திர ஒலியுடனும் திருமாங்கல்யம் தரிக்கப்படும். மணமக்களை வலம் இடமாக மாறியிருக்கச் செய்து அவர்களை உமாமகேஸ்வரர்களாகப் பாவித்து ஆகுதி செய்வர். பின்பு பால், பழம் உண்பித்து ஆசமனம் செய்வித்துப் பசுக்கன்றைத் தரிசிக்கச்செய்து, அம்மி மிதித்தல், அக்கினியை வலம்வருதல், அக்கினியில் நெற்பொரி சொரிதல் என்னும் கிரியைகள் நடைபெறும். கடைசியாக ஆசீர்வாதம், அறுகரிசியிடுதல், வாழ்த்து, அருந்ததி காட்டல் என்பனவும் நடைபெறும். சுபநேரத்தில் புதுமணத் தம்பதிகள் மணமகளின் வீட்டுக்குச் செல்வர். முடிவில் மணமகன் இல்லக்கிழத்தியைத் தன் மனைக்கு அழைத்துச் சென்று இல்லறம் என்னும் நல்லற வாழ்வை மேற்கொள்வர். திருமணம் அவரவர் இல்லங்களிலும் ஆலய வெளிவீதி மண்டபங்களிலும் நடைபெறுவதுதான் உத்தமமாகும்.

தேர்ச்சி 1.0 : அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கும் வகையில் சமய ஒழுகலாறுகளை இறை சிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

தேர்ச்சி மட்டம் 1.5 : விரதங்களின் சமய, சமூக முக்கியத்துவங்களை விளங்கி விரதங்களை அனுட்டிப்பர்.

செயற்பாடு 1.5 : விரதங்கள் பற்றி அறிந்து அவற்றை அனுட்டிப்போம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 1.5.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 1.5.1 :

- வீட்டில் பெற்றோர், உறவினர்கள் அனுட்டிக்கும் விரதங்களைக் கூற மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- தாங்கள் அனுட்டித்த அல்லது விரும்பும் விரதங்களைக் கூற இடமளியுங்கள்.
- கீழே வரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - விரதத்தை அனுட்டிப்பதன் மூலம் மனதை ஒரு நிலைப்படுத்த முடியும்.
> - விரதம் அனுட்டிப்பதன் மூலம் ஏனைய உயிர்கள் மீது கருணை காட்ட முடியும்.
> - விரதத்தை அனுட்டிப்பதன் மூலம் பற்றுக்களைக் குறைத்துக் கொள்ள முடியும்.

(10 நிமிடங்கள்)

படி 1.5.2 :

- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் அவதானித்து மேற்பார்வை செய்யுங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 1.5.3 :

- ஒவ்வொரு குழுவும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஒவ்வொரு குழுவுக்கும் இடமளியுங்கள்.

- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - விரதம் என்பது மனம் பொறி வழி செல்லாது நிற்றற்பொருட்டு உணவை விடுத்தேனும், சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் மெய்யன்போடு இறைவனை விதிப்படி வழிபடுதலாகும்.
> - மாதங்கள் தோறும் அனுட்டிக்கப்படும் விரதங்கள் பல உள்ளன.
>   உ-ம்: தைமாதம் - தைப்பூசம்
>   மாசிமாதம் - மாசிமகம்
> - இதேபோன்று ஒவ்வொரு கடவுளின் ஆற்றலைப் போற்றும் வகையில் விரதங்கள் உள்ளன.
>   உ-ம்: விநாயகர் - பெருங்கதை
>   முருகன் - கந்தசஷ்டி
> - விரதம் அனுட்டிப்பவர்கள் விரத நியதிகளைத் தவறாது கடைப்பிடிக்க வேண்டும்.
> - விரதங்கள் பல உள்ளன. அவற்றினுள்,
>   - ஆடி அமாவாசை
>   - சித்திரா பௌர்ணமி (சித்திரைப் பூரணை)
>
>   என்னும் விரதங்கள் குறிப்பிடத்தக்கவை.
> - ஆடி அமாவாசை விரதம் சூரியனும் சந்திரனும் ஒரே கோட்டில் பூமிக்கு நேராக வரும் நாளன்று அனுட்டிக்கப்படும் விரதமாகும்.
> - இந்நாளில் இறந்த தந்தையின் ஆன்மா முத்தி யடைதற் பொருட்டும் வம்ச விருத்தியின் பொருட்டும் இவ்விரதம் அனுட்டிக்கப்படும்.
> - ஆடி அமாவாசை அன்று பிதிர்களின் பொருட்டு சுற்றாத்தாருக்கும், ஏழைகளுக்கும் தானம் வழங்குதல் வேண்டும்.
> - பூரணைச் சந்திரன் சித்திரை நட்சத்திரத்துடன் சேர்ந்து வருவது சித்திரைப் பௌர்ணமி எனப்படும்.
> - இறந்த தாயின் ஆத்மா முத்தி அடைதற் பொருட்டு, சித்திரா பௌர்ணமி விரதம் அனுட்டிக்கப்படுகின்றது.
> - இந்நாளில் சித்திர புத்திர நாயனார் கதை படித்து சித்திரைக் கஞ்சி வார்ப்பதும் (கொடுத்தல்) பாரம்பரிய வழக்கம் ஆகும்.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சைவர்களால் அனுட்டிக்கப்படும் விரதங்களை இனங்கண்டு, அவற்றுள் பிதிர்க்கடனுடன் தொடர்புடைய விரதங்களைக் குறிப்பிடுவர்.
- பிதிர்க்கடன் செய்ய வேண்டியதன் அவசியத்தை அறிந்து அவற்றைக் கடைப்பிடிப்பர்.
- பிதிர்க்கடன் செய்வதிலுள்ள பிரதேச வேறுபாடுகளைத் தேடியறிவதில் ஈடுபடுவர்.
- தமது வீட்டிலோ அல்லது சுற்றத்தார் வீடுகளிலோ மேற்கொள்ளப்படும் பிதிர்க்கடன் கடமைகளில் பங்குகொள்வர்.

**இணைப்பு 1.5.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவிற்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

1. விரதங்களைக் அனுட்டிப்பதன் மூலம் கிடைக்கப் பெறும் பயன்களைக் குறிப் பிடுங்கள்.
2. ஆடி அமாவாசை, சித்திரைப் பூரணை போன்ற விரதங்களை அனுட்டிப்பதன் நோக்கம், அவற்றின் பயன்கள் என்பவற்றை வேறுபடுத்தி எழுதுங்கள்.
3. பல்வேறு பிரதேசங்களிலும் அனுட்டிக்கப்படும் விரத வேறுபாட்டைப் பட்டியல் படுத்துங்கள்.

தேர்ச்சி 1.0 : அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கும் வகையில் சமய ஒழுகலாறுகளை இறை சிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.

தேர்ச்சி மட்டம் 1.6 : வாழ்வியலில் பண்டிகைகள் உணர்த்தும் முக்கியத்துவத்தை அறிந்து கொண்டாடுவர்.

செயற்பாடு 1.6 : பண்டிகைகளுள் தீபாவளி, ஆடிப்பிறப்பு என்பன பற்றி அறிவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 1.6.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 1.6.1 :
- மாணவர்கள் கொண்டாடிய பண்டிகைகளைக் குறிப்பிட இடமளியுங்கள்.
- மாணவர்களுக்குப் பிடித்த பண்டிகைகளையும் அதற்கான காரணங்களையும் கூற இடமளியுங்கள்.
- பண்டிகைகளின் படங்களைக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே வரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - சைவர்களால் பண்டிகைகள் சிறப்பாகக் கொண் டாடப்படுகின்றன.
> - சைவர்களால் கொண்டாடப்படும் பண்டிகை களுள் தீபாவளிப் பண்டிகையும், ஆடிப்பிறப்புப் பண்டிகையும் முக்கியத்துவம் உடையன.

(10 நிமிடங்கள்)

படி 1.6.2 :
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந் தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் அவதானித்து மேற்பார்வை செய்யுங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 1.6.3 :
- ஒவ்வொரு குழுவும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஒவ்வொரு குழுவுக்கும் இடமளியுங்கள்.

- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- பண்டிகைகள் விரதங்களிலிருந்து வேறுபட்டவை.
- பண்டிகைகள் பல. அவையாவன:
  - தைப்பொங்கல்
  - சித்திரைப் புத்தாண்டு
  - ஆடிப்பிறப்பு
  - தீபாவளி
  - ஓணம் பண்டிகை
- அவற்றுள் தீபாவளி, ஆடிப்பிறப்பு என்பன குறிப்பிடத்தக்கவை ஆகும்.
- நரகாசுரன் கதையை அடிப்படையாகக் கொண்டு ஐப்பசி மாதத்துத் தேய்பிறைச் சதுர்த்தசியில் கொண்டாடப்படும் பண்டிகை தீபாவளியாகும்.
- ஆடி மாதம் முதல் தினத்தில் கொண்டாடப்படும் பண்டிகை ஆடிப்பிறப்பு ஆகும்.
- சூரியன் வடக்கில் இருந்து தெற்கிற்கு நகரும் தட்சணாயன புண்ணிய தினத்தில் கூழ் காய்ச்சி மகிழ்ச்சியுடன் ஆடிப்பிறப்பு கொண்டாடப்படுகின்றது.
- ஆடிப்பிறப்பன்று பல்வேறு நிகழ்வுகள் இடம் பெறுகின்றன.
  - ஆடிக்கூழ்
  - ஆடிக் கொழுக்கட்டை

  என்பன தயாரிக்கப்பட்டுக் கொண்டாடப்படுகின்றது.
- கூழ், கொழுக்கட்டை என்பன பிதிர்களுக்குப் படைக்கப்படுகின்றன.
- ஆடிப்பிறப்புத் தினத்தில் பின்வரும் கருமங்கள் இடம்பெறுகின்றன.
  - சூழலைச் சுத்தம் செய்தல்
  - கோலம் போடுதல்
  - தோரணம் கட்டல்
  - ஆடிக்கூழ் தயாரித்தல்
  - ஆடிக் கொழுக்கட்டை தயாரித்தல்
  - பிதிர்களுக்குப் படைத்து வழிபடுதல்
  - நன்றி செலுத்துதல்
  - பிறரோடு பகிர்ந்து உண்ணல்
- உலகத்தில் வாழும் இந்து மக்களால் தீபாவளி கொண்டாடப்படுகின்றது. குறிப்பாக இலங்கையிலும், வடஇந்தியாவிலும் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்படுகின்றது.
- இலங்கையிலும் தமிழ் நாட்டிலும் கொண்டாடப்படும் முறைமை ஒரு வகையிலும், வடஇந்தியாவில் கொண்டாடப்படும் முறைமை பிறிதொரு வகையிலும் அமையும்.

- வடஇந்தியாவில் தீபாவளி கொண்டாடும் முறையைப் பின்வரும் வகையில் நோக்கலாம்.
    - பழையவற்றை நீக்கி, புதுப்பொருள் வாங்கல்
    - வீட்டில் மாவிளக்கேற்றல்
    - சாணத்தால் செய்த மனித உருவத்தின் தலையில் விளக்கேற்றல்
    - கோவர்த்தன கிரி உருவம் செய்து அதனைச் சூழ்ந்து ஆடிப்பாடுதல்
    - மணமான பெண்கள் பூசை செய்த பின் தங்கள் சகோதரர்களுக்குத் திலகமிட்டு விருந்துக்கு அழைத்தல்
- தமிழ்நாட்டிலும் இலங்கையிலும் கொண்டாடும் முறையைப் பின்வரும் வகையில் நோக்கலாம்.
    - தலையில் எண்ணெய் இட்டு தாயாரின் அல்லது மனைவியின் கையால் நீராடல். எண்ணெயில் இலக்குமி வசிப்பதாகவும், நீராடும் வெந்நீரில் கங்கை வசிப்பதாகவும் நம்புவர்.
- பண்டிகையினூடாக,
    - கடவுள் வழிபாடு, நன்றி மறவாமை
    - குடும்பத்தினர் ஒன்றுகூடல்
    - விருந்துபசாரம் / கொடுத்துண்ணும் பண்பு
    - உறவினர் வீடுகளுக்கு விஜயம் செய்தல்
    - குதூகலச் செயற்பாடுகள் - புத்தாடை அணிதல், வாழ்த்துத் தெரிவித்தல், கலை நிகழ்ச்சிகள் என்னும் பண்புகள் வளர்க்கப் படுகின்றன.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- பண்டிகைகளுள் மூன்றைக் குறிப்பிடுவர்.
- பண்டிகைகளின்போது இடம்பெறும் செயற்பாடுகளில் பங்குகொள்வர்.
- ஏனைய பண்டிகைகள் எவ்வாறு கொண்டாடப்படுகின்றன என்பதைத் தேடி அறிவர்.
- சகல பண்டிகைகளையும் கொண்டாட முன்வருவர்.

இணைப்பு 1.6.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களின் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

1. தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்படுவதன் மூலம் பெறப்படும் பயன்களைக் குறிப்பிடுங்கள்.
2. தீபாவளிப் பண்டிகையின் மூலம் கடவுள் நம்பிக்கை எவ்வாறு வளர்க்கப்படுகின்றது என்பதைக் குறிப்பிடுங்கள்.
3. ஆடிப்பிறப்பு கொண்டாடுவதற்கான காரணத்தையும், கொண்டாடப்படும் காலம், முறை, அதனுடன் தொடர்புடைய பாடல் என்பவற்றையும் எழுதுங்கள்.

தேர்ச்சி 2.0 : கடவுள் நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றைப் பின்பற்றுவர்

தேர்ச்சி மட்டம் 2.1 : நாயன்மார் வரலாறுகளின் மூலம் கடவுள் நம்பிக்கையை மனதில் கொண்டு தம் வாழ்வில் பக்தியைக் கடைப்பிடிப்பர்.

செயற்பாடு 2.1 : சாக்கிய நாயனார் வரலாற்றின் மூலம் பக்தியின் மேன்மையை அறிந்து கொள்வோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 2.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- இணைப்பு 2.1.2 இல் உள்ள தகவற் கோவை
- எழுது கடதாசி
- நிறப் பேனா

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 2.1.1 :
- நாயன்மாரின் பக்தியை எடுத்துக் கூற மாணவர்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- பின்வரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - நாயன்மார் இறை நம்பிக்கையும், பக்தியும் கொண்டவர்கள்.
> - அவர்கள் இறை இருப்பினை மக்களுக்கு உணர்த்திய வர்கள்.
> - சைவசமய வளர்ச்சியில் நாயன்மார்களின் பங்கு சிறப்பானது.

(05 நிமிடங்கள்)

படி 2.1.2 :
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப்படிவம், தகவற் கோவை, எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்ப வற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் அவதானித்து நெறிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 2.1.3 :
- ஒவ்வொரு குழுவும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஒவ்வொரு குழுவுக்கும் இடமளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் வரவேற்கத்தக்க ஆலோசனை களை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.

- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்

> - சாக்கிய நாயனார் திருச்சங்கமங்கை என்னும் இடத்தில் பிறந்து வாழ்ந்தவர்.
> - பிறவித் துன்பத்திலிருந்து விடுபட வேண்டுமென் பதற்காக சைவத்திலிருந்து பௌத்த மதத்திற்கு மாறினார்.
> - சிவலிங்கத்திற்கு கல் எறிந்து வழிபட்ட பின்பே உணவு உட்கொள்ளும் வழக்கத்தைக் கொண் டிருந்தார்.
> - ஒருநாள் உண்ணமுன் கல் எறிந்து வழிபட மறந்ததால் உடனே கல் எடுத்து எறியச் சென்றார். அப்போது இறைவன் உமாதேவியுடன் காட்சி கொடுத்து அவரை ஆட்கொண்டார்.
> - அவர் மார்கழி மாதப் பூர நட்சத்தரத்தன்று முத்தி அடைந்தார்.
> - இந்திய தத்துவங்கள் பற்றிய ஆய்வின் முடிவில் சைவசமய தத்துவங்களே யாவற்றிலும் உண்மை யானவை என்னும் முடிவுக்கு வந்தார்.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சாக்கிய நாயனார் பற்றிய வரலாற்றுச் சுருக்கத்தைக் குறிப்பிடுவர்.
- சாக்கிய நாயனாரின் பக்தியை உணர்ந்து மதிப்பளிப்பர்.
- சாக்கிய நாயனாரின் வரலாற்றின் மூலம் உண்மைச் சமயம் சைவசமயமே என்பதை ஏனையவர்களுக்கு எடுத்துக் கூறும் திறனைப் பெறுவர்.
- இறைவனை அர்ப்பணிப்புடன் அணுகினால் அவனருள் கிட்டும் என்பதை ஏற்றுச் செயற்படுவர்.
- சாக்கிய நாயனார் போன்று, வன் பக்திக்குரிய நாயன்மாரின் கதைகளைத் தேடித் தொகுக்கும் முயற்சியில் ஈடுபடுவர்.

**இணைப்பு 2.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவிற்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களின் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

குழு - 1

1. சாக்கிய நாயனாரின் கதையை வாசித்த பின்னர் உங்கள் மனதில் தோன்றிய எண்ணங்களை வெளிப்படுத்துங்கள்.

குழு - 2

2. இவரது வரலாற்றினைக் கற்பதன் மூலம் "சைவசமயமே உண்மை" என்பதற்கு நீங்கள் முன்வைக்கும் காரணங்களைக் குறிப்பிடுங்கள்.

குழு - 3

3. சாக்கிய நாயனார், சமய ஆராய்ச்சியில் கண்டு தெளிந்த விடயங்களில் மூன்றினை எழுதுங்கள்.

குழு - 4

4. சாக்கிய நாயனாரின் வரலாற்றினைப் பின்வரும் தலைப்பின் கீழ் பகுத்து எழுதுங்கள்.
   1. சாக்கிய நாயனாரின் பிறப்பிடம்
   2. அவரிடம் காணப்பட்ட நற்பண்புகள்
   3. வழிபட்ட இறைவடிவம்
   4. வழிபட்ட முறை
   5. அவர் அடைந்த பேறு

**இணைப்பு 2.1.2**

## தகவற்கோவை

- பெரியபுராணம் புகழ்ந்து போற்றும் 63 நாயன்மார்களில் சாக்கிய நாயனாரும் ஒருவர் ஆவார்.
- தென்னிந்தியாவில் காஞ்சியை அடுத்துள்ள திருச்சங்கமங்கை என்ற ஊரில் சாக்கிய நாயனார் பிறந்தார்.
- மெய்ப்பொருள் ஆய்வில் ஈடுபட்ட அவர் பல செயற்பாடுகளை மேற்கொண்டு இறுதியில் உண்மைச் சமயம் எதுவெனக் கண்டறிந்தார்.

  சாக்கிய நாயனார் ஆராய்ச்சிகள் மூலமாகக் கண்டு தெரிந்த விடயங்கள் பலவாகும்.
  - (i) அழிவில்லாத சிவ நன்னெறியே (சைவசமயம்) உண்மையானது; ஏனையவை அவ்வாறானவை அல்ல.
  - (ii) ஆன்மா, கர்மம், கர்மத்தின் பலன், பதி என்பன சைவம் வலியுறுத்தும் நாற் பொருள்களாகும்.
  - (iii) எந்நிலையிலும் சிவபெருமானின் திருவடிகளை மறவாதிருத்தல் வேண்டும். அதற்குக் கோலம் ஒரு தடையல்ல.
  - (iv) அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்க வடிவம் - திருமால், பிரமன் ஆகிய இருவருக்கும் சோதி மலையாகக் காட்சியளித்த வடிவமாகும்.
- நாயனார் நாள்தோறும் சிவலிங்க தரிசனம் செய்து வழிபட்ட பின்னரே உண்பது என்ற கொள்கையை வாழ்வின் இறுதி வரை கடைப்பிடித்தார்.
- இறைவனுக்கு அன்புடன் செய்யும் எச்செயலும் விருப்பை அளிக்கும்; அதற்காக அடியவர்க்கு இறைவன் முத்திப்பேற்றினை அளிப்பான் என்பது இப்பாடம் உணர்த்தும் உண்மைப் பொருளாகும்.

தேர்ச்சி 3.0 : திருமுறைப்பாடல்கள், பாசுரங்கள், தோத்திரப்பாடல்கள் ஆகியவற்றைப் பக்தியோடும், பண்ணோடும் பாடுவர்.

தேர்ச்சி மட்டம் 3.1 : திவ்விய பிரபந்தங்களைப் பக்தியோடும், பண்ணோடும் பாடுவர்.

செயற்பாடு 3.1 : நாலாயிரத் திவ்விய பிரபந்தம் பற்றி அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 3.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்
- ஒலிப்பேழை

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 3.1.1 :
- உங்களுக்குத் தெரிந்த நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாடல்களுள் ஒன்றினைப் பாடுங்கள் எனக் கூறி அவர்கள் பாடுவதற்கு இடமளியுங்கள்.
- இப்பாடலை எழுதிக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழேவரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

| |
|---|
| • நாலாயிரத் திவ்விய பிரபந்தம் தமிழ் நாட்டு வைணவர்களுக்கு முதன்மை வாய்ந்ததாகும்.<br>• நாலாயிரத் திவ்விய பிரபந்தங்களைப் பாடிய வர்கள் பன்னிரு ஆழ்வார்கள் ஆவர். |

(05 நிமிடங்கள்)

படி 3.1.2 :
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்விற்கான செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் அவதானித்து மேற்பார்வை செய்யுங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 3.1.3 :
- ஒவ்வொரு குழுவும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஒவ்வொரு குழுவுக்கும் இடமளியுங்கள்.

- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

| |
|---|
| • நாலாயிரத் திவ்விய பிரபந்தம், ஸ்ரீதிவ்விய பிரபந்தம், தமிழ் வேதம் எனும் மறு பெயர்களால் அழைக்கப்படுகின்றது.<br>• நாலாயிரத் திவ்விய பிரபந்தம் என்னும் நூல் ஸ்ரீ நாத முனிவரால் தொகுக்கப்பட்டது.<br>• தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய "குடதிசை முடியை வைத்து......" என்ற பாடலைக் கற்போம்.<br>• தொண்டரடிப் பொடியாழ்வார் விஷ்ணுவின் அருள் பிரவாகத்தைப் போற்றி திருமாலை, திருப்பள்ளி யெழுச்சி எனும் பாசுரங்களைப் பாடியுள்ளார்.<br>• தமிழ் நாட்டுத் தென்கலை வைணவர்களுக்கு நாலாயிரத் திவ்விய பிரபந்தம் முதன்மை நூலாக அமைகிறது. |

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- பன்னிரு ஆழ்வார்களில் மூவரின் பெயர்களைக் குறிப்பிடுவர்.
- பன்னிரு ஆழ்வார்களின் பாசுரங்களைப் பாடி அவற்றுக்கு மதிப்பளிப்பர்.
- "குடதிசை முடியை வைத்து" என்ற பாடலை மனனம் செய்து பாடுவர்.
- தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய ஏனைய பாசுரங்களைக் குழுவாகச் சேர்ந்து தேடியறிவதில் ஈடுபடுவர்.
- ஆழ்வார் பாசுரங்களைத் திருமால் ஆலயங்களில் பாட முன்வருவர்.

**இணைப்பு 3.1.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களின் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

| |
|---|
| 1. திருமுறைக்கும் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்திற்கும் உள்ள தொடர்புகளை எடுத்துக்காட்டுங்கள்.<br>2. நாலாயிரத் திவ்விய பிரபந்தங்களைப் பாடியவர்களைக் குறிப்பிட்டு, அவர்கள் பாடிய நூல்களை நிரற்படுத்துங்கள்.<br>3. தொண்டரடிப் பொடியாழ்வார் பாடல்களைக் கற்பதன் மூலம் நீர் அறிந்து கொள்ளும் சமய, சமூக கருத்துக்களைக் குறிப்பிடுங்கள். |

தேர்ச்சி 3.0 : திருமுறைப்பாடல்கள், பாசுரங்கள், தோத்திரப்பாடல்கள் ஆகியவற்றைப் பக்தியோடும், பண்ணோடும் பாடுவர்.

தேர்ச்சி மட்டம் 3.1 : தோத்திரப் பாடல்களைப் பக்தியோடும் இசையோடும் பாடுவர்.

செயற்பாடு 3.1 : தோத்திரப் பாடல்களைப் பக்தியோடும், இசையோடும் பாடுவோம்.

நேரம் : 200 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 3.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி
- நிறப் பேனாக்கள்
- ஒலிப்பேழை

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 3.1.1 :

- "உங்களுக்குத் தெரிந்த தோத்திரப் பாடல்களைப் பாடுங்கள்" எனக் கூறி அவர்கள் பாடுவதற்கு இடமளியுங்கள்.
- தோத்திரப் பாடல்களை எழுதிக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழேவரும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - அபிராமிப்பட்டரால் அபிராமி அந்தாதி பாடப்பட்டது.
>   உ-ம்: "ஆத்தாளை எங்கள்......"
> - குமரகுருபரர் பாடிய நூல்களில் சகலகலா வல்லி மாலையும் ஒன்றாகும்.
>   உ-ம்: "பண்ணும் பரதமும்......"
> - கந்தபுராணம் கச்சியப்ப சிவாச்சாரியாரால் பாடப்பட்டது.
>   உ-ம்: "அருவமு முருவு மாகி......"
> - அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடப்பட்டது.
>   உ-ம்: "பக்தியால் யானுனைப்......"
> - கந்தர் அநுபூதி அருணகிரிநாதரால் பாடப்பட்டது.
>   உ-ம்: "உருவாய் அருவாய்......"
> - பராபரக்கண்ணி எனும் நூல் தாயுமானவரால் பாடப்பட்டது. உ-ம்:
>   1. "சிந்தித்த வெல்லாமென்......"
>   2. "வந்தித்து நின்னை......"
>   3. "எவ்வுயிரு மென்னுயிர்போ......"
>   4. "கெட்டவழி யாணவப்பேய்......"
>   5. "மூர்த்தி தலந் தீர்த்தம்......"
> - இவை தோத்திரப் பாடல்கள் ஆகும்.

**(25 நிமிடங்கள்)**

படி 3.1.2 :

- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்விற்கான செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினரையும் செயற்பாட்டில் ஈடுபட வழிப்படுத்துங்கள்.

(75 நிமிடங்கள்)

படி 3.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஒவ்வொரு குழுவுக்கும் இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- தோத்திரம் என்பது இறைவனைப் போற்றிப் பாடும் பாடல்கள் ஆகும்.
- பன்னிரு திருமுறைகளுக்குப் பின் இறை அடியார்கள் இறைவன் மீது பிரபந்தங்களாகவும், தனிப் பாடல்களாகவும், பல தோத்திரப் பாடல்களைப் பாடி உள்ளனர்.
- தோத்திரப் பாடல்களுக்கு எடுத்துக்காட்டாக,
  - கந்தபுராணம்
  - திருப்புகழ்
  - கந்தர் அநுபூதி
  - சகலகலாவல்லிமாலை
  - அபிராமி அந்தாதி
  - பராபரக்கண்ணி

  முதலானவற்றைக் குறிப்பிடலாம்.
- கந்தபுராணம் கச்சியப்ப சிவாசாரியாரால் பாடப் பட்டது.
- கந்தபுராணம் முருகனின் பிறப்பு, வளர்ப்பு, திரு விளையாடல், சூரபத்மனுடன் நிகழ்த்திய போர், தெய்வயானை திருமணம், வள்ளி திருமணம் முதலான விடயங்களைப் பொருள் மரபாகக் கொண்டுள்ளது.
- திருப்புகழ் சந்தப் பாடல்களால் பாடப்பட்ட பதினாறாயிரம் பாடல்களைக் கொண்டதாகும்.
- முருகப் பெருமானிடம் இம்மை, மறுமைப் பேறுகளை வேண்டாது வெறுத்து, மெய்யுணர்வும், வீடுபேறு வேண்டிப் பாடிப் பரவுதலை நோக்காகக் கொண்டு பாடப்பட்டது.
- கலைமகளின் அருளை வேண்டிப் பாடப்பட்டது சகலகலாவல்லிமாலை ஆகும். இதில் நூறு பாடல்கள் உள்ளன.

(100 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- தோத்திரப் பாடல்கள் நான்கினைக் குறிப்பிடுவர்.
- தோத்திரப் பாடல்களைப் பாடுவோர்க்கு மதிப்பளிப்பர்.
- தோத்திரப் பாடல்களை மனனம் செய்து பாடுவர்.
- ஏனைய தோத்திரப் பாடல்களைத் தேடியறிவதில் குழுவாக ஈடுபடுவர்.
- தோத்திரப் பாடல்கள் இறை வெளிப்பாடு என்ற வகையில், அவற்றைப் பொருத்தமான இடங்களில் பாடுவர்.

**இணைப்பு 3.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களின் முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப் படிவம்**

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

1. தோத்திரப் பாடல்களைப் பாடியருளிய பக்தர்களைக் குறிப்பிடுங்கள்.
2. தோத்திரப் பாடல்களுள் அடங்கும் பாடல்களை எடுத்துக் கூறுங்கள்.
3. பொதுமக்களின் முன் சைவசித்தாந்தக் கருத்துக்களை எடுத்துச் சொல்வதில் கந்தபுராணத்தின் முக்கியத்துவத்தினை எழுதுங்கள்.
4. முருகப்பெருமானின் பெருமைகளை எடுத்துக் கூறும் தோத்திரப் பாடல்களைக் குறிப்பிட்டு, அவற்றைப் பாடியவர்களையும் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 3.0 : திருமுறைப்பாடல்கள், பாசுரங்கள், தோத்திரப்பாடல்கள் ஆகியவற்றைப் பக்தியோடும், பண்ணோடும் பாடுவர்.

தேர்ச்சி மட்டம் 3.2 : சமய இலக்கியங்களில் இடம்பெறும் புராண இதிகாசக் கதைகள், நாட்டார் வழக்காறுகள், தத்துவங்கள் முதலிய வற்றை இனங்கண்டு அவை பற்றித் தொகுத்தும் வகுத்தும் விபரிப்பர்.

செயற்பாடு 3.2 : சமய இலக்கியங்களில் காணப்படும் புராண இதிகாசக் கதைகள், நாட்டார் வழக்காறுகள், தத்துவங்கள் முதலிய வற்றை இனங் காண்போம்.

நேரம் : 120 நிமிடங்கள்

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 3.2.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- இணைப்பு 3.2.2 இல் உள்ள தகவல் கோவை
- பாடல்கள் எழுதப்பட்ட அட்டைகள்
- எழுது கடதாசி, நிறப் பேனா

**கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு** :

படி 3.2.1 :

- குறிப்பிட்ட சமய இலக்கியங்களில் காணப்படும் கதை களைக் கூறி, அது பற்றிக் கருத்துக் கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- "இராவணன் மேலது நீறு" என்ற பாடலைக் கரும்பலகை யில் எழுதி, அதற்கும் இதிகாசக் கதைக்குமுள்ள தொடர்பு பற்றிக் கருத்துக் கூற இடமளியுங்கள்.
- சமய இலக்கியங்களில் காணப்படும் முக்கிய விடயங்கள் தொடர்பாகப் பின்வரும் அடிப்படையில் கலந்துரையாடலை மேற்கொள்ளுங்கள்.

> - சமய இலக்கியங்களில் புராண இதிகாசக் கதைகள், தத்துவங்கள், நாட்டார் வழக்காறுகள் என்பன வெளிப்படுத்தப்பட்டுள்ளன
> - சமய இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள புராண இதிகாசக் கதைகள், தத்துவங்கள், நாட்டார் வழக்காறுகள் என்பன சைவ மக்களிடையே பக்தி உணர்வினையும் இறை நம்பிக்கையினையும் மேலோங்கச் செய்கின்றன.

(15 நிமிடங்கள்)

படி 3.2.2 :
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் இணைப்பு 3.2.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவத்தின் பிரதி, தகவற் கோவையின் பிரதி, எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபட நெறிப் படுத்துங்கள்.

(45 நிமிடங்கள்)

படி 3.2.3 :
- ஒவ்வொரு குழுவும் தமது அறிக்கைகளை முன்வைக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஒவ்வொரு குழுவுக்கும் இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சமய இலக்கியங்களில் புராண இதிகாசக் கதைகள், தத்துவங்கள், நாட்டார் வழக்காறுகள் என்பன வெளிப்படுத்தப்படுகின்றன.
- நாயன்மார்கள் சைவத்தின் தொன்மையையும் மேன்மையையும் தத்துவங்களையும் இலகுவாக மக்கள் புரிந்து கொள்வதற்காக இவற்றை எடுத்தாண்டனர்.
- புராணம் என்பதற்குப் பழைமை என்பது கருத்து. இறைவன், தேவர் உலகு, பூவுலகு, ஞானிகள், அரசுகள் ஆகியவற்றைப் பற்றிய கதைகளைப் புராணங்கள் உள்ளடக்கி உள்ளன.
- புராணங்கள் சிவ பக்தியை வளர்ப்பன. சமய உண்மைகளை மனதில் நன்றாகப் பதிய வைப்பன.
- இதிகாசம் என்பது, இது இவ்வாறு முன்பு நடந்தது என்னும் பொருளை உடையது. அரச குலங் களினதும், தேவர்களினதும், வரலாறுகளைக் கூறுவது. பெரும்பாலும் உபதேச பரம்பரை யில் வந்த ஒரு கதையைப் பிரதானமாகக் கொண்டு, பல கிளைக் கதைகளோடு சேர்த்து விரித்துக் கூறும்.
- கிராமிய மக்களிடம் தொன்று தொட்டு வரும் வழமைகள் நாட்டார் வழக்காறாகும்.
- சமய இலக்கியங்களில் புராணக் கதைகள் காணப்படுகின்றன.

  உ-ம்:
  - "கடிதென வந்த....." (தேவாரம்) இறைவன் யானைத் தோல் போர்த்தமை.
  - "பனித்திளங் கங்கை....." (தேவாரம்) கங்கையைச் சடையில் வைத்தமை.

- "விருது குன்ற....." (தேவாரம்)
  முப்புரங்களை அழித்தமை.
- "பாலுக்குப் பாலகன் வேண்டி......"
  (திருப்பல்லாண்டு)
  உபமன்யுக்கு பாற்கடலை ஈந்தமை.

- சமய இலக்கியங்களில் இதிகாசக் கதைகள் காணப்படுகின்றன.
  உ-ம்:
  - "எடுத்தவன் தருக்கை....." (தேவாரம்)
    இராவணனது அகந்தையை நீக்கியது.
  - "அடுத்தானை உரித்தானை....." (தேவாரம்)
    அருச்சுனனுக்குப் பாசுபதம் வழங்கியது.
- சமய இலக்கியங்களில் தத்துவக் கருத்துக்களும் காணப்படுகின்றன.
  உ-ம்:
  - "அப்பணி....." (திருமந்திரம்)
    முப்புரங்களைஅழித்தமை, மும்மலங்களை அழித்தலைக் குறிக்கும்.
  - "நமச்சிவாய வாழ்க....." (சிவபுராணம்)
    ஏகன் அநேகன்......
    கடவுளின் இரு நிலைகள் கூறப்படுகின்றன.
- சமய இலக்கியங்களில் நாட்டார் வழக்காறுகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.
  உ-ம்:
  - "திருக்கோயில்....." (தேவாரம்)
    கோயில் இல்லாத ஊரில் குடி இருத்தலாகாது.
  - "நீறில்லா நெற்றி பாழ்......"
    திருநீறு அணிவதன் அவசியம் கூறப்படு கின்றது.

(60 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:

- புராணம் என்பதன் பொருள் விளக்கத்தைக் குறிப்பிடுவர்.
- சமய இலக்கியங்களில் காணப்படும் புராண இதிகாசக் கதைகள், தத்துவங்கள், நாட்டார் கூறுகள் முதலியவற்றை தேடித் தொகுப்பர்.
- சமய இலக்கியங்களில் கற்றவற்றை அடிப்படையாகக் கொண்டு அவற்றின் சிறப்புக் களைத் தொகுத்துக் குறிப்பிடுவர்.
- ஏனைய இலக்கியங்களில் காணப்படும் மேற்படி சிறப்பியல்புகளை இனங்கண்டு கூறுவர்.

இணைப்பு 3.2.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- தரப்பட்டுள்ள சமய இலக்கியம் தொடர்பாகக் கவனத்தைச் செலுத்துங்கள்.
- உங்களுக்குக் கிடைத்த சமய இலக்கியங்களில் புராண இதிகாசக் கதைகள், தத்துவங்கள், நாட்டார் வழக்காறுகள் உள்ளனவா என அறியுங்கள்.
- கதைகளின் சுருக்கங்களை ஒழுங்குபட எழுதுங்கள்.
- குழுக்களின் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

1. "சமய இலக்கியங்களில் புராணக்கதைகள் எடுத்தாளப்பட்டுள்ளன" இதனை விளக்குங்கள்.
2. உங்களுக்குத் தெரிந்த சமய இலக்கியங்களில் காணப்படும் இதிகாசக் கதைகளைத் தொகுத்துக் குறிப்பிடுங்கள்.
3. சமய இலக்கியங்களில் காணப்படும் தத்துவங்களைத் தொகுத்து எழுதுங்கள்.
4. சமய இலக்கியங்களில் காணப்படும் நாட்டார் வழக்காற்றுக் கூறுகளை இனங்கண்டு குறிப்பிடுங்கள்.

இணைப்பு 3.2.2

| சமய இலக்கியம் | பாடியவர் | பாடலடி | கதை | விளக்கும் விடயம் |
|---|---|---|---|---|
| தேவாரம் திருக்கோணேச்சரப் பதிகம் | சம்பந்தர் | "கடிதென வந்த..." | இறைவன் யானைத்தோல் போர்த்தியமை. | புராணக்கதை |
| தேவாரம் திருக்கோணேச்சரப் பதிகம் | சம்பந்தர் | "பழித்திளங் கங்கை..." | கங்கையைச் சடையில் வைத்தமை. | புராணக்கதை |
| | | | மன்மதனைப் பொடியாக்கியது | புராணக்கதை |
| | | | மன்மதனின் மனைவி வேண்ட, அவனை அநங்கனாக்கியது. | புராணக்கதை |
| | | "எடுத்தவன் தருக்கை..." | இராவணனது அகந்தையை நீக்கியது | இதிகாசக் கதை |
| | | | வேள்வி தடுத்தவர் | புராணக்கதை |
| தேவாரம் திருக்கேதீச்சரப் பதிகம் | சம்பந்தர் | "விருதுகுன்ற..." | முப்புரங்களை அழித்தமை | புராணக்கதை |
| திருமந்திரம் | திருமூலர் | "அப்பணி..." | முப்புரங்களை அழித்தமை மும்மலங்களை அழித்தலைக் குறிக்கும். | தத்துவம் |
| சிவபுராணம் | மாணிக்க வாசகர் | "நமச்சிவாய வாழ்க.. ஏகன் அநேகன்..." | கடவுளின் இருநிலைகள் | தத்துவம் |
| திருப்பல்லாண்டு | சேந்தனார் | "பாலுக்குப் பாலகன் வேண்டி..." | உபமன்யுவுக்கு பாற்கடலை ஈந்தமை | புராணக்கதை |
| | | | திருமாலுக்குச் சக்கராயுதம் வழங்கியமை. | புராணக்கதை |
| | | "அடுத்தானை உரித்தானை..." | அருச்சுனனுக்குப் பாசுபதம் வழங்கியது. | இதிகாசக் கதை(பாரதம்) |
| தேவாரம் | நாவுக்கரசர் | "திருக்கோயில்..." | கோயில் இல்லாத ஊரில் குடி இருத்தலாகாது. | நாட்டார் வழக்காறு |
| | ஔவையார் | "நீறில்லா நெற்றிபாழ்..." | திருநீறு அணிவதன் அவசியம் | நாட்டார் வழக்காறு |

**இணைப்பு 3.2.3**

(1) விருது குன்றமா மேருவில் நாணரா
வா அனல் எரியம்பாப்
பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின்
றுறைபதி யெந்நாளும்
கருது கின்றவூர்க் கனைகடற் கடிகமழ்
பொழிலணி மாதோட்டம்
கருத நின்றகே தீச்சரங் கைதொழக்
கடுவினை யடையாவே.

**முப்புரங்களை அழித்தமை**

தாரகாட்சன், கமலாட்சன், வித்தியுன்மாலி என்னும் மூன்று அசுரர்கள் பொன், வெள்ளி, இரும்பினால் ஆகிய மூன்று கோட்டைகளை அமைத்துக் கொண்டு தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் துன்பம் விளைத்தனர். சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திர சூரியர்களைச் சக்கரங்களாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைத் தேரோட்டு பவனாகவும், மேருமலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், திருமாலை அம்பாக வும் கொண்டு அசுரர்களின் மூன்று கோட்டைகளையும் சிரித்து எரித்தார்.

மும்மலங்களை அழித்தலையே இவ்வாறு கூறப்பட்டதென்பதனை,

(2) "அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும் மலகாரியம்
அப்புரம் எய்தமை ஆரறிவாரே"

என்னும் திருமந்திரத்தில் அறியலாம்.

(3) கடிதென வந்த கரிதனை யுரித்து
அவ்வுரி மேனி மேற்போர்ப்பர்
பிடியன நடையாள் பெய்வளை மடந்தை
பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமுன் நித்திலஞ் சுமந்து
குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமா மலையமர்ந்தாரே.

சிவபெருமான் யானைத்தோல் உரித்துப் போர்த்தமை, பாம்பணிந்தமை முதலாய எட்டு வீரச்செயல்கள் வீரட்டானங்கள் எனப்படும்.

**யானைத்தோல் போர்த்தமை**

கயாசுரன் என்பவன் யானை வடிவினன். அவன் பிரமதேவனை வணங்கிப் பல வரங்களைப் பெற்றுத் தேவர்களைத் துன்புறுத்தி வந்தான். தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டுப் புலம்ப அவர் ஆயிரகோடி சூரியப் பிரகாசத்தோடு கூடிய திருவுருவெடுத்துக் கயாசுரனை உதைத்து விழுத்திக் கொன்றார். அவனுடைய திருமேனியின் திவ்விய ஒளியைக்கண்டு தேவர்கள் கண் ஒளி மழுங்கியதால் சிவபிரான் யானையை உரித்துத் தோலால் தமது திருமேனியைப் போர்த்துப் பேரொளியை மாற்றினார்.

(4) பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப்
பாங்குடை மதனனைப் பொடியா
விழித்தவள் தேவி வேண்டமுன் கொடுத்த
விமலனார் கமலமார் பாதர்
தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ்
செம்பொனு மிப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங்
கோணமா மலையமர்ந் தாரே.

பாங்குடை மதனனைப் பொடியா விழித்தமை

சூரபன்மன் ஆகியோர் தேவரைத் துன்புறுத்திய காலத்தில் சூரனாதியரை அழிக்கத் தம்மிடை ஒருபாலகன் தோன்றுவான் என இறைவன் தேவருக்கு அருள் செய்தார். அதற்குள் சனகர் முதலாய பெரிய முனிவர்கள் ஞானப்பொருளை உணர்த்தியருள வேண்டுமென இறைவரிடம் முறையிட்டார்கள். இறைவன் முனிவர்களுக்குத் தத்துவ ஞானத்தை அறிவுறுத்த வேண்டி ஞானமுத்திரை தாங்கி மோன நிலையிலிருந்தருளினார். இறைவனுடைய மோனநிலையைக் கலைத்தாலன்றி அவர் பாலன் தோன்ற அருள் செய்யார் என எண்ணிய இந்திரன் பிரமன் ஆகிய தேவர்கள் மன்மதனை அழைத்து அவனுடைய பாணங்களாற் பெருமானது மோனநிலையைக் குலைக்க வேண்டினர். அவன் அதற்கு அஞ்சி ஒருப்படாது அகல, அதுகண்ட பிரமன் மன்மதனைச் சபிப்பேனென்றான். பிரமனுடைய சாபத்திலும் இறைவனால் அழிவதே மேலான முடிவு என மன்மதன் இறைவன் மீது தனது மலரம்புகளை எய்தான். இறைவன் மோனநிலை நீங்கி, நெற்றிக் கண்ணைச் சிறிது திறக்க, மன்மதன் நீறாகி மாண்டான்.

அவன்தேவி வேண்டமுன் கொடுத்த விமலனார்

தன்கணவன் இறந்தமை கண்டு வருந்திய இரதி பலவாறாகப் புலம்பி தேவர்களைக் குறை சொல்லி அழுதாள். தேவர்களும் இரங்கி இறைவனைத் துதித்தார்கள். இறைவன் அவர்கள் மேல் இரங்கித் திருநந்தி தேவரைக் கொண்டு அவர்களைத் தம்முன் அழைப்பித்து அருள் செய்தார். அவர்கள் அருள்பெற்றுப் போன பின் இரதி இறைவனை வணங்கித் தன் குறையைச் சொல்லி அழுதாள். "சுவாமி! இந்திரன், பிரமா முதலிய தேவர்களின் ஏவுதலினாலே என் நாயகன் பிழை செய்தான். அதனைப் பொறுத்தருள வேண்டும்" என்றாள். அதற்கு இறைவன் கருணை கொண்டு "இரதியே நீ புலம்பாதொழி, நாம் இமயமலை மீது சென்று உமையை விவாகஞ் செய்யும் பொழுது உன் நாயகனை உயிர்ப்பித்தருளுவோம், நீ போகக்கடவாய்" என்று அருளிச் செய்தார்.

பின்னர் இறைவன் திருக்கல்யாணத்தின்போது மன்மதன் வந்துதிக்கும் வண்ணம் திருவுளங் கொண்டருளினார். உடனே மன்மதன் தோன்றிச் சிவபெருமானை வணங்கித் துதித்தான். இறைவன் மன்மதனை நோக்கி "நம்முடைய அக்கினிக் கண்ணினாலே உன் சரீரம் எரிந்து சாம்பராயிற்று. அது கண்டு உன் மனைவியாகிய இரதி உன்னை உயிர்ப்பிக்கும் பொருட்டு நம்மைப் பிரார்த்தித்தாள். நீ அவளுக்கு மாத்திரம் உருவமாயிருக்கக் கடவாய்; மற்றைத் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் அருவமாயிருந்து கொண்டு உன்னரசியலை நடாத்தக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தார். அதனால் உருவமில்லாத அவன் அநங்கன் எனப்பட்டான்.

(5) எடுத்தவன் றருக்கை யிழித்தவர் விரலா
லேத்திட வாத்தமாம் பேறு
கொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு
மிறப்பறி யாதவர் வேள்வி
தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை
தன்னருட் பெருமையும் வாழ்வுங்
கொடுத்தவர் விரும்பும் பெரும்புக ழாளர்
கோணமா மலையமர்ந் தாரே.

வேள்வி தடுத்தவர்

தக்கன் என்பவன் பிரமதேவனின் மைந்தன். பெருந் தவஞ் செய்து உமாதேவியாரைத் தனக்கு மகளாகப் பெற்றுத் தாட்சாயிணி எனப் பெயரிட்டு வளர்த்துச் சிவபெருமானுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தவன். இறைவன் தனது மருமகன். தானே என்றெண்ணிய தக்கன் இறைவனைப் புறக்கணித்துப் பெரிய யாகம் ஒன்றைச் செய்தான். அதிலே தாட்சாயிணியைக் கூட அவன் மதிக்கவில்லை. அதனாற் சினங்கொண்ட சிவபெருமானின் நெற்றிக் கண்ணினின்றும் வீரபத்திரர் தோன்றித் தக்கனின் யாகத்தை அழித்தார். பின் அங்கிருந்தவர் எல்லோரையும் அடித்துத் துரத்தித் தக்கனின் தலையையும் வெட்டினார். பின்னர் கருணையினாலே யாகத்தில் வெட்டப்பட்டுக் கிடந்த ஓர் ஆட்டின் தலையை தக்கனின் கழுத்தில் பொருத்தி அவனை எழுப்பி அருள் செய்தார்.

(6) அடுத்தானை உரித்தானை அருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சுனைமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை என்மனத்தே வைத்தேனே.

அருச்சுனனுக்குப் பாசுபதம் கொடுத்தமை

உலக மாதாவாகிய உமாதேவியார் அருச்சுனனுக்கு உதவி செய்யவேண்டும் என்று சிவபெருமானிடம் கேட்டார். சிவன் தன்னை வேடுவனாக்கிக் கொண்டார். இறைவியை வேடுவிச்சியாக மாற்றினார். இருவரும் அருச்சுனன் தவஞ் செய்யும் இடத்துக்கு வந்தனர்.

அப்பொழுது காட்டுப்பன்றி ஒன்று அருச்சுனனைத் தாக்க வந்தது. இறைவன் பன்றி மீது அம்பு ஒன்றினை ஏவினார். அருச்சுனனும் தனது வில்லை வளைத்து நாண் ஏற்றி அம்பினைத் தொடுத்தான். இருவர் அம்பும் பன்றி மீது தைத்துப் பன்றி இறந்தது.

“வேடனே நீ யார்? நான் அம்பெய்து வீழ்த்திய பன்றியின் மீது நீ எவ்வாறு அம்பெய்யலாம்” என்று வேடனை அதட்டிக் கேட்டான் அருச்சுனன்.

“இது என்னுடைய வனம். நீ வெளியிலிருந்து வந்தவன். நான் அம்பெய்து வீழ்த்திய பன்றியின் மீது நீயும் அம்பெய்தாயே வெட்கமற்றவனே” என்று வேடன் பதிலளித்தான்.

அருச்சுனனுக்கு அடங்காத கோபம் வந்தது. கொடிய பாணங்களை அவ்வேடன் மேற் செலுத்தினான். அந்த அம்பு மாரி சிவபெருமானாகிய வேடன் மேல் விழுந்து ஒன்றும் செய்யவில்லை. அம்புகளெல்லாம் முடிந்தன. வில் மட்டுமே அருச்சுனன் கையில் இருந்தது. வில்லால் ஓங்கி வேடனுக்கு அடித்தான் அருச்சுனன். வேடன் அவன் கையிலிருந்த வில்லைப் பிடுங்கிச் சிரித்தான். அருச்சுனனுக்கு ஒரே திகைப்பு கத்தியை உருவிச் சண்டை செய்தான். கத்தி துண்டு துண்டாய் உடைந்தது. கற்களை வீசிச் சண்டை செய்தான். வேடனை அவை ஒன்றும் செய்யவில்லை. வேடனோடு மல்யுத்தம் செய்தான். வேடன் அருச்சுனனை இறுகக் கட்டிப் பிடித்தான். அருச்சுனனால் அசைய முடியவில்லை.

அப்பொழுதுதான் வந்திருப்பது வெறும் வேடனல்லன். இறைவனும் இறைவியுமே வேட்டுவ உருவத்தில் வந்திருக்கின்றார்கள் என்று அறிந்தான். வேடன் மறைந்தான். சிவபெருமான் தோன்றினார். வேடனாக வந்த சிவபெருமானுடைய காலில் வீழ்ந்து தனது குற்றத்தைப் பொறுக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான்.

சிவனும் அவனுக்கு அருள் புரிந்தார். அவனிடமிருந்து பறித்த வில்லையும் அம்புகளையும் அவனிடம் திருப்பிக் கொடுத்தார். பாசுபத அஸ்திரத்தையும் அவனுக்குக் கொடுத்தார். அந்த அஸ்திரமே பாரதப் போரில் அருச்சுனனுக்கு வெற்றியைத் தந்தது.

(7) பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கட லீந்த பிரான்
மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன் மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கு மந்தணர் வாழ்கின்ற சிற்றம்பலமே யிடமாகப்
பாலித்துநட்டம் பயில வல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

- திருப்பல்லாண்டு -

**பாற்கடலீந்தமை:**
ஒருநாள் வியாக்கிரபாதர் சிதம்பர நடராசப் பெருமானுக்குப் பூசை செய்யும்போது, நெடுநேரமாகத் தியானத்திலாழ்ந்திருந்தார். அப்பொழுது அவரது மகன் உபமந்யு பசியால் வருந்தித்துடித்து அழுதார். அதனைக் கண்டிரங்கிய சிவபெருமான் பாற்கடலை வரவழைத்து உண்ணக் கொடுத்துப் பசியைத் தீர்த்தருளினார்.

**மாலுக்குச் சக்கரம் அருளியமை:**
திருமால், சிவபெருமானிடம் சக்கராயுதம் பெறக் கருதி நாடோறும் ஆயிரந் தாமரை மலர் கொண்டு, அருச்சித்துப் பூசித்து வந்தார். ஒருநாள் ஆயிரந் தாமரைமலருக்கு ஒன்று குறைவது கண்டு, தமது தாமரை மலர்போலுங் கண்களில் ஒன்றைப் பிடுங்கிச் சிவபெருமானுடைய திருவடிகளிற் சாத்தி வழிபட்டார். அதற்கு மகிழ்ந்த சிவபெருமான் அன்றே அவருக்குச் சங்கராயுதத்தைக் கொடுத்தருளினார்.

தேர்ச்சி 3.0 : திருமுறைப் பாடல்களையும் பாசுரங்களையும் பக்தியோடும் பண்ணோடும் பாடுவர்.

தேர்ச்சி மட்டம் 3.3 : கந்த புராணத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட பாடல்களை அடிப்படையாகக் கொண்டு சமய உணர்வுகளை விருத்தி செய்வர்.

செயற்பாடு 3.3 : "முருகப் பெருமான் திருப்பெருவடிவம் எடுத்த கதையினை அறிவோம்"

நேரம் : 280 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 3.3.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி, நிறப் பேனா

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 3.3.1 :
- தமிழ்ப் புராணத்தில் கந்த புராணத்தின் சிறப்பினைப் பற்றிக் கூறுவதற்கு மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- கந்தபுராணத்தின் பல்வேறு அம்சங்களையும் பற்றிக் கலந்துரையாடுங்கள்.
- பின்வரும் விடயங்களை எடுத்துரைக்கும் வகையிலான கலந்துரையாடலை நிகழ்த்துங்கள்.

> - புராணம் என்பது புராதனம், பழமை என்ற கருத்துக்களைத் தரும்.
> - வடமொழியில் எழுந்த ஸ்கந்த புராணத்தின் சங்கரசங்கிதை என்ற பகுதியை கச்சியப்ப சிவாசாரியார் தமிழில் கந்தபுராணமாகப் பாடியுள்ளார் என்பர்.
> - கந்தபுராணம் முருகப்பெருமானின் பெருமையைக் கூறுகின்றது.
> - நன்றி மறத்தலால் வரும் கேடு பற்றி, கந்த புராணம் விளக்குகின்றது.

(35 நிமிடங்கள்)

படி 3.3.2 :
- வகுப்பிலுள்ள மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் இணைப்பு 3.3.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவையும் செயற்பாட்டில் ஈடுபடுத்துங்கள்.
- எல்லாக் குழுக்களும் அறிக்கை சமர்ப்பிக்க ஏற்றவாறு ஆயத்தம் செய்யுங்கள்.

(105 நிமிடங்கள்)

படி 3.3.3 :

- அறிக்கையைச் சமர்ப்பிக்க, குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- சமர்ப்பித்த குழுவின் ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- ஏனைய குழுக்களும் தங்கள் ஆக்கபூர்வமான கருத்துக்களை வழங்க இடமளியுங்கள்.
- எல்லாக் குழுக்களின் அறிக்கைகளைத் தொகுக்கும் வகையில் கீழ்க் குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- முருகன் "திகட சக்கரம்" என அடியெடுத்துக் கொடுக்க கந்தபுராணத்தைக் கச்சியப்பச் சிவாச்சாரியார் பாடினார்.
- உலகம் உவந்தேத்தும் கந்தபுராணம் சிவனும் முருகனும் ஒன்று எனும் கோட்பாட்டைச் சித்தரிக்கும் பகுதி என்பதால் இந்நூல் சிவநூல் எனக் கூறப்படும்.
- முருகப் பெருமானுக்கும் சூரபன்மனுக்கும் இடையில் நடைபெற்ற போர் கந்தபுராணத்தில் யுத்தகாண்டம் எனப்படும்.
- 'திருப்பெருவடிவம்' என்ற பகுதி இந்நூலின் யுத்த காண்டத்தில் உள்ளது.
- **நூல் அமைப்பு**

  இந்நூல் 6 காண்டங்களையும் 10346 விருத்தப் பாக்களையும் கொண்டது.

  1. உற்பத்திக் காண்டம்
  2. அசுர காண்டம்
  3. மகேந்திர காண்டம்
  4. யுத்த காண்டம்
  5. தேவ காண்டம்
  6. தட்ச காண்டம்
- **முன்கதைச் சுருக்கம்**

  முருகனுக்கும் சூரனுக்கும் இடையில் இடம்பெற்ற போரில் சூரபன்மன் அனைத்தையும் இழந்து போர் செய்ய பல்வேறு தந்திரங்களையும், மாய வடிவங்களையும் எடுத்தான். முருகன் அவனுக்குத் தோல்விகளைக் கொடுத்து, தளர்வுறச் செய்தார். பின்னர் நல் உணர்வு கொடுத்து தனது திருப்பெரு வடிவத்தைக் காட்டினார். அவன் திரும்பவும் போர் செய்தான். முருகன் அவனின் மாய வடிவமான மாமரத்தை வேலாயுதத்தினால் இரண்டாக்கி அவற்றைச் சேவலும் மயிலுமாக கொண்டு, ஆன்மா பரம்பொருளின் திருவடியை அடையச் செய்தார்.

- கந்தபுராணப் பாடல்களின் மூலம் நாம் பெற்றுக் கொள்ளும் பண்பாட்டுக் கூறுகள்:
  - இறைவனைப் பக்தியுடன் வேண்டுதல் செய்து வழிபட்டால் வேண்டுகோள் நிறைவேற்றப்படும்.
  - தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க சிவபெருமான் முருகனைத் தந்து தேவர் களைக் காத்து அருளினார்.
  - தீயோரைத் தண்டித்து நல்வழிப்படுத்தலும் அடியாரின் துன்பம் துடைத்து அவர்களைக் காத்தலும் திருவருளின் செயலாகும்.
  - தேவர்கள் சூரபன்மனின் கொடுமையைத் தாங்காது முருகனிடம் அடைக்கலம் வேண்டி முறையிட்டபோது அவர் அசுரரை அழித்து, தேவர்களைக் காத்தருளினார்.
  - 'அகந்தை அழிவைத் தரும்' என்பதை முருகன் சிறுவன் என அலட்சியம் செய்த சூரபன்மன் அழிவைத் தேடிக் கொண்ட சம்பவம் எடுத்துக் காட்டும்.
  - நன்றி கொன்றவன் விரைவில் அழிவான். சிவபெருமானிடம் அதிக வரத்தைப் பெற்ற சூரபன்மன், சிவபெருமானின் மகனாகிய முருகப் பெருமானையே எதிர்த்துப் போர் செய்தான்.
- தீவினை புரிந்தோராயினும் இறைவனிடம் பிழை பொறுக்க வேண்டின், இறைவன் அருள் புரிவான்.
- சூரபன்மன் முருகப்பெருமானுடன் எதிர்த்துப் போர் செய்தாலும் அவன் முன்செய்த நல்வினை யின் பயனாக முருகனின் திருப்பெருவடிவத்தைக் காணும் பேறு பெற்றான்.
- அதன் பயனாய் சேவலும் மயிலுமாக மாறிய சூரபன்மன் முருகப் பெருமானுக்குக் கொடியாக வும், வாகனமாகவும் இருக்கும் பேற்றினை ஈற்றில் பெற்றான்.
- கந்தபுராணத்தின் கதாபாத்திரங்கள் ஊடாக, *சமய தத்துவக் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.*

  உ-ம்:

| | | |
|---|---|---|
| சூரபன்மன் | - | ஆணவ மலம் |
| சிங்கமுகன் | - | கன்ம மலம் |
| தாரகன் | - | மாயை |
| தேவர் | - | ஆன்மா |
| வேல் | - | ஞானம் |
| முருகன் | - | பதி |

- கந்தபுராணத்தின் உட்பொருள் - முருகன் மும் மலங்களாகிய சூரபன்மன் முதலான அசுரர் களை அழித்து ஆன்மாக்களாகிய தேவர்களைக் காத்து அருளினார் என்பதாகும்.
- காப்புச் செய்யுளும் தெரிவு செய்யப்பட்ட பாடல்களும்

காப்பு

(i) "திகட சக்கச்........"

ஏனைய பாடல்கள்

(ii) "அருவமும் உருவமாகி......"

(iii) "முழுமதியன்ன......"

தெரிவு செய்யப்பட்ட பாடலகள்

01. "உடல்சின மோடு சுர..."
02. "வெம்புய லிடையிற் றோன்றி..."
03. "கூறிமற்றினைய தன்மை..."
04. "இறுதியு முதலுமில்லா..."
05. "கோ்லமா மஞ்சை..."
06. "சீர்க்கும ரேசன் கொண்ட..."
07. "இங்கென துயிர்டோ..."
08. "அண்ணலார் குமரன்..."
09. "திருகிய வெகுளி..."
10. "போயின வகந்தை..."
11. "சூழுதல் வேண்டுந்..."
12. "ஒன்றொரு முதல்வ..."
13. "வானு ளோர் சிறையை..."
14. "என்ன வித் தகைய..."
15. "காரண னாகித்..."
16. "நண்ணினர்க் கினியாய்..."
17. "தீயவை புரிந்தா ரேனுங்..."

( 140 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- கந்தபுராணம் புலப்படுத்தும் தத்துவக் கருத்துக்கள் மூன்றினைக் குறிப்பிடுவர்.
- நன்றி மறத்தலால் வரும் கேடு பற்றி, சூரபன்மனின் கதையின் மூலமாக அறிந்து நன்றி மறவாமை என்னும் பண்பினை வாழ்வில் கடைப்பிடிப்பர்.
- கந்தபுராணம் முற்றோதலின் பொழுதும் கந்தசஷ்டி விரதத்தின் போதும் புராண படனம் செய்வர்.
- தரப்பட்ட திருப்பெருவடிவப் பாடற்பகுதியின் கதைச் சுருக்கத்தைத் தெளிவாக எடுத்துக் கூறுவர்.
- கந்தசஷ்டி விரத காலத்தில் சூரன் போர் நடைபெறுவதைப் பார்வையிட்டு அதிலுள்ள நற்பண்புகளைக் குறிப்பிடுவர்.

இணைப்பு 3.3.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- உங்கள் குழுவின் கருத்துக்களை அறிக்கையாக்கி, அதனை வகுப்பில் சமர்ப்பிக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

குழு - 1, 3

1. இப்பாடல்கள் ஒவ்வொன்றையும் கற்ற பின்னர் நீங்கள் விளங்கிக் கொள்வது யாதெனக் குறிப்பிடுங்கள்.
2. கந்தபுராணத்தின் உட்பொருளை எழுதுங்கள்.
3. குமரக் கடவுள் தமது திருப்பெருவடிவத்தினைச் சூரபன்மனுக்குக் காட்டியபொழுது அவனுடைய மனதில் எழுந்த கருத்துக்களைத் தொகுத்து எழுதுங்கள்.
4. "வானுளோர் சிறையை நீக்கி......" எனத் தொடங்கும் பாடலின் வாயிலாகச் சூரபன்மனின் மனநிலை புலப்படுத்தும் வகையைக் குறிப்பிடுங்கள்.

குழு - 2, 4

1. ஒரு மனிதனுக்கு உள்ள, இயலாத துயரத்தைத் தரும் செயல்கள் இரண்டினைக் குறிப்பிடுங்கள்.
2. சூரபன்மன் சுப்பிரமணியக் கடவுளைப் பற்றி எவ்வாறு நினைத்திருந்தான் என்பதைக் குறிப்பிடுங்கள்.
3. சூரபன்மன் போர்க்களத்தில் நின்ற விதத்தினை விளக்கி எழுதுங்கள்.
4. "திருகிய வெகுளி முற்றுந்....." எனும் பாடலின் கருத்தைக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 4.0 : சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவதன் அவசியத்தை முன்வைப்பர்.

தேர்ச்சி மட்டம் 4.1 : ஆலயம், தலயாத்திரை என்பவற்றுக்கு இடையிலான தொடர்பின் அவசியத்தை விபரிப்பர்.

செயற்பாடு 4.1 : தலயாத்திரை மேற்கொள்வோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 4.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- தலயாத்திரை மேற்கொள்ளும் ஆலயங்களின் படங்கள்
- மாதிரி வழிகாட்டிக் குறிப்புக்கள்
- ஒளிப்பேழை, எழுது கடதாசி, நிறப் பேனா

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 4.1.1 :

- மாணவர்கள் கோயில்களுக்குச் சென்றமை பற்றிக் கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- பிரசித்தி பெற்ற ஆலயங்களுக்கு உங்கள் பெற்றோர்களோ, உறவினர்களோ, நீங்களோ சென்றீர்களா? எனக் கேட்டு விடை கூறச் சந்தர்ப்பமளியுங்கள்.
- தலயாத்திரை மேற்கொள்ளும்போது எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமெனக் கேட்டு, அவை பற்றிக் கூற இடமளியுங்கள்.
- தலயாத்திரை சென்ற மாதிரி படங்கள், ஒலிப்பேழை என்பவற்றை மாணவர்கள் பார்த்து, அவை பற்றிக் கருத்துக் கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- பின்வரும் விடயங்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலை மேற்கொள்ளுங்கள்.

| |
|---|
| • இறைபக்தியை வளர்க்கும் நிகழ்வுகளில் ஒன்றாகத் தலயாத்திரை விளங்குகிறது.<br>• தலயாத்திரை என்பது பல்வேறு தலங்களுக்கும் சென்று தனது ஆன்மீகத்தை வளர்த்துக் கொள்வதாகும்.<br>• தலயாத்திரையின் பயன் தன்னுடைய ஆத்மாவை அமைதிப்படுத்தலாகும்.<br>• விட்டுக் கொடுத்தல், கூட்டுப்பொறுப்பு, தர்ம சிந்தனை வளர்தல் என்பன தனிமனிதனுக்கும் சமூகத்துக்கும் பயன்படுகிறது. |

(05 நிமிடங்கள்)

படி 4.1.2 :
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவத்தின் பிரதி, எழுது கடதாசி, நிறப்பேனா என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவிலுள்ள மாணவர்களும் செயற்பாட்டில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 4.1.3 :
- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- அக்குழுவில் உள்ளோர் அறிக்கையைப் பூரணப்படுத்த வழிகாட்டுங்கள்.
- ஏனைய குழுக்களும் தங்கள் ஆக்கபூர்வமான கருத்துக்களை வழங்க இடமளியுங்கள்.
- எல்லாக் குழுக்களின் அறிக்கைகளைத் தொகுக்கும் வகையில் கீழ்க் குறிப்பிடப்படும் கருத்துக்களை மையமாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இறைபக்தியை வளர்த்துக் கொள்ளும் சாதனமாக தலயாத்திரை அமைகிறது.
- தலயாத்திரை இரு வேறு வகையாக நடைபெறுகின்றன.
  - உள்நாட்டிலுள்ள பிரசித்தி பெற்ற தலங்களுக்குச் செல்லும் யாத்திரை
  - பிறநாட்டு யாத்திரை
- தலயாத்திரையானது உள்நாட்டுக்கும் வெளிநாட்டுக்கும் அமைவாக அமைந்து காணப்படுகின்றது.
  - காலத்தால் முந்தியது.
  - பாடல்கள் பெற்றது.
  - சமகால எழுச்சி பெற்றது.
  - சிவன், முருகன், பிள்ளையார் என அமையும்.
- தலயாத்திரைக்குச் சிறப்பு அளித்த சைவசமய குரவர்கள் பலர் உள்ளனர்.
  - சமய குரவர் நால்வர்
- வரலாற்றுச் சிறப்புமிக்க ஆலயங்கள்.
  - தஞ்சைப் பெருங்கோயில்
  - கதிர்காமம்
  - மாவிட்டபுரம்
  - கொக்கட்டிச்சோலை
  - உகந்தை முருகன் ஆலயம்
  - வல்லிபுர ஆழ்வார்
  - நகுலேஸ்வரம்
  - தெவிநுவர விஷ்ணு

- தலயாத்திரை மூலம் பல்வேறு பண்பாட்டுக் கூறுகள் வளர்க்கப்படுகின்றன.
  - கடவுள் வழிபாடு
  - மன நிறைவு
  - தீய பழக்கங்கள் தவிர்த்தல்
  - சமய ஆசாரங்கள் கடைப்பிடித்தல்
    - சைவ உணவு
    - சிவசின்னம் அணிதல்
    - பஞ்சமாபாதகங்களைத் தவிர்த்தல்
    - பஞ்சதோத்திரங்களை ஓதுதல்
    - சமய அனுட்டானங்களைக் கடைப் பிடித்தல்
    - மற்றவர்களிடம் அன்பு காட்டுதல்
    - ஆத்மீக திருப்தி
- தலயாத்திரை மூலம் பல்வேறு பயன்கள் உண்டாகின்றன.

  **உ-ம்:**

  கடவுள் பற்றிய நம்பிக்கையையும் யாத்திரையின் பயனையும் பிரதேச மக்களின் மனதில் வளர்த்தல்.

**(20 நிமிடங்கள்)**

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- தலயாத்திரை செய்யப்பட வேண்டிய ஆலயங்களைக் குறிப்பிடுவர்.
- சைவசமயிகள் வாழ்வில் தலயாத்திரை செய்ய வேண்டியதன் முக்கியத்துவத்தை உணர்ந்து யாத்திரை செல்ல முன்வருவர்.
- தல யாத்திரை மேற்கொள்ளும்போது பின்பற்றப்பட வேண்டிய நடைமுறைகளைக் குறிப்பிடுவர்.
- அடியார்களுடன் சேர்ந்து விரும்பிய தலத்திற்குத் தல யாத்திரை செல்வர்.
- தல யாத்திரை மூலம் வளர்க்கப்படும் பண்பாட்டுக் கூறுகளைத் தனிமனித வாழ்விலும் குடும்ப வாழ்விலும் கடைப்பிடிப்பதன் மூலம் சமூகத்தை ஒழுங்குபடுத்த உதவுவர்.

**இணைப்பு 4.1.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- தலயாத்திரை பற்றிய விடயங்களை முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்

(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

### குழு - 1

1. தனிமனித ஆத்மீக வளர்ச்சியில் தலயாத்திரை பெறுகின்ற முக்கியத்துவங்களை எழுதுங்கள்.
2. நீங்கள் தலயாத்திரை சென்றதாகக் கற்பனை செய்து, யாத்திரையின்போது கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளை எழுதுங்கள்.
3. தலயாத்திரைக்கு நீங்கள் செல்வதற்குத் திட்டமிட்ட திட்ட வரைபு பற்றிக் குறிப்பிடுங்கள்.

### குழு - 2

1. தலயாத்திரை செல்வதனால் வளர்க்கப்படும் பண்புகளைப் பின்வரும் அடிப்படையில் விபரியுங்கள்.
    - அறிவு
    - திறன்
    - மனப்பாங்கு
2. உங்களது பிரதேசங்களில் தலயாத்திரை செல்லவேண்டியதன் அவசியத்தை எவ்வாறு எடுத்துரைப்பீர்கள் என்பதனைக் குறிப்பிடுங்கள்.
3. தலயாத்திரை மேற்கொண்ட சைவசமய குரவர்களையும், அதனால் பெற்றுக் கொண்ட பயன்களையும் குறிப்பிடுங்கள்.

குழு - 3

1. தலயாத்திரை தொடர்பாகப் பின்வரும் விடயங்களை முன்வையுங்கள்.

தலயாத்திரையின் பயன்கள்
- இம்மையின் பயன்கள்
- மறுமைப் பயன்கள்
- சமூகப் பயன்களும் தேசியத்தின் முக்கியத்துவமும்

குழு - 4

1. தலயாத்திரைக்குப் பொருத்தமான ஆலயங்களைப் பின்வரும் அடிப்படையில் வகைப்படுத்துங்கள்.

- பாடல் பெற்ற தலங்கள்
- படைவீடுகள்
- கலைச்சிறப்புமிக்க ஆலயங்கள்
- வரலாற்றுச் சிறப்புமிக்க ஆலயங்கள்
    - உள்நாடு
    - வெளிநாடு

2. இறைபக்தியை வளர்த்துக் கொள்வதற்குத் தலயாத்திரை பெறுகின்ற இடத்தைக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 5.0 : சமய பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

தேர்ச்சி மட்டம் 5.1 : நாயன்மார் (நால்வர்) பணிகளை அறிந்து, அவற்றை விபரிப்பர். அவர்களுக்கு மதிப்பளித்து அவர்கள் வழி ஒழுகுவர்.

செயற்பாடு 5.1 : நாயன்மார் காட்டிய வழியினை நாமும் பின்பற்றி நடப்போம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 5.1.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- இணைப்பு 5.1.2 இல் உள்ள நால்வர் சமய சமூகப் பணிகளும் பாடல்களும் அடங்கிய அட்டவணை
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 5.1.1 :
- பணி என்றால் என்ன? நீங்கள் பாடசாலைக்காக செய்யக்கூடிய பணிகள் யாவை? இவை போன்ற வினாக்களைக் கேட்டு மாணவர் விடை கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலை நிகழ்த்துங்கள்.

> - சைவசமய வளர்ச்சிக்காக நாயன்மார்கள் பல பணிகளை ஆற்றியுள்ளனர்.
> - இறைவனது அருளோடு இவர்கள் பல பணி களை ஆற்றினர்.
> - சைவசமயத்தின் உறுதிப்பாட்டினை நிலைநிறுத் தியவர்கள் நாயன்மார்கள்.

(10 நிமிடங்கள்)

படி 5.1.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவத்தின் பிரதி, எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து நெறிப்படுத்துங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 5.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- அக்குழுவில் உள்ளோர் அறிக்கையைப் பூரணப்படுத்த வழிகாட்டுங்கள்.
- ஏனைய குழுக்களும் தங்கள் ஆக்கபூர்வமான கருத்துக்களை வழங்க இடமளியுங்கள்.
- எல்லாக் குழுக்களின் அறிக்கைகளைத் தொகுக்கும் வகையில் கீழ்க் குறிப்பிடப்படும் கருத்துக்களை மையமாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் என்போர் சைவ சமய குரவராவர்.
- திருஞானசம்பந்தர் இறையருளுடன் பின்வரும் சமயப்பணிகளை ஆற்றினார்.
  - பாண்டிய மன்னனின் வெப்புநோயை நீக்கி, சைவத்தைத் தழுவ வழிவகுத்தமை.
  - சமணர்களோடு அனல்வாதம், புனல்வாதம் என்பன புரிந்து சைவசமய உண்மைகள் மேலானவை என நிறுவியமை.
  - தேவாரங்களைப் பண்ணோடு பாடியமை
  - யாத்திரை செய்தமை
- திருஞானசம்பந்தர் இறையருளுடன் பல சமூகப் பணிகளையும் ஆற்றினார்.
  - பனியால் வாடிய மக்களின் குளிர்ச்சுரம், நீங்கியமை.
  - பசிப்பிணியால் வருந்திய மக்களுக்கு பசிப் பிணி நீக்கியமை.
  - ஆண் பனைகளைப் பெண் பனைகளாக மாற்றியமை.
  - சாதியடிப்படையில் உயர்வு தாழ்வு பாராட்டாமை.
- திருநாவுக்கரசர் இறையருளுடன் பின்வரும் சமயப் பணிகளை ஆற்றினார்.
  - சமணப்பள்ளியாக மாற்றப் பெற்ற சிவாலயத்தை மீண்டும் மாற்றிப் பொலிவுறச் செய்தமை.
  - பூட்டப்பட்டிருந்த ஆலயக் கதவினைத் திறந்து அடியவர்கள் வழிபட வழி வகுத்தமை.
- திருநாவுக்கரசரது சமூகப்பணிகளை பின்வருமாறு குறிப்பிடலாம்.
  - உழவாரப் பணி மூலம் சரியைத் தொண்டின் சிறப்பினை வெளிப்படுத்தியமை.
  - பல்லவ மன்னனது சூலைநோயை நீக்கி சைவசமயத்தைத் தழுவ வழிவகுத்தமை.

- சுந்தரமூர்த்தி நாயனார் திருவருளுடன் திருத் தொண்டர்த்தொகையைப் பாடினார்.
- சுந்தரமூர்த்தி நாயனார் முதலை விழுங்கிய பிள்ளையை மீட்டுக் கொடுத்தார்.
- மாணிக்கவாசகர் இறையருளுடன் பின்வரும் சமயப் பணிகளை ஆற்றினார்.
  - பிற சமயத்தவர்களை வாதில் வென்று பின்னர் அவர்களைச் சைவசமயத்தவர் களாக மாற்றியமை.
- எளிமையான நாட்டார் வழக்காற்றுக் கூறுகளைக் கொண்டு திருவாசகத்தைப் பாடினார்.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- நாயன்மார் ஆற்றிய சமய, சமூகப் பணிகளைக் குறிப்பிடுவர்.
- இறையருள் வாய்க்கப் பெற்றவர்களுக்கு எத்தகைய துன்பங்கள் வரினும் அவை இலகுவில் நீங்கிவிடும் என்பதை உணர்ந்து செயற்படுவர்.
- நாயன்மார்களது சமய சமூகப் பணிகளை வேறுபடுத்திப் பட்டியல்படுத்துவர்.
- நாயன்மாரின் சமய, சமூகப் பணிகளுக்கு மதிப்பளித்து தாமும் செயற்படுவர்.

**இணைப்பு 5.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களுக்கு முன் வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு நாயன்மாரைத் தெரிவுசெய்க. பின்வருவனவற்றை அடிப்படையாகக் கொண்டு கருத்துக்களை முன்வையுங்கள்.

குழு - 1 திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்
குழு - 2 திருநாவுக்கரசு நாயனார்
குழு - 3 சுந்தரமூர்த்தி நாயனார்
குழு - 4 மாணிக்கவாசகர்

- சமயப்பணிகள்
- சமூகப்பணிகள்
- அற்புதங்கள்

இணைப்பு 5.1.2

## நால்வர் சமய சமூகப் பணிகளும், பாடல்களும் (தேவாரம், திருவாசகம், திருக்கோவையார்)

| திருஞானசம்பந்தர் | திருநாவுக்கரசர் | சுந்தரமூர்த்திநாயனார் | மாணிக்கவாசகர் |
|---|---|---|---|
| • சமணசமயத்தைத் தழுவிய பாண்டிய மன்னனின் வெப்பு நோயை நீக்கி மீண்டும் சைவசமயத்தைத் தழுவ வழிவகுத்தமை.<br><br>• சமணர்களோடு அனல் வாதம் புனல்வாதம் புரிந்து சைவசமய உண்மைகளே மேலானவை என நிறுவியமை<br><br>• திருமறைக்காட்டில் வேதங்களால் பூட்டப் பட்டு இருந்த ஆலயக் கதவை நாவுக்கரசர் திறக்கும்படி பாட இவர் கதவு மூடும்படி பாடியமை.<br>• இவர் பாடிய தேவாரங்கள் முதல் மூன்று திருமுறைகளில் அடங்கும்.<br>தேவாரங்கள் -<br>4145 பாடல்கள்<br>383 பதிகங்கள்<br>முதலாம் திருமுறை -<br>136 பாடல்கள்<br>இரண்டாம் திருமுறை -<br>122 பாடல்கள்<br>மூன்றாம் திருமுறை -<br>125 பாடல்கள்<br><br>• தென்நாட்டு, ஈழநாட்டுத் திருத்தலங்களைச் சிறப் பித்துப் பாடியமை.<br><br>• பிற்காலத் தலபுராணத் தோற்றத்திற்கு இவரது பதிகங்கள் வழி வகுத்தமை. | • சமணசமயத்தைத் தழுவிய பல்லவ மன்னனது சூல நோயை நீக்கி அவரை சைவனாக்கியமை.<br>பல சைவப் பணிகளை ஆற்ற வழிவகுத்தமை.<br><br>• ஆலயச் சுற்றுப்புறங் களை உழவாரத்தி னால் தூய்மைப்படுத்தி சரியைத் தொண்டின் மேன்மையை வெளிப்படுத்தியமை.<br><br>• திருப்பழையாற்றில் வடதளியில் சமணப் பள்ளியாக மாற்றப் பெற்ற சிவாலயத்தை மீண்டும் பொலிவுறச் செய்தமை.<br><br>• பூம்புகாரில் உழவாரத் தொண்டு செய்யும் பொழுது தென்பட்ட பொன்னையும் மணி யையும் சாதாரண கற் களாக ஒதுக்கி உலகப் பற்றற்ற தன்மையை வெளிப்படுத்தியமை.<br><br>• திருமறைக்காட்டில் வேதங்களால் நீண்ட காலம் பூட்டப்பட்டு இருந்த ஆலயக்கதவு திறக்க வழிவகுத்தமை.<br><br>• இவர் பாடிய தேவா ரங்கள் நான்காம், ஐந்தாம், ஆறாம் திருமுறைகளில் அடங்கும்.<br>தேவாரங்கள் -<br>3066 பாடல்கள்<br>312 பதிகங்கள்<br>நான்காம் திருமுறை -<br>113 பாடல்கள்<br>ஐந்தாம் திருமுறை -<br>100 பாடல்கள்<br>ஆறாம் திருமுறை -<br>99 பாடல்கள் | • "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என இறைவன் அடி எடுத்துக் கொடுக்க திருத்தொண்டர்த் தொகையைப் பாடியமை.<br><br>• இறைஅடியார் களுக்கு அமுது செய்வித்தல்.<br>இவர் பாடிய தேவாரங்கள்<br>ஏழாம் திருமுறை -<br>102 பாடல்கள்<br>100 பதிகங்கள் | • பிறசமயத்தவர்களை வாதில் வென்று ஊமைகளாக்கி பின் ஊமை நீக்கிச் சைவர் களாக மாற்றியமை<br><br>• அடியவர்களுக்கு இலகுவில் விளங்கக் கூடிய நாட்டுப்புறப் பாடல் வடிவில் திருவாசகம், திருக்கோவையார் பாடல்களைப் பாடியமை.<br><br>திருவெம்மானை<br>திருச்சாழல்<br>திருவெம்பாவை<br>திருவூஞ்சல்<br><br>• இவர் பாடிய பாடல் கள் எட்டாம் திருமுறை யில் அடங்கும்.<br>திருவாசகம்<br>- 658 பாடல்கள்<br>திருக்கோவையார்<br>- 400 பாடல்கள் |

| திருஞானசம்பந்தர் | திருநாவுக்கரசர் | சுந்தரமூர்த்திநாயனார் | மாணிக்கவாசகர் |
|---|---|---|---|
| • "கொல்லிமழவன்" என்ற அரசனின் மகளது முயலகன் நோயை நீக்கியமை.<br>• கொடிமாடச் செங்குன்றூரில் பனியின் கொடுமையால் வாடிய மக்களுக்கு குளிர்சுரம் நீக்கியமை.<br>• திருமருகல் என்ற இடத்தில் பாம்பினால் கடியுண்டு இறந்த வணிகனை உயிர்ப்பித்தமை.<br>• திருவீழிமிழலையில் மழை வளம் குன்றியமையால் பசிப்பிணியினால் வருந்திய மக்களுக்குப் பசிப்பிணி நீக்கியமை.<br>• திருவோத்தூரில் ஆண் பனைகளைப் காய்க்கும் பெண்பனைகளாக மாற்றியமை.<br>• திருமயிலாப்பூரில் சிவநேசரின் மகளாகிய பூம்பாவையை உயிர்ப்பித்தமை, (பாம்பு கடித்து இறந்து பானையில் இடப்பட்ட அவளது அஸ்தியை மீண்டும் உயிர்ப்பித்தமை.)<br>• சாதி அடிப்படையில் உயர்வு தாழ்வு பாராட்டாது அனைவரும் ஒன்றெனப் போற்றி பக்தி நெறியை வளர்த்தமை. திருநீலநக்கநாயனார் என்ற அந்தணர் வீட்டில் சம்பந்தரும், பாணர் வகுப்பைச் சார்ந்த திருநீலகண்டயாழ்ப்பாணரும் அவரது மனைவியும் தங்கியமை. | • பாம்பினால் கடியுண்டு இறந்த அப்பூதியடிகளின் மகன் மூத்த திருநாவுக்கரசை உயிர்ப்பித்தமை.<br>• திருவீழிமிழலையில் பசிப்பிணியினால் வருந்திய மக்களுக்காக இறைவனிடம் படிக்காசு பெற்று அவர்களது பசிப்பிணி நீக்கியமை. | • திருப்புக்கொளியூரில் முதலை விழுங்கிய பிராமணப் பிள்ளையை முதலை வாயி நின்றும் மீண்டுக் கொடுத்தமை.<br>• பெருக்கெடுத்து ஓடிய காவிரி ஆற்றினை வழிவிட வழிவகுத்தமை. | • தில்லையில் ஊமைப்பெண்ணைப் பேசவித்தமை |

தேர்ச்சி 5.0 : சமய பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

தேர்ச்சி மட்டம் 5.2 : சந்தான குரவர்களையும், அவர்களது பணிகளையும் பற்றி விளக்குவர்.

செயற்பாடு 5.2 : சந்தான குரவர்களையும் அவர்களது பணிகளையும் பற்றி அறிவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 5.2.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 5.2.1 :
- சந்தான குரவர்களது படங்களைக் காட்சிப் படுத்துங்கள்.
- படங்களைக் அடிப்படையாகக் கொண்டு சந்தான குரவர்களது வரலாறுகளைக் கூற இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலை நிகழ்த்துங்கள்.

> - சைவசமய தத்துவ வளர்ச்சியில் சந்தான குரவர்கள் முக்கியத்துவம் பெறுபவர்கள்.
> - சந்தான குரவர்களை இரண்டாக வகைப் படுத்துவர்.
>
>   அகச்சந்தான குரவர்
>   - திருநந்திதேவர்
>   - சனத் குமாரர்
>   - சத்தியஞானதரிசினி
>   - பரஞ்சோதி முனிவர்
>
>   புறச்சந்தான குரவர்
>   - மெய்கண்டதேவர்
>   - அருணந்தி சிவாசாரியார்
>   - மறைஞான சம்பந்தர்
>   - உமாபதி சிவாச்சாரியார்

(10 நிமிடங்கள்)

படி 5.2.2 :
- மாணவர்களைச் சிறுகுழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- எல்லா மாணவர்களையும் செயற்பாட்டில் ஈடுபட வழிப்படுத்துங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 5.2.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- அறிக்கைகளைப் பூரணப்படுத்துவதற்கு அதே குழுவுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஏனைய குழுக்களிடமிருந்து வரவேற்கத்தக்க கருத்துக் களை முன்வைக்க இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சந்தானம் என்றால் பரம்பரை அல்லது தலைமுறை என்பது பொருளாகும்.
- சமய குரவர்களின் திருமுறை பலவற்றிலும் காணப்பட்ட தத்துவக் கருத்துக்களைத் கொகுத் துத் தந்தவர்கள் சந்தான குரவர்கள் ஆவர்.
- மெய்கண்ட தேவரின் வாழ்க்கைச் சுருக்கம் பின்வருமாறு அமையும்.
  - ஊர் - திருப்பெண்ணாகடம்
    வேறு பெயர் - சுவேதனைப் பெருமாள்
    குரு - பரஞ்சோதி முனிவர்.
    சீடர்கள் - அருணந்தி சிவாச்சாரியார், மனவாசகம் கடந்தார்
    அருளிய நூல் - சிவஞான போதம்
    முக்தி பெற்ற தினம் - ஐப்பசிச் சுவாதி
- சைவசித்தாந்த சாத்திர சிந்தனைகளை ஒழுங்கு படுத்தி எழுதிய முதல்வர்.
- பரஞ்சோதி முனிவரால் மெய்கண்டார் எனும் திருப்பெயர் சூட்டப்பட்டது.
- அருணந்தி சிவாச்சாரியாரின் வாழ்க்கைச் சுருக்கம் பின்வருமாறு அமையும்.
  - ஊர் - திருத்துறையூர்
    வேறு பெயர் - சகலாகம பண்டிதர்
    குரு - மெய்கண்டதேவர்
    சீடர் - மறைஞானசம்பந்தர்
    அருளிய நூல்கள் - சிவஞானசித்தியார், இருபாஇருபஃது
    முக்தி பெற்ற தினம் - புரட்டாதிப் பூரம்
- மறைஞான சம்பந்தரின் வாழ்க்கைச் சுருக்கம் பின்வருமாறு அமையும்.
  - ஊர் - திருப்பெண்ணாகடம்
    குரு - அருணந்தி சிவாசாரியார்
    சீடர் - உமாபதி சிவாச்சாரியார்
    அருளிய நூல் - சதமணித்திரட்டு
    முக்தி பெற்ற தினம் - ஆவணி உத்தரம்
    வேறு பெயர் - பரமசிவானந்தம்
- உமாபதி சிவாச்சாரியாரின் வாழ்க்கைச் சுருக்கம் பின்வருமாறு அமையும்.
  - ஊர் - கொற்றவன்குடி
    வேறு பெயர் - கொற்றவன்குடி முதலியார், கொற்றவன் குடியடிகள்

| | | |
|---|---|---|
| குரு | - | மறைஞானசம்பந்தர் |
| சீடர்கள் | - | அருணந்தி சிவாச்சாரியார் |
| | | மனவாசகம் கடந்தார |
| அருளியச் செய்த நூல்கள் | - | சித்தாந்த நூல்கள்<br>சிவப்பிரகாசம்<br>திருவருட்பயன்<br>வினாவெண்பா<br>கொடிக்கவி<br>போற்றிப்ப·றொடை<br>நெஞ்சுவிடுதூது<br>உண்மைநெறி விளக்கம்<br>சங்கற்ப நிராகரணம்<br><br>ஏனைய நூல்கள்<br>கோயிற்புராணம்<br>பௌஷ்கராகம விருத்தி உரை<br>சேக்கிழார் புராணம்<br>திருமுறைகண்டபுராணம்<br>திருப்பதிகக்கோவை<br>திருநாமக் கலிவெண்பா<br>திருத்தொண்டபுராணசாரம் |

- உமாபதிசிவாச்சாரியார் செய்த அற்புதங்கள்
  - சிதம்பரத்தில் ஏறாதிருந்த கொடியைக் கொடிக்கவி பாடி ஏற வைத்தமை
  - பெற்றான் சாம்பானுக்கு முத்தியளித்தமை
  - முள்ளிச்செடிக்கு முத்தியளித்தமை
  - முக்தி பெற்ற தினம் - சித்திரை அத்தம்

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சந்தான குரவர்களின் பெயர்களைப் பட்டியற்படுத்துவர்.
- சந்தான குரவர்களின் பணிகளை அறிந்து அவற்றுக்கு மதிப்பளிப்பர்.
- இவர்களது குரு பூசைத் தினங்களைப் பாடசாலையிலும் பொது இடங்களிலும் கொண்டாட முன்வருவர்.

**இணைப்பு 5.2.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களுக்கு முன் வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்

### குழு - 1

- மெய்கண்டதேவர், சந்தானகுரவர்களுள் முதன்மையானவர் என்பதை நிறுவுவதற்கு நீங்கள் கூறும் காரணங்களை முன்வையுங்கள்.

### குழு - 2

- சைவசித்தாந்தத்தில் சிவஞானபோத பொருள் மரபினைச் சுருக்கமாக எழுதுங்கள்.

### குழு - 3

- சிவஞானசித்தியார், மெய்கண்ட சாத்திரத்தின் வழிநூல் என்பதற்கு நீங்கள் கூறும் காரணங்களை எழுதுங்கள்.

### குழு - 4

- உமாபதிசிவாச்சாரியார் எழுதிய சித்தாந்த அட்டகங்களுள் திருவருட்பயன் சிவஞானபோதத்தின் சார்பு நூல் என்பதனை ஏற்றுக் கொள்கிறீர்களா? காரணங்களைக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 5.0 : சமய பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

தேர்ச்சி மட்டம் 5.3 : சித்தர்களது ஆன்மீக ஞானம் பற்றிய விளக்கத்தைப் பெறுவர்.

செயற்பாடு 5.3 : சித்தர்களின் சிறப்புக்களையும், பெருமைகளையும் அறிவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 5.3.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 5.3.1 :
- சித்தத்தைச் சிவன்பால் செலுத்தியவர்கள் சித்தர்கள் எனும் பொருள் பற்றிக் கூற இடமளியுங்கள்.
- சித்தர்களின் பெயர்களைக் கூற இடமளியுங்கள்.
- சித்தர்களின் படங்களைக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலை நிகழ்த்துங்கள்.

- சித்தர்கள் சிவன் அருள் பெற்றவர்கள்.
- சித்தர்கள் அட்டமா சித்திகள் கைவரப் பெற்றவர்கள்.
- ஈழத்திலும் தமிழ் நாட்டிலும் பல சித்தர்கள் வாழ்ந்தார்கள்.

  உ-ம்:

  இலங்கையில்
  - கடையிற்சுவாமிகள்
  - செல்லப்பா சுவாமிகள்
  - யோகர் சுவாமிகள்
  - நவநாதச் சித்தர்
  - பெரியானைக் குட்டிச் சுவாமிகள்
  - சித்தானைக் குட்டிச் சுவாமிகள்
  - முத்துலிங்க சுவாமிகள்

  தமிழ்நாட்டில்
  - திருமூலர்
  - பாம்பாட்டிச் சித்தர்
  - அகப்பேய்ச் சித்தர்
  - குதம்பைச் சித்தர்
  - அகத்தியர்
  - அழுகுணிச் சித்தர்
  - சட்டைமுனி
  - கொங்கணநாதர்

- சித்தர்கள் தமது ஞான அனுபவத்தைச் செயல் களாலும் போதனைகள் மூலமும் வெளிப் படுத்தினர்.

(10 நிமிடங்கள்)

படி 5.3.2 :

- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- எல்லா மாணவர்களையும் செயற்பாட்டில் ஈடுபட வழிப்படுத்துங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 5.3.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- அறிக்கைகளைப் பூரணப்படுத்துவதற்கு அதே குழுவுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஏனைய குழுக்களிடமிருந்து வரவேற்கத்தக்க கருத்துக் களை முன்வைக்க இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சித்தர்கள் சிவனின் திருவருளைப் பெற்றவர்கள்.
- சித்தர்கள் சமயங்கடந்த சமரச நிலையில் நிற்பவர்கள்.
- சித்தர்கள் அட்டமா சித்திகளும் கைவரப் பெற்றவர்கள்.
- சித்தர்கள் பலவிதமான இயல்புகளைக் கொண்ட வர்கள்.
    - விருப்பு வெறுப்பு அற்றவர்கள்.
    - தவம், தியானம், விரதம் போன்ற சமய அனுஷ்டானங்களுக்கு முதன்மை கொடுக்காதவர்கள்.
    - இன்ப, துன்பம், புகழ்ச்சி, இகழ்ச்சிக்கு அப்பாற்பட்டவர்கள்.
    - இறைவனை நேரில் கண்டவர்கள்.
- யோகர் சுவாமிகளின் வாழ்க்கைச் சுருக்கம் பின்வருமாறு:
    - ஊர் - மாவிட்டபுரம்
      பிறப்பு - 1872 ஆடி, 29ஆம் திகதி
      இளமைப்பெயர் - சதாசிவம்
      தொழில் - கிளிநொச்சியில் நீர்ப்பாசன இலாகாவில் களஞ்சியப் பொறுப்பாளர்.
      குரு - செல்லப்பா சுவாமி

- தவப்பயனால் திருமுறைகளும், புராணங்களும். கீதையும். உபநிடதமும் அவரது மனதைக் கவர்ந்தன.
- இவர் நண்பர்களுக்கு கவிதையிலும் உரையிலும் றிய உபதேசம் நற்சிந்தனை எனப்படும்.
- இவர் சிவதொண்டன் என்ற மாத இதழையும் யாழ்ப்பாணம், செங்கலடி ஆகிய இடங்களில் சிவதொண்டன் நிலையங்களையும் நிறுவினார்.

- **நவநாதச்சித்தரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் பின்வருமாறு அமையும்.**
  - தமிழ்நாட்டில் பிறந்து இலங்கையில் வாழ்ந்தவர்.
  - குயின்ஸ்பரித் தோட்டக் கணக்காளரின் மனைவியின் வேண்டுகோளுக்கு இணங்க, கோயில் கும்பாபிடேகத்தில் கலந்துகொண்டார்.
  - ஒரே நேரத்தில் ஒன்பது இடங்களில் காணப் படுவார்.
  - இவரது சமாதி குயின்ஸ்பரித் தோட்டத்தில் உள்ள முருகன் கோயிலுக்கு அண்மை யில் உள்ளது.

- **பெரியானைக் குட்டி சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் வருமாறு:**

  வசிப்பிடம் - கண்டி
  வளர்ப்புத் தந்தை - ஆனைக்குட்டி

  - **இவர் செய்த அற்புதம்**
  - மலம் கழித்த இடத்தில் தங்கக்குவியலை ஏற்படுத்தியமை.
  - ஓடாது நின்ற புகையிரதத்தை ஓட வைத்தமை.
  - இவரது சமாதி கொழும்பு முகத்துவாரம் பகுதியில் உள்ளது.

- **சித்தானைக் குட்டிச் சுவாமிகளின் வாழ்க்கைச் சுருக்கம் வருமாறு:**

  ஊர் - தமிழ்நாட்டிலுள்ள இராமநாதபுரம்
  இளமைப்பெயர் - கோவிந்தசாமி
  குரு - பெரியானைக்குட்டி நவநாதச்சித்தர்

  **இவரது அற்புதம்**

  - யாரும் அறியாத வகையில் தமிழ்நாட்டி லிருந்து இலங்கைக்கு வந்தமை.
  - மட்டக்களப்புக் காரைதீவில் தீர்க்கமுடியாத

நோயினால் கஷ்டமடைந்த நோயாளி களின் நோய்களைத் தீர்த்தமை.

- சுவாமிகளது உபதேசம்
  - அதிகாலை நித்திரை விட்டெழு
  - எழும்பும்போதே ஆண்டவனை நினை
  - காலை மாலைக் கடன்களைக் குறைவறச் செய்
  - தேநீர், காப்பியைத் தூரத் தள்ளு
  - மரக்கறி உணவு மனதிற்கு மகிழ்ச்சி
  - பசித்து வந்தோர் முகம் பார்
  - உண்ணுமுன்பு ஒரு கணம் இறைவனை நினை
  - கடமையில் தவறினால் கடவுளைக் காண மாட்டாய்
  - நெற்றிக்கழகு விபூதி பூசுதல்
  - படுக்குமுன் இறைவனைப் பிரார்த்தி
- முத்துலிங்க சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு வருமாறு:
  - இந்தியாவில் காஷ்மீர் என்னும் இடத்தைச் சேர்ந்தவர்
  - ஆதி சங்கரரின் ஞான பரம்பரையில் தோன்றியவர்
  - இளமைப்பெயர் - கல்யாணகிரி
  - 16 ஆம் நூற்றாண்டில் யாத்திரை மேற் கொண்டு கதிர்காமத்திற்கு வந்தார்
- அற்புதம்
  - தங்கத்தகட்டில் உருவேற்றி வைத்து தவத்தில் உறங்கியவரை வேட்டுவச் சிறுவன் தட்டியெழுப்பினான். அவனைக் கோபத்தில் துரத்திய போது முருகனும் வள்ளியும் காட்சி கொடுத்து வள்ளி மறைய குறத்தி தோன்றி, தங்கத் தகட்டைக் கேட்க, கொடுத்து மீண்டும் ஒரு தகட்டை உருவேற்றினார். அது கதிர்காம ஆலயத்தின் மூலஸ்தானத்தில் உள்ளது.
  - அவர், கதிர்காமத்தில் சமாதியடைந்தார். அச்சமாதி வள்ளி அம்மன் ஆலயத்திற்கு இடப்பக்கத்தில் உள்ளது. இதில் முத்துப் போன்ற சிவலிங்கம் ஒன்று தோன்றியது. இதனால் முத்துலிங்க சுவாமி எனப் பெயர் பெற்றவர். தற்போது அது சிவன் கோயில் என அழைக்கப்படுகிறது.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- ஈழத்துச் சித்தர்களின் அற்புதங்களைப் பட்டியல்படுத்துவர்.
- சித்தர்களின் மேன்மையினை உணர்ந்து மதிப்பளிப்பர்.
- ஈழத்துச் சித்தர்களின் சிறப்புக்களை எதிர்காலச் சந்ததிக்கு எடுத்துக் கூறுவர்.

**இணைப்பு 5.3.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களுக்கு முன் வைக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்

(இதன் பிரதியைக் குழுக்களுக்கு வழங்குங்கள்)

(1) "சித்தத்தை சிவன்பால் செலுத்தியவர்கள் சித்தர்கள்" இக் கூற்று மூலம் நீங்கள் விளங்கிக் கொண்டதை விரிவாக எழுதுங்கள்.

(2) சித்தர்கள் மூலம் கடவுள் நம்பிக்கை எவ்வாறு வெளிப்படுத்தப்படுகின்றது என்பதை விரிவாகக் குறிப்பிடுங்கள்.

(3) சித்தர்களது வாழ்க்கை முறை பற்றி நீங்கள் கொண்டிருக்கும் கருத்துக்களை முன்வையுங்கள்.

தேர்ச்சி 5.0 : சமய பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

தேர்ச்சி மட்டம் 5.4 : சமயம் வளர்த்த பெரியார்களது சாதனைகளை வெளிப் படுத்துவர்.

செயற்பாடு 5.4 : குமரகுருபரரின் சமயப்பணி பற்றி அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 5.4.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- இணைப்பு 5.4.2 இல் உள்ள தகவல்கோவை
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 5.4.1 :
- "சமயப்பணி செய்தவர்கள் சமயப் பெரியார்கள்" இக் கூற்றுப் பற்றி மாணவர்கள் கருத்துக்களைக் கூறுவதற்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- உங்களுக்குக் கிடைக்கும் சமயப் பெரியார்களின் படங் களைக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலை நிகழ்த்துங்கள்.

> - சமயத்தை வளர்த்தற் பொருட்டு தமது வாழ்க்கையை அர்ப்பணித்து, சமயப்பணி புரிந்தோர் சமயப் பெரியார்கள் ஆவர்.
> - சமயப் பெரியார்களுள் குமரகுருபரரும் ஒருவர் ஆவார்.

(05 நிமிடங்கள்)

படி 5.4.2 :
- இணைப்பு 5.4.2 இல் உள்ள தகவல் கோவையை மாணவர் வாசிக்க இடமளியுங்கள்.
- மாணவர்களைச் சிறுகுழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் கண்காணியுங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 5.4.3 :
- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.

- ஏனைய குழுக்களிடமிருந்து வரவேற்கத்தக்க கருத்துக் களை முன்வைக்க இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சைவசமய வளர்ச்சியில் குமரகுருபரரின் பணி குறிப்பிடத்தக்கது.
- அவரது வாழ்க்கைச் சுருக்கம்:

| | | |
|---|---|---|
| பிறந்த இடம் | - | ஸ்ரீவைகுண்டம் |
| காலம் | - | நாயக்கர் காலம் (1623-1659) |
| தாய் | - | சிவகாம சுந்தரி |
| தந்தை | - | சண்முக சிகாமணிக் கவிராயர் |

- மாசிலாமணி தேசிகரிடம் ஞானோபதேசம் பெற்றுத் துறவு பூண்டார்.
- காசியில் ஸ்ரீ விசுவலிங்கப் பெருமானுக்குக் கோயில் கட்டினார்.
- **பிரபந்தங்கள்**
    - கந்தர் க்லிவெண்பா
    - கைலைக் கலம்பகம்
    - மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்
    - சகலகலாவல்லிமாலை
    - மதுரைக்கலம்பகம்
    - காசிக்கலம்பகம்
    - சிதம்பர மும்மணிக்கோவை
    - நீதிநெறி விளக்கம்
    - மதுரை மீனாட்சியம்மை குறம்
- **அற்புதங்கள்**
    - திருச்செந்தூர் முருகக் கடவுளின் அருளால் பேசும் ஆற்றல் பெற்றார்.
    - முருகனருளால் இலக்கண இலக்கியங் களையும் ஞானசாத்திரங்களையும் அறியப் பெற்றார்.
    - சரஸ்வதி அருளால் ஹிந்துஸ்தானிய மொழியறிவைப் பெற்றார்.
- இவர் வைகாசி மாதம் தேய்பிறை மூன்றாம் நாள் முத்தியடைந்தார்.

**(20 நிமிடங்கள்)**

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- குமரகுருபரர் சுவாமிகள் அருளிய பிரபந்தங்கள் ஐந்தினைக் குறிப்பிடுவர்.
- அவர் இறைவன் மீது கொண்ட பக்தியை அறிந்து மதிப்பளிப்பர்.
- இவர் எழுதிய பிரபந்தங்களில் சிலவற்றைத் தேடியறிவதில் ஈடுபடுவர்.
- குழுவாகச் சேர்ந்து நவராத்திரி விழாவின்போது சகலகலாவல்லி மாலையைப் பாடுவர்.

இணைப்பு 5.4.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்
(குழுக்களுக்குப் பகிர்ந்தளிக்கவும்.)

(1) சமயப்பெரியார் குமரகுருபரர் பற்றி உங்களது கருத்துக்களை முன்மொழி யுங்கள்.

(2) குமரகுருபரர் இறைநம்பிக்கையை வெளிப்படுத்தியவாற்றைக் குறிப்பிடுங்கள்.

இணைப்பு 5.4.2

## தகவற்கோவை

### குமரகுருபரர் மேற்கொண்ட அற்புதங்கள்

(1) பிறந்து ஐந்தாண்டு வரை ஊமையாய் இருந்து, பின்னர் செந்தில் முருகன் திருவருளால் அக்குறை நீங்கப் பெற்றார்.
(2) செந்திலாண்டவன் அருள் பெற்றுக் கந்தர்கலிவெண்பா பாடினார்.
(3) இவர் பாடிய மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழ் கேட்டு, மீனாட்சியம்மன் முத்து மாலையை இவருக்குச் சூட்டினார்.
(4) கமலைத் தியாகரைக் கண்டு அவர் மீது திருவாரூர் நான்மணிமாலை அருளினார்.
(5) கந்தபுரிக் குகன் கவிஞரை அழைத்துப் பிள்ளைத் தமிழ்கேட்டு உள்ளம் உவந்தார்.
(6) ஐந்து பேரறியும் கண்களே கொள்ள ஆனந்தக்கூத்தன் அரும்புகழ் உரைத்தார்.
(7) மாசிலாமணித்தேசிகர் மீது பண்டார மும்மணிக்கோவை பாடினார்.
(8) அந்தி வண்ணன் அழகனை காசியை முத்துறக் கண்டு மகிழ்ந்தார்.
(9) வெண்டாமரை முதல் விழுமிய கவிஞர் சிங்கத்தின் மீதமர்ந்து அவைக்கே அரசெதிர் கொண்டார்.
(10) காசியில் கருடன் காட்டிய இடத்தைப் பெற்று ஸ்ரீ குமாரசுவாமி மடம் நிறுவினார்.
(11) கங்கைக்கரையில் கேதாரம் நிறுவி அங்கு மடம் கட்டினார்.

தேர்ச்சி 5.0 : சமய பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.

தேர்ச்சி மட்டம் 5.5 : இலங்கையில் சமய, சமூக, கல்விப் பாரம்பரியத்தை வளர்த்த பெரியார்களையும் அவர்களது பணிகளையும் அறிந்து அவர்களுக்கு மதிப்பளிப்பர்.

செயற்பாடு 5.5 : ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரது சமய, சமூக, கல்விப் பணிகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 5.5.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- ஆறுமுகநாவலர் படம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 5.5.1 :
- "சமயத்தை வளர்த்தற் பொருட்டு அர்ப்பணிப்போடு செயற்பட்டவர்கள் சமயப் பெரியார்கள்"
  இக் கூற்றினைக் கரும்பலகையில் எழுதி மாணவர்கள் கருத்துக் கூற இடமளியுங்கள்.
- சமயப் பெரியார்களின் பெயர்களைக் குறிப்பிட மாணவர் களுக்கு இடமளியுங்கள்.
- சமயப் பெரியார்களின் படங்களைக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலை நிகழ்த்துங்கள்.

- சமயத்தை வளர்ப்பதற்குத் தமது வாழ்க்கையை அர்ப்பணித்தவர்கள் சமயப் பெரியவர்கள் எனப்படுவர்.
- இலங்கையில் சமயப் பெரியார்களாகவும், சீர்திருத்தவாதிகளாகவும் விளங்கியவர்கள் பலர். எடுத்துக்காட்டாக;
  - ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
  - சேர். பொன். இராமநாதன்
  - சுவாமி விபுலாநந்தர்
  - சு. சிவபாதசுந்தரனார்
  - இந்துபோட் சு. இராசரெத்தினம்
  - பசுபதிச் செட்டியார்
- மேற்குறிப்பிட்டவர்களில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் முதன்மையானவர்.

(05 நிமிடங்கள்)

படி 5.5.2 :
- மாணவர்களைச் நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவினது செயற்பாட்டையும் கண்காணியுங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 5.5.3 :
- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஏனைய குழுக்களிடமிருந்து வரவேற்கத்தக்க கருத்துக் களை முன்வைக்க இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சமயப் பெரியாராகவும் சீர்திருத்தவாதியாகவும் விளங்கியவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்.
- அவரது வாழ்க்கைச் சுருக்கம் பின்வருமாறு:
  பிறந்த இடம் - நல்லூர்
  பிறப்பு - 1822.12.18
  தாய் - சிவகாமிப்பிள்ளை
  தந்தை - கந்தப்பர்
- ஆற்றிய பணிகள்
  - சமயப் பணி
  - கல்விப் பணி
  - பதிப்பாசிரியர் பணி
  - உரையாசிரியர் பணி
  - சமூகப் பணி
  - நூலாக்கப் பணி
- சமயப் பணி
  - பிரசங்கம்
  - புராண படனம்
  - கண்டனங்கள்
    - சுதேசிய கண்டனங்கள்
    - கிறிஸ்தவ கண்டனங்கள்
- கல்விப் பணி
  - யாழ்ப்பாண சைவப் பிரகாச வித்தியா சாலை நிறுவியமை - 1849
  - தமிழ்நாடு சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலை - 1864
  - கோப்பாய் புலோலி சைவப்பிரகாச வித்தியாசாலை - 1872

- பதிப்பாசிரியர் பணி
  - 1849 இல் நல்லூரில் வித்தியானுபாலன யந்திரசாலை எனும் அச்சகத்தை நிறுவினார்.
  - தமிழ்நாட்டிலுள்ள வித்தியானுபாலன யந்திரசாலை, முத்தமிழ் விளக்க அச்சுக் கூடம், வாணி நிவேதன அச்சுக் கூடம் என்பவற்றில் இருந்து நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டார்.
  - பதிப்பித்த நூல்கள் - சூடாமணி நிகண்டு, திருக்குறள், பரிமேலழகர் உரை, சேதுபுராணம், 11 ஆம் திருமுறை.
- உரையாசிரியர் பணி
  - ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நல்வழி, நன்நெறி, வாக்குண்டாம், சைவசமய நெறி, கோயிற்புராணம், ஆகியவற்றுக்கு உரை.
  - வசனநடையில் எழுதியது - பெரியபுராண வசனம், திருவிளையாடற்புராண வசனம், கந்தபுராண வசனம்
- சமூகப் பணி
  - கஞ்சித் தொட்டித் தர்மம் செய்தல்
  - சமுதாயத்தில் சின்னமேளம் உருவாக்கல்
  - பலியிடுதலைத் தடுத்தல்
  - மட்டக்களப்பு, யாழ்ப்பாண வேளாண்மைச் சமூகம்

- நூல் ஆக்கப் பணி
  - பாலபாடம் 1 ஆம், 2 ஆம், 4 ஆம் புத்தகம்
  - சைவ வினாவிடை 1 ஆம், 2 ஆம் புத்தகம்
  - இலக்கணச் சுருக்கம்
  - இலங்கைப் பூமிசாத்திரம்
  - சிவாலய தரிசன விதி
  - சிதம்பர மான்மியம்

- நாவலரே நூல் பதிப்புக்களுக்கெல்லாம் சிறந்த வழிகாட்டியாக அமைந்தார்.
- தமிழ் நூல்கள் எவ்வாறு பதிப்பு பெற்று உருவாக்கப்பட வேண்டும் என்னும் கொள்கையை உருவாக்கியவர் நாவலரே.
- திருவாவடுதுறை ஆதீனம் அவருக்கு 'நாவலர்' என்ற பட்டத்தை வழங்கியது.

(20 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்

- ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரது பணிகள் மூன்றைக் குறிப்பிடுவர்.
- அவர் சைவசமயத்துக்கு ஆற்றிய பணிகளை அறிந்து மதிப்பளிப்பர்.
- அவரால் எழுதி வெளியிட்ட நூல்களைத் தேடி அறிவதில் ஈடுபடுவர்.
- குழுவாகச் செயற்படும்போது மற்றவர்களின் கருத்துக்களுக்கு மதிப்பளிப்பர்.
- தம்மாலான சமய, சமூகப் பணிகளைச் செய்ய முன்வருவர்.

இணைப்பு 5.5.1

குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.

செயற்பாட்டுப்படிவம்

(1) "சைவ சமயத்தை வளர்த்தவர்களில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரும் ஒருவராவார்" இக் கூற்றுப் பற்றி உங்கள் கருத்துக்களை முன்வையுங்கள்.

ஆற்றிய பணிகள்

| | குழு - 1 | குழு - 2 | குழு - 3 | குழு - 4 |
|---|---|---|---|---|
| இல | சமயப் பணி | சமூகப் பணி | உரையாசிரியர் பணி | கல்விப் பணி |
| 1. | | | | |
| 2. | | | | |
| 3. | | | | |
| 4. | | | | |
| 5. | | | | |

தேர்ச்சி 6.0 : சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளங்கி வெளிப்படுத்துவர்.

தேர்ச்சி மட்டம் 6.1 : சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்ளும் முப்பொருள் உண்மைகளையும், அதன் இயல்புகளையும் நூலாதாரங்களுடன் விளக்குவர்.

செயற்பாடு 6.1 : சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களை நூலாதாரங்களுடன் அறிவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 6.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 6.1.1 :
- உயிர்களையும் உலகத்தையும் படைத்தவன் யார்? என்பதை கரும்பலகையில் எழுதி வினாவுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - சைவ சித்தாந்தம் முப்பொருள் உண்மை பற்றி விளக்கும்.
> - முப்பொருட்களும் பதி, பசு, பாசம் எனப்படும்.
> - முப்பொருள் பற்றி அறிந்து கொள்வதற்கு பல நூல்கள் உள்ளன. அவையாவன:
>   - சிவஞானபோதம்
>   - சிவப்பிரகாசம்
>   - சிவஞானசித்தியார்
>   - திருவருட்பயன்

(10 நிமிடங்கள்)

படி 6.1.2 :
- மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரியுங்கள்.
- குழு ஆய்வுக்கான செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- எல்லா மாணவர்களையும் செயற்பாட்டில் ஈடுபடுத்தி வழிப்படுத்துங்கள்.

(30 நிமிடங்கள்)

படி 6.1.3 :
- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.

- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்ளும் முப்பொருள் களாவன:
  - பதி
  - பசு
  - பாசம்
- முப்பொருள் உண்மையினை, சைவசித்தாந்த அளவை முறை நிலைநிறுத்தும்.
- அதனைக் காட்சி, கருதல், உரை என்னும் அளவுகோலால் நிறுவலாம்.
- இம் முப்பொருள்களில் பதி முதன்மையானது.
- பதிக்குப் பல்வேறு இயல்புகள் உண்டு.
  - இறப்பு பிறப்பு அற்றது
  - விருப்பு வெறுப்பு அற்றது
  - இன்ப துன்பம் அற்றது
  - அறிவிக்காமலே அறியும் தன்மை கொண்டது.
  - சர்வ வியாபகத் தன்மை உடையது.
- இறைவனது இயல்பினை விளக்கும் வகையில் பின்வரும் சூத்திரங்கள் அமையும்.
  "எங்கும் எவையும் எரியுறு நீர்போல்
  ஏகன் தங்குமவன் தானே தனி"
  "அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
  நிகரில் இறை நிற்கும் நிறைந்து"
- பசுவின் தன்மைகளைப் பின்வருமாறு கூறலாம்.
  - எண்ணற்றவை
  - அழிவற்றவை
  - அறிவித்தால் மட்டும் அறியக்கூடியது
  - பாசத்திற்கு கட்டுப்படுவது
- பசுவின் தன்மையினைப் பின்வரும் சூத்திரங்கள் மூலம் விளக்கலாம்.
  "பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு
  அறிவென்றபேர் நன்றற"
- பாசம் - தளை, கட்டு, மலம், பந்தம் என்னும் பெயர்களால் அழைக்கப்படும்.
- கட்டு என்பதன் பொருள் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் தம்முள் கட்டுண்டு கிடக்கும்.
- ஆணவம் என்பது ஆன்மாவை அணுத்தன்மை செய்வதாகும்.
- ஆணவத்திற்குப் பல பெயர்கள் வழங்கப்படு கின்றன. அவையாவன:
  மூல மலம், இருள் மலம், சகச மலம்
- கன்மத்துக்கு வழங்கப்படும் மறுபெயர்களாவன செயல், வினை

- கன்மம் மூன்று வகைப்படும்.
  சஞ்சிதம், பிரார்த்தம், ஆகாமியம
  இவையும் ஆன்மாக்கள் முத்தி அடைவதற் கான அத்துவாக்கள்.
- மாயை உலகத் தோற்ற, ஒடுக்கத்திற்குக் காரண மாக அமைகின்றது.
- ஆன்மா இறைவனை அடைவதற்குப் பல மார்க்கங்கள் உள்ளன. அவையாவன:
  - சரியை
  - கிரியை
  - யோகம்
  - ஞானம்

(40 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:

- பதியின் இயல்புகள் நான்கினைக் குறிப்பிடுவர்.
- பதியின் சிறப்பை உணர்ந்து, அவரைப் போற்றுவர்.
- பதிக்கும் உயிருக்கும் இடையிலான தொடர்பைக் குறிப்பிடுவர்.
- இறைவனை அடைவதற்கான வழிகளை அறிந்து பட்டியற்படுத்துவர்.
- முத்தியடைவதற்கான வழிகளைச் சமூகத்திற்கு எடுத்துக் கூறுவர்.

**இணைப்பு 6.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களின் முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

(இவற்றைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளிக்கவும்.)

(1) பதியின் இயல்புகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுங்கள்.
(2) பசுவின் இயல்புகளைக் கலந்துரையாடி எடுத்துக் கூறுங்கள்.
(3) இறைவனை அடைவதற்குரிய வழிகளுள் மாயைக்குரிய பங்கினை எடுத்துக் கூறுங்கள்.
(4) பதிக்கும், பசுவிற்கும் இடையிலான தொடர்பை விளக்குங்கள்.
(5) ஆணவத்தின் மறுபெயர்களைக் குறிப்பிடுங்கள்.
(6) "பொறியின்றி ஒன்றும்......" எனும் திருவருட்பயன் பாடலை முழுமையாக எழுதி, அதன் பொருளையும் எழுதுங்கள்.

தேர்ச்சி 6.0 : சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளங்கி வெளிப்படுத்துவர்.

தேர்ச்சி மட்டம் 6.2 : ஆன்மீக விடுதலையை நோக்காகக் கொண்டு, அதற்கான செயற்பாடுகளில் ஈடுபடுவர்.

செயற்பாடு 6.2 : தீட்சை பெற்று, சைவ சமயி ஆவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 6.2.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 6.2.1 :
- தீட்சை அளிக்கும் நிகழ்ச்சி பற்றி மாணவர்கள் தாம் கண்டறிந்தவற்றைக் கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- தீட்சை பெற்றுக் கொள்ள வேண்டியதன் அவசியத்தை மாணவர்கள் கூறச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - ஒவ்வொருவரும் சைவசமய தீட்சை பெறுதல் அவசியம்.
> - தீட்சை என்பது மலத்தைக் கெடுத்து, ஞானத்தைக் கொடுப்பதாகும்.
> - தீட்சையானது பல்வேறு முறைகளில் அளிக்கப் படும்.
> - தீட்சை அளிக்கும் சிவாசாரியார் பல்வேறு தகுதிகளைக் கொண்டிருத்தல் வேண்டும்.
> - தீட்சையின் நோக்கம் ஆன்மீக விடுதலைக்குப் படியாக அமைதலாகும்.
> - இறைவனே குருவாக வந்து தம் அடியவர் களுக்குத் தீட்சை அளித்த சந்தர்ப்பங்கள் பல உள்ளன.
> - தீட்சை பெற்றவர்களுக்குப் பல்வேறு சமய ஒழுக்கங்கள் வகுக்கப்பட்டுள்ளன.

(05 நிமிடங்கள்)

படி 6.2.2 :
- மாணவர்களை நான்கு சிறுகுழுக்களாகப் பிரியுங்கள்.
- குழுக்களுக்கு இணைப்பு 6.2.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபடுவதை நெறிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 6.2.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- அறிக்கையைப் பூரணப்படுத்த குழுவின் அங்கத்தவர்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஒவ்வொரு சைவ சமயத்தவரும் தீட்சை பெற்று சைவசமயி ஆதல் அவசியமாகும்.
- தீட்சை பெறுபவனே சைவசமயி ஆவான்.
- சைவசமயிகளின் ஒழுகலாறுகளை நெறிப்படுத்தும் சாதனங்களுள் தீட்சையும் ஒன்றாகும்.
- தீட்சை என்பது மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுத்தல் என்பதாம்.
- ஆன்மிக விடுதலை பெற்றுக் கொள்ளத் தகுதியுடையவனாக்குவது தீட்சை ஆகும்.
- தீட்சை பல்வேறு வகைகளாகக் காணப்படுகின்றன. அவையாவன:
  சமய, விசேட, நிர்வாண தீட்சை
- நயனதீட்சை, பரிசதீட்சை, வாசகதீட்சை, மானசதீட்சை, ஔத்திரி தீட்சை - விளக்கம்
- ஔத்திரி தீட்சை இருவகையாகச் செய்யப்படுகின்றது.
  - கிரியாவதி முறை
  - ஞானவதி முறை
- தீட்சை அளிக்கும் சிவாசாரியார் பல்வேறு தகுதிகளைக் கொண்டிருத்தல் வேண்டும்.
  - ஆசாரி அபிடேகம் பெற்றிருத்தல்
  - சைவ சித்தாந்த சாத்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவராக இருத்தல்.
  - அவற்றை நல்ல முறையில் எடுத்துரைக்கும் திறனுடையவராக இருத்தல்.
  - திருமுறைகள், பிரபந்தங்களைக் கற்று அதனை ஏனையவர்க்கும் நடைமுறையில் செயற்படுத்துபவராக இருத்தல்.
  - ஒழுக்கசீலராகவும், சமயத்தின் உன்னத நிலைகளை நன்கு அறிந்தவராகவும் இருத்தல்.
  - இறை வழிபாட்டில் நம்பிக்கை உடையவராக இருத்தல்.

- தீட்சை பெற்றோர் பின்வரும் கடமைகளைச் செய்ய வேண்டும்.
  - சிவசின்னம் தரித்தல்.
  - சந்தியாவந்தனம் செய்தல்.
  - திருமுறைகளை ஓதுதல், மனனம் செய்தல்
  - இறை தொண்டுகளில் ஈடுபடல்.
  - சைவ சித்தாந்த சாத்திரங்களைக் கற்றல்.
  - இறை தியானத்தில் ஈடுபடல்.
  - சமூகத் தொண்டுகளில் ஈடுபடல்.
- ஆன்மீகத்துறையில் இறைவனே குருவடிவாக வந்து அடியவருக்குத் தீட்சை அளித்து ஆட் கொண்ட வரலாறுகள் பல உண்டு.

  **(உ-ம்) நாயன்மார்கள்**

  | | | |
  |---|---|---|
  | சம்பந்தர் | - | நயன தீட்சை |
  | நாவுக்கரசர் | - | திருவடித் தீட்சை |
  | சுந்தரர் | - | திருவடித் தீட்சை |
  | மாணிக்கவாசகர் | - | வாசக தீட்சை |

- சைவசமயத்தவர்களின் வாழ்க்கையில் தீட்சை மிக முக்கியத்துவம் பெற்றுள்ளது.

**(20 நிமிடங்கள்)**

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சைவசமயத்தவர்க்கு உரிய முக்கிய தீட்சைகளைக் குறிப்பிடுவர்.
- தீட்சை அளிக்கப்படும் முறைகளைக் குறிப்பிடுவர்.
- தீட்சையின் முக்கியத்துவத்தை உணர்ந்து, அவற்றைப் பெற்றுக் கொள்ள முன்வருவர்.
- தீட்சை பெற்றுக் கொள்ள வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிடுவர்.
- தீட்சை பெற்று சைவசமயி ஆகி, அதன் மூலம் சைவசமயத்தை வளர்க்க வேண்டும் என்ற மனப்பாங்கை வளர்த்துக் கொள்வர்.

**இணைப்பு 6.2.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- ஒவ்வொரு குழுவும் தமது செயற்பாட்டுப்படிவம் குறித்துக் கவனம் செலுத்துங்கள்.
- உங்கள் குழுவினருடன் கலந்தாலோசித்து செயற்பாட்டில் ஈடுபடுங்கள்.
- உங்கள் குழுவின் கருத்துக்களை அறிக்கையாக்கி, அதனை வகுப்பில் சமர்ப்பிக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப் படிவம்

### குழு 1

(1) தீட்சை என்பதற்கான பொருளை எழுதுங்கள்.
(2) தீட்சை ஏன் பெறவேண்டும் என்பது பற்றி எழுதுங்கள்.

### குழு 2

(1) நாயன்மார்களுக்கு இறைவன் குருவாக வந்து அளித்த தீட்சைகளைக் குறிப்பிடுங்கள்.
(2) சைவர்களுக்கு தீட்சை அளிக்கக்கூடியவர்கள் யார் என்பதை எழுதுங்கள்.

### குழு 3

(1) தீட்சை அளிக்கும் குரு கொண்டிருக்க வேண்டிய தகுதிப்பாடுகளைக் குறிப்பிடுங்கள்.
(2) உங்கள் பிரதேசத்தில் நீங்கள் கண்ட அல்லது அறிந்த தீட்சை அளிக்கப்படும் முறையினைத் தொகுத்து எழுதுங்கள்.

### குழு 4

(1) தீட்சை பெற்றுக் கொண்டவர்கள் பின்பற்றும் ஒழுங்குவிதிகளைக் குறிப்பிடுங்கள்.
(2) சைவசமயத்தின்படி தீட்சை பெற்றுக் கொள்ள வேண்டியதன் அவசியம் பற்றிக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 6.0 : சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளங்கி வெளிப்படுத்துவர்.

தேர்ச்சி மட்டம் 6.2 : ஆன்மீக விடுதலையை நோக்காகக் கொண்டு, அதற்கான செயற்பாடுகளில் ஈடுபடுவர்.

செயற்பாடு 6.2 : சைவ நாற்பாதங்களைக் கடைப்பிடிப்போம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 6.2.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- நாற்பாதங்கள் பற்றிய அட்டவணை
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 6.2.1 :
- நாற்பாதங்களையும் அவற்றின் பிரிவுகளையும் அட்டவணைப்படுத்திக் காட்டுங்கள்.
- நாயன்மார் நால்வரையும் அவர்கள் நின்ற நெறிகளையும் வினாவி, அவை பற்றிக் கூறச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - ஆன்மிக விடுதலையை நோக்காகக் கொண்டு சைவ நாற்பாதங்கள் வகுக்கப்பட்டுள்ளன.
> - சைவ நாற்பாதங்களாகப் பின்வருவன அமையும்.
>   - சரியா பாதம்
>   - கிரியா பாதம்
>   - யோக பாதம்
>   - ஞான பாதம்
> - ஒவ்வொரு பாதங்களும் பல்வேறு அங்கங்களைக் கொண்டவையாக அமைகின்றன.
> - அவைகள் இறைவனை அடைவதற்குரிய மார்க்கங்களாகக் காணப்படுகின்றன.
> - நாற்பாதங்கள் நான்கு முக்திகளைத் தருகின்றன.

(05 நிமிடங்கள்)

படி 6.2.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபடுவதை நெறிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 6.2.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

---

- ஆன்மீக விடுதலையை நோக்காகக் கொண்டு சைவ நாற்பாதங்கள் கடைப்பிடிக்கப் படுகின்றன.
  (உ-ம்) நாயன்மார் வரலாறும் அவர்கள் நின்ற நெறிகளும்.
- சைவநாற்பாதங்கள் நான்கு வகைப்படும்.
  அவையாவன: சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம்.
- இந்நாற்பாதங்களும் பின்வருமாறு உவமித்துக் குறிப்பிடப்படும்.
  சரியை - அரும்பு
  கிரியை - மலர்
  யோகம் - காய்
  ஞானம் - கனி
- நான்கு பாதங்களும் தனித்தனிப் பிரிவுகளைக் கொண்டவையாக அமைகின்றன.
  அவை பின்வருமாறு நிரற்படுத்தப்படும்.
  - சரியை - சரியையில் சரியை
    சரியையில் கிரியை
    சரியையில் யோகம்
    சரியையில் ஞானம்
  - கிரியை - கிரியையில் சரியை
    கிரியையில் கிரியை
    கிரியையில் யோகம்
    கிரியையில் ஞானம்
  - யோகம் - யோகத்தில் சரியை
    யோகத்தில் கிரியை
    யோகத்தில் யோகம்
    யோகத்தில் ஞானம்
  - ஞானம் - ஞானத்தில் சரியை
    ஞானத்தில் கிரியை
    ஞானத்தில் யோகம்
    ஞானத்தில் ஞானம்

- நாயன்மார் நால்வரும் நான்கு மார்க்கங்களில் நின்றனர்.

| | | |
|---|---|---|
| தாசமார்க்கம் - | சரியை | - அப்பர் |
| சற்புத்திரமார்க்கம் - | கிரியை | - சம்பந்தர் |
| சகமார்க்கம் - | யோகம் | - சுந்தரர் |
| சன்மார்க்கம் - | ஞானம் | - மாணிக்கவாசகர் |

- நாற்பாதங்களும் அவற்றைக் கடைப்பிடிக்கும் முறைமைகளும் பின்வருமாறு அமையும்.

| | | |
|---|---|---|
| சரியை | - | உடலால் செய்யப்படும் தொண்டுகள் |
| கிரியை | - | உடலாலும் உள்ளத்தாலும் செய்யப்படும் கிரியை |
| யோகம் | - | அட்டாங்க யோகத்தால் செய்யப்படும் தரிசனம் |
| ஞானம் | - | அறிவு வழி பெறப்படுவது. |

- நாற்பாதங்கள் மூலம் நான்கு வகை முத்திகளைப் பெறலாம்.

| | | |
|---|---|---|
| சரியை | - | சாலோகம் |
| கிரியை | - | சாமீபம் |
| யோகம் | - | சாரூபம் |
| ஞானம் | - | சாயுச்சியம் |

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சைவ நாற்பாதங்கள் பற்றி அறிந்து அவற்றைக் குறிப்பிடுவர்.
- சைவ நாற்பாதங்களைக் குறிப்பிட்டு அவற்றின்படி நின்று ஒழுகுவர்.
- நாயன்மார் நின்ற மார்க்கம் பற்றியும், முக்தி பற்றியும் தொகுத்துக் கூறுவர்.
- சரியை.மார்க்கத்தைக் கடைப்பிடித்து ஆன்மீக விடுதலையை பெற்றுக் கொள்ள முன்வருவர்.

**இணைப்பு 6.2.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- ஒவ்வொரு குழுவும் தமது செயற்பாட்டுப்படிவம் குறித்துக் கவனம் செலுத்துங்கள்.
- உங்கள் குழுவினருடன் கலந்தாலோசித்துச் செயற்பாட்டில் ஈடுபடுங்கள்.
- உங்கள் குழுவின் கருத்துக்களை அறிக்கையாக்கி, அதனை வகுப்பில் சமர்ப்பிக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

### குழு 1

(1) சைவ நாற்பாதங்களின் முக்கியத்துவம் பற்றிய கருத்துக்களை முன்வையுங்கள்.
(2) சைவ நாற்பாதங்களையும் அவற்றின் உட்பிரிவுகளையும் தொகுத்து எழுதுங்கள்.

### குழு 2

(1) சைவ நாற்பாதங்களை நீங்கள் கடைப்பிடிப்பதற்கான காரணங்களைக் குறிப்பிடுங்கள்.
(2) அதன் மூலம் உங்கள் நடைமுறை வாழ்க்கையில் எவ்வாறான அனுபவங்களைப் பெற்றுக் கொண்டீர்கள் என்பதையும் குறிப்பிடுங்கள்.

### குழு 3

(1) சைவ நாற்பாதங்களில் நின்ற நாயன்மார்கள் அடைந்த முக்தி நிலை பற்றி உங்கள் கருத்துக்களை முன்வையுங்கள்.
(2) சைவ நாற்பாதத்தைக் கடைப்பிடிப்பதனால் எவ்வாறான நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளலாம் என்பதை எழுதுங்கள்.

### குழு 4

(1) சைவ சமயத்தில் நாற்பாதங்களின் பங்கு எத்தகையது என்பது பற்றி கருத்துக்களை முன்வையுங்கள்.
(2) சைவ நாற்பாதங்களின் உட்பிரிவுகளில் குறிப்பிடப்படும் விடயங்களை குறிப்பிடுங்கள்.

**தேர்ச்சி 7.0** : நாட்டார் சமய வழிபாடுகளையும், வழக்காறுகளையும் அறிந்து அவற்றிற்கு மதிப்பளிப்பார்.

**தேர்ச்சி மட்டம் 7.1** : நாட்டார் தெய்வங்களையும் அவற்றின் வகைகளையும் பற்றி விளக்குவர்.

**செயற்பாடு 7.1** : நாட்டார் தெய்வங்களின் ஆலயங்களைப் பேணிப் பாதுகாப்போம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்

**தரவிருத்தி உள்ளீடுகள்** :
- இணைப்பு 7.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- ஆலயங்களின் படங்கள்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

**கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 7.1.1** :
- தங்கள் ஊரில் உள்ள கிராமிய தெய்வங்களுக்குரிய ஆலயங்கள் பற்றி, மாணவர்கள் கூறுவதற்கு இடம் அளியுங்கள்.
- மாணவர்கள் கூறியவற்றின் மூலம் கிராமியத் தெய்வங் களை அறிந்து, அவற்றுள் பெண் தெய்வங்களை இனங் காணச் செய்யுங்கள்.
- வற்றாப்பளைக் கண்ணகை அம்மன், காரைதீவுக் கண்ணகை அம்மன் ஆலயங்களின் படங்களையும் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - நாட்டார் வழிபாட்டில் பெண் தெய்வங்களும் அடங்கும்.
> - நாட்டார் வழிபாட்டில் கண்ணகியம்மன் முதன்மையான தெய்வம் ஆகும்.
> - வட மாகாணத்திலுள்ள புகழ் பெற்ற கண்ணகி அம்மன் ஆலயங்களுள் வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயமும் ஒன்றாகும்.
> - கிழக்கு மாகாணத்திலுள்ள சிறப்பு வாய்ந்த அம்மன் ஆலயங்களுள் காரைதீவுக் கண்ணகி அம்மன் ஆலயம் பிரசித்தி பெற்றதாகும்.

**(10 நிமிடங்கள்)**

**படி 7.1.2** :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபடுவதை நெறிப்படுத்துங்கள்.

**(30 நிமிடங்கள்)**

படி 7.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- கஜபாகு மன்னனால் கொண்டு வரப்பட்ட கண்ணகி வழிபாடு அனுராதபுரத்திலிருந்து இலங்கையின் வடபகுதிக்குப் பரவியது என்பது ஓர் ஐதீகம்.
- கண்ணகி பத்தாவதாகத் தங்கிய இடம் ஆதலால் இது பத்தாப்பளை என முன்னர் அழைக்கப்பட்டு, பின்னர் இச் சொல் மருவி வற்றாப்பளை ஆகிற்று என்பர்.
- வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயம் முல்லைத்தீவு மாவட்டத்தின் நந்திக்கடலை அண்மித்த வற்றாப்பளையில் அமைந்துள்ளது.
- இக்கோயில் போர்த்துக்கேயர்கள் வடபகுதியைக் கைப்பற்றும் வரை குறுநில மன்னர்களாகிய வன்னி மன்னர்களது ஆதரவைப் பெற்றிருந்தது.
- இவ்வாலயத்தின் பொங்கல் சடங்கு வைகாசிப் பூரணை தினத்தில் நடைபெறும்.
- வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயத்தின் மீது,
  - வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் வசந்தன் பாடல்
  - மழைக்காவியம்
  - அம்மானை முதலான பாடல்கள்

  பாடப்பட்டுள்ளன.
- இன்று அங்கு நடைபெறும் கிரியைகள் ஆகம விதிக்கமைந்து பிராமணரால் நடாத்தப்படுவதோடு பொங்கல் சடங்கு பூசகரால் நடாத்தப் படுகின்றது.
- காரைதீவுக் கண்ணகியம்மன் ஆலயம் அம்பாறை மாவட்டத்தில் காரைதீவு எனும் கிராமத்தில் அமைந்துள்ளது.
- யாருக்கும் தோன்றாத கண்ணகி அம்மன் சிலை, கதிர்காம யாத்திரையின் பொருட்டு வந்த மாது ஒருத்திக்குக் காட்சி கொடுத்தது.
- சிங்காரத் தோப்பு வன்னிமை கண்ணகி அம்மன் சிலையின் மகிமையை அறிந்து, அங்கு கண்ணகி அம்மன் ஆலயத்தை அமைத்தார்.

- கஜபாகு மன்னனால் அமைக்கப்பட்ட ஆலயங்களுள் இதுவும் ஒன்று என்பது ஐதீகம்.
- கலிங்கன் என்ற வன்னிமையின் மனைவியர் இருவரும் கண்ணகியின் அகோரத் தோற்றம் உடைய நேர்க் கண்பார்வையைப் பெற்றமையால் தமது கண்பார்வையை இழந்தனர். இந்த அற்புதம் காரணமாக இங்கு ஆலயம் அமைக்கப்பட்டு, கண்ணகி வழிபடப்படுகின்றார்.
- நாட்டார் சடங்கும் ஆகமக் கிரியையும் இணைந்ததாக இங்கு வழிபாடு காணப்படுகின்றது.
- வைகாசிப் பூரணை தினத்தை அடுத்துவரும் திங்களில் பொங்கல் மற்றும் குளிர்த்திச் சடங்கு இடம்பெறும்.
- பங்குனி உத்தரத்தன்று தீர்த்தம் இடம்பெறக் கூடியதாக ஆலய மகோற்சவம் ஒன்பது நாட்கள் இடம் பெறும்.
- இங்கு கண்ணகி அம்மனுக்குக் கப்புகனாரினால் சடங்கு ஆற்றப்படுகின்றது.
- இவ்வாலயத்தில் வைகாசிச் சடங்கு நடைபெறும் போது கண்ணகி வழக்குரை, படனம் செய்யப் படுகின்றது.
- இவ்வாலயத்தில் அமைந்துள்ள அம்மன் அருள் மிக்கது.

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயம், காரைதீவுக் கண்ணகி அம்மன் என்பவற்றின் அமைவிடம், தோற்றம், சடங்குமுறை என்பவற்றை ஒப்பிட்டு எழுதுவர்.
- நாட்டார் தெய்வ வழிபாடுகளுக்கு மதிப்பளிப்பர்.
- இவ்வாலயங்கள் வாயிலாகக் கற்ற, சடங்கு முறைகளை ஏனைய பிரதேசத்தில் காணப்படும் நாட்டுப்புற ஆலயச் சடங்கோடு ஒப்பிட்டு, பரிசீலனை செய்வர்.
- ஒவ்வொருவரும் தத்தம் பிரதேசங்களிலுள்ள நாட்டார் தெய்வ ஆலய வரலாறுகளை அறிவதோடு அவற்றைப் பேணிப் பாதுகாக்கவும் முன்வருவர்.
- கூட்டு மனப்பாங்குடன் இயங்குவர்.

**இணைப்பு 7.1.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- தரப்பட்டுள்ள நாட்டார் தெய்வங்களுள் உங்கள் குழுவுக்குக் கிடைத்த ஆலயம் பற்றி உங்களது கவனத்தைச் செலுத்துங்கள்.
    - வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயம்
    - காரைதீவுக் கண்ணகி அம்மன் ஆலயம்

- உங்கள் குழுவுக்கு தரப்பட்ட ஆலயம் சார்பான தரவுகளைப் பட்டியற்படுத்துங்கள்.

- உங்கள் குழுவுக்குரிய ஆலயம் பற்றிய விளக்கங்களை வகுப்புக்கு முன்னால் வந்து விளக்கிக் கூறுவர்.

## செயற்பாட்டுப்படிவம்

குழு 1, 3 ஆகியவற்றுக்கு வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் வரலாறும் குழு 2, 4 ஆகியவற்றுக்கு காரைதீவுக் கண்ணகி அம்மன் வரலாறும் எழுதும்படி கூறுக.

- ஆலயத்தின் அமைவிடம்
- ஆலய தோற்றம் தொடர்பான ஐதீகம்
- ஆலயத்தில் இடம் பெறும் சடங்குகள்
- நாட்டார் வழிபாட்டில் ஆகம வழிபாட்டின் செல்வாக்கு

தேர்ச்சி 7.0 : நாட்டார் சமய வழிபாடுகளையும், வழக்காறுகளையும் அறிந்து அவற்றிற்கு மதிப்பளிப்பர்.

தேர்ச்சி மட்டம் 7.2 : நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்கை ஆற்றுப்படுத்துவோர் பற்றிய விளக்கத்தைப் பெறுவர் (பூசகர்).

செயற்பாடு 7.2 : நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்கை ஆற்றுப்படுத்து வோருக்கு மதிப்பளிப்போம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 7.2.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 7.2.1 :
- உங்கள் ஊரில் உள்ள ஆகமம் சார்ந்த ஆலயங்கள், ஆகமம் சாராத ஆலயங்கள் என்பவற்றைக் கூறுங்கள். அங்கு பூசை செய்வோர் யாவர்? எனும் வினாக்களை மாணவரிடம் வினாவி, விடை கூற இடமளியுங்கள்.
- மாணவர்களின் விடைகளினூடாக நாட்டார் தெய்வ ஆலயங்களில் சடங்குகளை மேற்கொள்பவர்களை இனங்காணுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - நாட்டுப்புறத் தெய்வங்களுக்குரிய ஆலயங் களில் இடம் பெறும் சடங்குகளைப் பூசாரிமாரே ஆற்றுவர்.
> - தெய்வங்களுக்குச் சடங்குகளை நடாத்துவதில் பூசாரிகளிடையே வேறுபாடு காணப்படுகின்றது.
> - பிராமணர்களாலும் பூசாரியாலும் நடாத்தப் படும் சடங்குகள் வேறுபட்டுக் காணப்படும். (கிரியை)

(05 நிமிடங்கள்)

படி 7.2.2 :
- மாணவர்களை மூன்று குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபடுவதை நெறிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 7.2.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்குகளைப் பின்வருவோர் ஆற்றுகின்றனர்.
  - கட்டாடியார்
  - கப்புகனார்
  - பூசாரியார்
- கண்ணகியம்மன் கோயில் சடங்குகளைப் பக்தியுடன், நடாத்துபவர் கட்டாடியார் என்றும் அழைக்கப்படுவர்.
- ஆலய நிர்வாக பரம்பரையினருக்கும் கட்டாடி யாருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.
- வாயைத் துணியால் கட்டி மௌனமாக பூசை செய்பவர்களைக் கப்புகனார் என்று அழைப்பர்.
- நாட்டுப்புற தெய்வங்களுக்குச் சடங்குகளை மந்திரங்களோடு நடாத்துபவர் பூசாரியார் என அழைக்கப்படுவார்.
- நாட்டுப்புறத் தெய்வங்களுக்குரிய மந்திரங்களைக் கூறும் பத்ததிகளைக் கொண்டு பூசாரிமார் சடங்குகளை நடாத்துவர்.
- சடங்கு நடாத்தப்படும் இடத்தைக் காவல் செய்தல், கதவு திறத்தல், கும்பம் வைத்து உருக்கொள்ளுதல், கலியாணக்கால் நாட்டுதல், நோர்ப்புக்கு நெல் குத்துதல் / வட்டுக் குத்துதல், தெய்வம் ஆடுபவர்களுக்கு உருவேற்றுதல், பலி கொடுத்தல் என்பன சடங்கின் போது இடம் பெறும். அத்துடன் குளிர்த்திக்கு ஆயத்தம் செய்யும் போதும் பூசகர் மந்திரங்களை உற்சாடனம் செய்வர்.
- வழிபாட்டில் மாத்திரமின்றி, அடியவர்கள் மத்தியி லும் பூசகர் செல்வாக்குப் பெற்றுள்ளனர். உ-ம்
  - வளவு காவல் பண்ணுதல்
  - தண்ணீர் ஓதிக் கொடுத்தல்

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்குகளை மேற்கொள்வோரையும், அவர்களது பணிகளையும் பற்றிக் குறிப்பிடுவர்.
- நாட்டார் தெய்வ வழிபாட்டினை மேற்கொள்பவர்களது பங்களிப்பினை அறிந்து, தமது பிரதேசங்களில் உள்ள பூசகர்களுக்கு மதிப்பளிப்பர்.
- நாட்டார் தெய்வ வழிபாட்டுச் சடங்குகளுக்கும் ஆகம முறைப்படி அமைந்த கிரியை களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளை ஒப்பிட்டு எழுதுவர்.
- நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்குகளை மேற்கொள்ளும் பூசகர்கள் அல்லது கட்டாடிமார் பற்றிய சொற்பொழிவு ஒன்றினை நிகழ்த்துவர்.
- நாட்டார் சடங்குகளில் பங்குபற்றும்போது கூட்டு மனப்பாங்குடன் செயற்படுவர்.

**இணைப்பு 7.2.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்ற விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- குழுக்களுக்கு முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

(1) சடங்கை ஆற்றுப்படுத்தும் பொழுது பூசகரின் நிலையினை அடிப்படை யாகக் கொண்டு பின்வரும் தகவல்களைத் திரட்டுங்கள்.

குழு - 1. பூசகரின் தோற்றம்
குழு - 2. சடங்குகளை நடாத்தும் ஒழுங்கு முறைமை
குழு - 3. அடியவர்கள் மத்தியில் பூசகர் பெறும் மதிப்பு

**தேர்ச்சி 7.0** : நாட்டார் சமய வழிபாடுகளையும், வழக்காறுகளையும் அறிந்து அவற்றிற்கு மதிப்பளிப்பர்.

**தேர்ச்சி மட்டம் 7.3** : நாட்டார் தெய்வ வழிபாட்டிற்கும் சமூகத்திற்குமிடையிலான தொடர்பினை இனங்காண்பர்.

**செயற்பாடு 7.3** : நாட்டார் தெய்வ வழிபாட்டிற்கும் சமூகத்திற்குமிடையிலான தொடர்பினை அறிவோம்.

**நேரம்** : 40 நிமிடங்கள்

**தரவிருத்தி உள்ளீடுகள்** :
- இணைப்பு 7.3.1 இல் உள்ள செயற்பாட்டுப் படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

**கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 7.3.1** :
- "நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டில் பொதுமக்களின் பங்குபற்றல் மிகுதியானது" என்னும் தலைப்பினைக் கரும் பலகையில் எழுதி, தலைப்புச் சார்பாக மாணவர் களது சிந்தனையைத் தூண்டுங்கள்.
- அதற்கான காரணங்களை மாணவர்கள் கூறச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - பெருந் தெய்வ வழிபாட்டு முறையான ஆகம மரபுக்கு உட்பட்ட வழிபாட்டு முறை எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக இடம்பெறும்.
> - நாட்டுப்புறத் தெய்வங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்துவமான வழிபாட்டு மரபுகள் காணப்படு கின்றன.
> - அவை இடத்துக்கு இடம் வேறுபட்டு அமையும்.

**(05 நிமிடங்கள்)**

**படி 7.3.2** :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவும் செயற்பாட்டில் ஈடுபடுவதை நெறிப்படுத்துங்கள்.

**(15 நிமிடங்கள்)**

**படி 7.3.3** :
- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.

- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு, சமூகத்தின் விருப் பத்திற்கேற்ப அமைகிறது.
- கடவுள் மீது கொண்ட நம்பிக்கையும், பக்தியும், நோய்களைத் தீர்க்கும் என அடியவர்கள் நம்புவர்.
- இறைவன் மேல் பக்தி கொண்டு செயற்படுவதன் மூலம் தாம் நினைத்தவை நிறைவேறும் என நம்புவர்.
- எண்ணிய காரியம் கைகூடல், தூரப் பயண வழித்துணை, வீட்டையும் கிராமத்தையும் காவல் புரிதல் என்ற நம்பிக்கை
- விபூதி போடுதல், சாமி பார்த்தல், நூல் கட்டுதல், தண்ணீர் அல்லது இளநீர் ஓதிக் கொடுத்தல் போன்ற நம்பிக்கைகள்
- கிராமத்தின் அனைத்து வீதிகள்ஊடாகவும் மடைப்பெட்டி, பட்டு எடுத்து வருதல்

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- நாட்டுப்புறத் தெய்வங்களுக்கும் சமூகத்துக்கும் இடையிலான தொடர்பினை எடுத்துக் கூறுவர்.
- ஒவ்வொரு பிரதேசத்தவராலும் ஆற்றப்படுகின்ற வழிபாட்டு மரபுகளுக்கு மதிப்பளிப்பர்.
- நாட்டுப்புறத் தெய்வ வழிபாடுகள் பிரதேசங்களிடையே வேறுபட்டுக் காணப்படுவதைப் பரிசீலிப்பர்.
- தமது சூழலில் காணப்படும் நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டுடன் ஏனைய பிரதேச சூழலில் உள்ள நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டுடன் ஒப்பு நோக்குவர்.
- சமூகத்தில் நாட்டார் வழிபாடு வகிக்கும் பங்கினைப் பிறருக்கு எடுத்துக் கூறுவர்.

**இணைப்பு 7.3.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுவுக்குரிய செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்குக் கிடைத்த விடயங்களைத் தெரிந்து கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்குக் கிடைத்த நாட்டுப்புறத் தெய்வம் சார்பான தகவல்களைச் சேகரித்து, குழு நிலையில் கலந்துரையாடுங்கள்.
- அதனை வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

| | |
|---|---|
| குழு - 1 | நாட்டார் தெய்வ வழிபாடு சமூகத்தில் நிலைத்து நிற்பதற்கான காரணங்கள் |
| குழு - 2 | நாட்டார் தெய்வ வழிபாட்டுக்கும், சமூகத்துக்குமிடையிலான தொடர்புகள். |
| குழு - 3 | இவ்வழிபாடு சமூகத்தில் சமய நம்பிக்கைகளையும், பண்புக் கூறுகளையும் வளர்க்கும் விதம். |
| குழு - 4 | நாட்டார் தெய்வ வழிபாடுகளைப் பேணிப் பாதுகாப்பதன் அவசியம். |

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : பௌத்தத்திற்கு முற்பட்ட ஈழத்துச் சைவசமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :
- "இலங்கையில் சைவசமயம்" என்னும் தலைப்பினைக் கரும்பலகையில் எழுதுங்கள்.
- இலங்கையில் சைவசமயம் தோற்றம் பெற்ற காலப் பகுதிகளைக் கூறச் சந்தர்ப்பமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - இலங்கையில் வரலாற்றுக்காலம் தொடக்கம் சைவசமயம் நிலவி வருகின்றது.
> - இலங்கையின் சைவசமயம் பற்றிய ஆரம்ப கால நிலைகளை அறிய பௌத்தத்திற்கு முற்பட்ட காலப்பகுதி உதவுகின்றது.
> - பௌத்தத்திற்கு முற்பட்ட காலப்பகுதியில் நிலவிய சைவசமய மரபுகளைப் பல வரலாற்றாதாரங்கள் மூலம் அறிய முடிகின்றது.

**(05 நிமிடங்கள்)**

படி 8.1.2 :
- மாணவர்களைச் சிறிய குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப் படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- வேலைகளை ஒப்படைத்து குழுக்களைத் தேடியாய்வில் ஈடுபடுத்துங்கள்.
- தேடியாய்ந்தவற்றை வகுப்பில் முன்வைப்பதற்கான ஆயத்தங்களைச் செய்து கொள்ளுமாறு அறிவுறுத்துங்கள்.

**(15 நிமிடங்கள்)**

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஈழத்துச் சைவ மரபுகள் பற்றி அறியப்படுகின்ற வரலாற்றுக் காலங்களுக்குள் முதலாவதாகப் பௌத்தத்திற்கு முற்பட்ட காலப் பகுதி அமைகின்றது.
- வரலாற்றுக் காலம் முதல், மகிந்த தேரர் இலங்கையில் பௌத்த சமயத்தை அறிமுகப் படுத்திய காலம் வரையிலான பகுதி பௌத்தத் திற்கு முற்பட்ட காலப்பகுதியாகும்.
- பௌத்தத்திற்கு முற்பட்ட சைவசமய மரபுகள் பற்றி அறிய பின்வரும் வரலாற்றுச் சான்றுகள் உதவுகின்றன.
    - இதிகாசம் : இராமாயணம்
      மகாபாரதம்
    - புராணம் : தட்சணகைலாய புராணம்
      கந்தபுராணம்
    - மகாவம்சம், தீபவம்சம், சூளவம்சம் முதலான வரலாற்று நூல்கள்
    - தொல்பொருட் சின்னங்கள்
- இராமாயணத்தின் மூலம் இராவணன் சிறந்த சிவபக்தனாக விளங்கியமையும் அவனது தாய் கோணேசர் ஆலய வழிபாட்டை மேற்கொண்டதை யும் அறிய முடிகின்றது.
- பொன்பரிப்பு, ஆனைக்கோட்டை முதலான இடங் களில் கிடைக்கப்பெற்ற வேலாயுதங்கள், சேவற் சிலைகள், காவடி என்பன அக்காலத்தில் நிலவிய முருக வழிபாடு பற்றிக் கூறும் சான்றாதாரங் களாகும்.
- உருகுணைப் பூங்காவில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டில் "சிவநகர்" என்ற அடைமொழி காணப்படுகின்றது.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- பௌத்தத்திற்கு முற்பட்ட ஈழத்துச் சைவ மரபுகளை அறிய உதவும் சான்றாதாரங் களைத் தேடி எழுதுவர்.
- தாம் கண்டறிந்த வரலாற்றுச் சான்றாதாரங்களுக்கு மதிப்பளிப்பர்.
- வரலாற்றுச் சான்றுகள் கூறும் கருத்துக்களை ஒப்பிட்டு மதிப்பீடு செய்வர்.
- குழுவில் ஒத்துழைப்புடன் செயற்படுவர்.
- ஈழத்துச் சைவ சமயத்தின் தொன்மையை அறிய உதவும் ஆதாரங்களைப் பேண முற்படுவர்.

**இணைப்பு 8.1.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்
**(இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளிக்கவும்.)**

இலங்கையில் பௌத்தத்திற்கு முற்பட்ட சைவம் பற்றிய பின்வரும் விடயங் - களைச் சுருக்கமாகக் குறிப்பிடுங்கள்.

(1) தேவநம்பியதீசனுக்கு முன்னர் இலங்கையை ஆண்ட சைவ மன்னர்கள் மூவரின் பெயர்களைக் குறிப்பிடுங்கள்.
(2) இலங்கையின் ஆதிக் குடிகளையும் அவர்களது சமய நம்பிக்கைகளையும் எழுதுங்கள்.
(3) இராமாயணம் வெளிப்படுத்தும் சைவசமயம் பற்றிய செய்திகள் மூன்றினைக் குறிப்பிடுங்கள்.
(4) "பௌத்தத்திற்கு முற்பட்ட கால இலங்கையில் முருக வழிபாடு நிலவியது" என்பதற்கான ஆதாரங்களைக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : பௌத்தத்திற்கு பிற்பட்ட அனுராதபுர, பொலநறுவைக் காலங்களில் நிலவிய ஈழத்து இந்து சமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :

- சுயமாக முன்வரும் மாணவர் ஒருவரை, வகுப்பின் முன்னால் அழைத்து, இலங்கையில் பௌத்தத்திற்கு பிற்பட்ட பொலநறுவைக் காலப் பகுதியில் நிலவிய ஈழத்துச் சைவசமயம் என்ற தலைப்பில் பேசுமாறு கூறுங்கள்.
- அதிலிருந்து அனுராதபுர பொலநறுவைக் காலப்பகுதி யில் சைவசமயம் எவ்வாறு பேணப்பட்டது பற்றி மாணவரிடம் வினவுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - இலங்கையில் சைவ சமயத்தின் தொன்மையை அறிய உதவும் காலமாக அனுராதபுர, பொலநறுவைக் காலங்கள் அமைகின்றன.
> - அக்காலப் பகுதிகளில் நிலவிய சைவுசமய மரபுகளைப் பல வரலாற்றுச் சான்றுகள் மூலம் அறியலாம்.
> - இத்தகைய வரலாற்று ஆதாரங்கள் ஈழத்துச் சைவ சமயத்தின் தோற்றத்திற்கும் தொடர்ச்சிக் கும் ஆதாரமாக அமைகின்றன.

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :

- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- இணைப்பு 8.1.1 இல் காணப்படும் செயற்பாட்டுப் படிவத்தின் பிரதிகளைக் குழுக்கள் ஒவ்வொன்றுக் கும் பகிர்ந்தளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் எழுது கடதாசி, நிறப்பேனாக் கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.

- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து நெறிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இலங்கையின் சைவ சமய வரலாற்றுக்கு அனுராதபுரக் காலமும், பொலநறுவைக் காலமும் தனித்துவமான பங்கினை ஆற்றி உள்ளன.
- அனுராதபுர, பொலநறுவைக் காலத்தில் ஆட்சி செய்த மன்னர்களுள் கீழ்வருவோர் சைவ சமய வளர்ச்சிக்கும் பணியாற்றி உள்ளனர்.
    - கஜபாகு
    - எல்லாளன்
    - இராஜேந்திரசோழன்
    - விஜயபாகு
    - விக்கிரமபாகு
- கஜபாகு மன்னன் இலங்கையில் கண்ணகி வழிபாட்டினை அறிமுகப்படுத்தினான்.
- எல்லாளன் மனுதர்ம சாத்திரத்தின்படி நீதி தவறாது நாற்பது ஆண்டுகள் அனுராதபுரியை ஆண்டான்.
- வானவன் மாதேவி ஈஸ்வரம் என அழைக்கப்பட்ட இரண்டாம் சிவாலயத்தை இராஜேந்திர சோழன் அமைத்தான்.
- விஜயராஜ ஈஸ்வரம் என்னும் சிவாலயம் விஜய பாகுவினால் அமைக்கப்பட்டது.
- அனுராதபுரம், பொலநறுவை, பதவியா, கந்தளாய் போன்ற இடங்களில் கிடைக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் தரும் செய்திகள் மூலம் இக் காலத்தில் அமைக்கப் பெற்ற ஆலயங்கள் பற்றிய விபரங்களை அறிய முடிகின்றது.

  **உதாரணம்:**

  மாதோட்டம் - திருவி இராமேஸ்வரம்
  மண்டலகிரி - பண்டித சோழேஸ்வரம்
  பதவியா - இரவிகுல மாணிக்க ஈஸ்வரம்
  திருக்கோணேஸ்வரம் - மச்சேஸ்வரம்

- 7 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தரும் 8 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரரும் ஈழத்துத் திருத்தலங்களாகிய திருக்கேதீஸ்வரம், திருக்கோணேஸ்வரம் ஆகிய தலங்கள் மீது பதிகம் பாடி உள்ளனர்.
- மேற்படி காலப் பகுதிகளைச் சார்ந்ததாகக் கருதப் படும் வெண்கலச் சிலைகளும், கருங்கற் சிலை களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை பின்வரும் திருவுருவ வகையைச் சார்ந்தனவாக அமைந்தன.
  - நடராஜர்
  - சோமாஸ்கந்தர்
  - சந்திரசேகரர்
  - பார்வதி
  - விநாயகர்
  - முருகன்
  - வைரவர்
  - சூரியன்
  - துர்க்கை
  - விஷ்ணு
  - நாயன்மார்கள்
  - திரிசூலம்

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- அனுராதபுர, பொலநறுவைக் காலச் சைவ சமய நிலையினைக் குறிப்பிடுவர்.
- அனுராதபுர, பொலநறுவைக் கால சைவ சமய மரபுகளை முன்னைய கால மரபு களோடு ஒப்பிட்டு நோக்குவர்.
- அக்காலச் சைவசமய மரபுகளுக்கு மதிப்பளிப்பர்.
- சைவசமயத்தை உறுதிப்படுத்தும் வரலாற்று ஆதாரங்கள் தத்தம் பிரதேசங்களில் காணப்படுகின்றனவா என்பதை ஆராய்வதில் ஈடுபடுவர்.
- ஈழத்துச் சைவ சமயத்தின் தொன்மையை அறிய உதவும் ஆதாரங்களைப் பேண முற்படுவர்.

**இணைப்பு 8.1.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

சைவசமய வளர்ச்சி பற்றி அறிவதற்கு அனுராதபுர, பொலநறுவைக் காலப் பகுதிகள் முக்கியமானவையாகும்.
சான்றாதாரங்களாவன:

(1) வரலாற்று நூல்கள், இலக்கியங்கள்
(2) அழிபாடடைந்த ஆலயங்கள்
(3) திருவுருவப் படிமங்கள்

குழு - 1, 3. உங்கள் குழுவுக்கு தரப்பட்ட வரலாற்றுச் சான்றுகள் மூலம் அனுராதபுர, பொலநறுவைக் காலச் சைவ சமய வளர்ச்சியினை விபரித்து எழுதுங்கள்.

குழு - 2, 4. அனுராதபுர, பொலநறுவைக் காலத்தில் பேணப்பட்ட மரபுகள் அதன் தொடர்ச்சியான வளர்ச்சிக்கு உதவியவாற்றை ஆராய்ந்தறிந்து எழுதுங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : கண்டி, கோட்டை இராச்சியங்களில் காணப்பட்ட ஈழத்துச் சைவசமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :
- இலங்கையில் போர்த்துக்கேயர் வருகையின் போது காணப்பட்ட இராச்சியங்கள் யாவை? அந்தந்த இராச்சியங்களில் காணப்பட்ட சைவ சமய மரபு எவ்வாறு அமைந்திருந்தன என்பதை மாணவர்கள் கூறச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

| |
|---|
| • இலங்கையில் பொலநறுவை இராசதானியின் வீழ்ச்சிக்கும் ஐரோப்பியரது ஆட்சியின் ஆரம்பத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுச்சி பெற்ற இராட்சியங்கள் கோட்டை, கண்டி இராட்சியங்களாகும். |

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- வேலைகளை ஒப்படைத்து, குழுக்களைத் தேடியாய்வில் ஈடுபடுத்துங்கள்.
- தேடியாய்ந்தவற்றைக் குழுக்கள் முன்வைப்பதற்கான ஆயத்தங்களைச் செய்து கொள்ளுமாறு அறிவுறுத் துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :
- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- பொலநறுவை வீழ்ச்சிக்குப் பின்னர் தம்பதெனியா, யாப்பகூவ, குருநாகல், கம்பளை, கோட்டை, கண்டி முதலான இராச்சியங்கள் எழுச்சி பெற்றன.
- கோட்டை அரசிலும், கோட்டை அரசுக்கு வெளி யிலும் தெய்வேந்திரமுனை, சீதாவாக்கை, களுத்துறை, பெந்தோட்டை, கேகாலை, கடுகண்ணாவை முதலான இடங்களி லும் சிவன், விநாயகர், காளி, விஷ்ணு, கண்ணகி முதலான தெய்வங்களுக்கான ஆலயங்கள் இருந்தன.
  - கண்டி இராச்சியத்தில்
    - கண்டி நாத தேவாலயம்
    - பத்தினி தேவாலயம்
    - முன்னேஸ்வரம்
    - கண (பிள்ளையார்) தேவாலயம்

  முதலான ஆலயங்கள் சிறப்புப் பெற்றிருந்தன.
- சிங்கள மொழியில் எழுந்த இத்தூது இலக்கியப் பாடல்கள் அக்காலத்தில் சிறப்புற்றிருந்த சைவ சமயம் பற்றிப் போற்றுகின்றன.
    - ஸலஹினி சந்தேஸ
    - மதுர சந்தேஸ
    - கோகில சந்தேஸ (குயில் விடு தூது)
    - பரவி சந்தேஸ (புறா விடு தூது)

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- கோட்டை, கண்டி ஆகிய இராசதானிகளில் சைவ சமயம் நிலவியதற்கான சான்று களைப் பட்டியற்படுத்துவர்.
- கோட்டை, கண்டி இராச்சிய சைவ சமய நிலைமைகளுடன் இக்கால சமய நிலைமை களையும் ஒப்பிட்டு நோக்கி மதிப்பளிப்பர்.
- இலங்கையின் வடக்கிலும் கிழக்கிலும் ஏனைய பிரதேசங்களிலும் காணப்படும் சைவ மரபுகளைப் பேணிப் பாதுகாப்பர்.

**இணைப்பு 8.1.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

| | |
|---|---|
| குழு - 1 | பொலநறுவைக் கால ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பின்னர் எழுச்சி பெற்ற இராச்சியங்களைப் பட்டியற்படுத்துங்கள். |
| குழு - 2 | கண்டி இராச்சியத்தில் சிறப்புற்று விளங்கிய ஆலயங்களின் பெயர்களைக் குறிப்பிடுங்கள். |
| குழு - 3 | சைவ சமயம் பற்றி, சிங்கள மொழியில் எழுந்த தூது இலக்கியங்களைப் பட்டியற்படுத்துங்கள். |
| குழு - 4 | கோட்டை, கண்டி இராச்சியக் காலப் பகுதியில் சைவ சமயத்தின் நிலை பற்றி நீங்கள் அறிந்தவற்றைக் குறிப்பிடுங்கள். |

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரங்களுடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : யாழ்ப்பாண இராச்சியத்தில் காணப்பட்ட ஈழத்துச் சைவ சமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :
- யாழ்ப்பாண இராச்சியத்தில் காணப்பட்ட சைவசமய மரபு எவ்வாறு காணப்பட்டது என்பதனை மாணவர் கள் கூறச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - யாழ்ப்பாண இராச்சியத்தின் கீழ், குறுநில மன்னர்கள் ஆண்ட பல்வேறு பிரதேசங்கள் உள்ளடக்கப்பட்டிருந்தன. அவையாவன:
>   - வன்னிமை
>   - மன்னார் வன்னிமை
>   - புத்தளம் வன்னிமை
>   - பனங்காமம் வன்னிமை
>   - மட்டக்களப்பு வன்னிமை
>   - யாழ்ப்பாணத் தீவுக் கூட்டங்கள்
> - இக்காலத்தில் சைவசமயம் சார்ந்த காவியங் கள், புராணங்கள், பிரபந்தங்கள் முதலானவை தோன்றியுள்ளன.
> - இக்காலத்தில் ஆகம முறையில் அமைந்த வழிபாடும், ஆகம முறை சாராத வழிபாட்டு முறையும் அமைந்து இருந்தன.

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- வேலைகளை ஒப்படைத்து, குழுக்களைத் தேடியாய்வில் ஈடுபடுத்துங்கள்.

- தேடியாய்ந்தவற்றைக் குழுக்கள் முன்வைப்பதற்கான ஆயத்தங்களைச் செய்து கொள்ளுமாறு அறிவுறுத் துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- யாழ்ப்பாண இராச்சியத்தில் சைவ இலக்கியங்க ளுடன் சோதிட, வைத்திய நூல்களும் எழுந்தன.
- இக்காலத்தில் பாடல் பெற்ற திருக்கேதீச்சரம், திருக்கோணேச்சரம் முதலிய ஆலயங்களோடு கதிர்காமம், முன்னேச்சரம், நகுலேஸ்வரம், மாவிட்டபுரம், கீரிமலை முதலான ஆலயங்களும் சிறப்புறப் பேணப்பட்டன.
- யாழ்ப்பாண இராச்சியத்தை ஆண்ட மன்னர்கள் தமிழ் நாட்டிலுள்ள இராமேஸ்வரத்திலுள்ள ஆலயத்தில் பல திருப்பணிகள் செய்வித்ததுடன் மானியங்களையும் வழங்கியுள்ளனர். அத்துடன் பரராசசேகர மன்னன் இராமேச்சரம் சென்று வழிபட்டான். அங்கு சித்திரக்கால் மண்ட பத்தையும், கர்ப்பக்கிரகத்தையும் புதுப்பிக்குமாறு திரவியங்கள் வழங்கினான்.
- செகராசசேகர மன்னனால் இராமேசுவரத்தில் ஒரு அன்னசத்திரம் கட்டப்பட்டதாகச் சொல்லப் படுகின்றது.
- யாழ்ப்பாண இராச்சியத்தில் பல சைவ ஆலயங் கள் அமைக்கப்பட்டன. அவற்றுள் பின்வருவன வற்றைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.
    - வெயிலுகந்த விநாயகர் ஆலயம்
    - நல்லூர்க் கந்தசுவாமி கோயில்
    - நல்லூர் வீரமாகாளி அம்மன்
    - நல்லூர் சட்டநாதர் ஆலயம்
    - இணுவில் செகராசசேகரப் பிள்ளையார்
    - உரும்பிராய் கருணாகரப் பிள்ளையார்
    - நீர்வேலி அரசசேகரிப் பிள்ளையார்

- யாழ்ப்பாண இராச்சியத்தில் ஆகமம் சாராத வழிபாடும் இடம் பெற்றுள்ளது.
  - மதுரைவீரன்
  - கண்ணகையம்மன்
  - நாகதம்பிரான்
  - பெரியதம்பிரான்
  - நாச்சிமார்

  முதலான தெய்வங்கள் இவற்றில் அடங்கும்.
- யாழ்ப்பாண இராச்சியத்தில் பல சைவ சமய இலக்கியங்களும் தோற்றம் பெற்றன.

  உ-ம்:

  புராணம் - தட்சண கைலாச புராணம்

  பிரபந்தம் - கதிரைமலைப் பள்ளு
- யாழ்ப்பாண இராச்சியத்தில் காவடி, கரகாட்டம், கூத்து, சிலம்பு, நாதஸ்வரம், தவில், பண், நாட்டியம் போன்ற கலைகள் பேணப்பட்டன.
- யாழ்ப்பாண இராச்சியம் வீழ்ச்சியடைவதற்குரிய காரணங்கள்.
  1. தமிழக (நாயக்கர்) மன்னர்களின் படையெடுப்பு
  2. அரசுரிமைப் போட்டி
  3. போர்த்துக்கீசரின் படையெடுப்பு

(20 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:

- யாழ்ப்பாண இராச்சியத்தில் சைவசமயம் நிலவியதற்கான சான்றுகளைப் பட்டியற் படுத்துவர்.
- யாழ்ப்பாண இராச்சியத்தில் காணப்பட்ட ஆலயச் சிற்பங்களையும் படிமங்களையும் தேடி எழுதுவர்.
- தாம் வாழுகின்ற பிரதேசங்களில் காணப்படும் சைவ சமய மரபுகளைப் பேணிப் பாதுகாப்பர்.

**இணைப்பு 8.1.1**

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்

( இதன் பிரதிகளைக் குழுக்களுக்குப் பகிர்ந்தளியுங்கள்.)

| | |
|---|---|
| குழு -1. | யாழ்ப்பாண இராச்சியத்தில் காணப்பட்ட ஆகமம் சார்ந்த, ஆகமம் சாராத வழிபாட்டு முறைகள் பற்றி, தொகுத்து எழுதுங்கள். |
| குழு -2. | ஆரியச் சக்கரவர்த்திகள் மேற்கொண்ட சைவ சமயப் பணிகளை உதாரணங்களுடன் முன்வையுங்கள். |
| குழு -3. | யாழ்ப்பாண இராச்சியத்தில் எழுந்த சைவ சமய இலக்கியங்களைப் பட்டியற்படுத்துங்கள். |
| குழு -4. | யாழ்ப்பாண இராச்சியத்தில் சைவக் கலைகளின் வளர்ச்சி எவ்வாறு காணப்பட்டது என்பதையும் அங்கு சைவ சமயம் வீழ்ச்சி அடைந்தமைக்கான காரணங்களையும் குறிப்பிடுங்கள். |

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : ஐரோப்பியர் ஆட்சிக் காலங்களில் நிலவிய ஈழத்துச் சைவ சமய மரபுகளை அறிவோம். (போர்த்துக்கேயர், ஒல்லாந்தர்)

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :
- இலங்கையில் ஐரோப்பியர்களது ஆட்சி இடம் பெற்றுள்ளதா? என்ற வினாவைக் கரும்பலகையில் எழுதுங்கள்.
- இக்காலப் பகுதியில் ஆட்சி செய்த ஐரோப்பியர்களைக் கூறச் சந்தர்ப்பமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - இலங்கையில் ஐரோப்பியர்களது ஆட்சி நிலவிய காலப் பகுதியினை ஐரோப்பியர் காலம் என்பர்.
> - கி.பி. 1505 முதல் கி.பி. 1948 வரையான காலப் பகுதிகளில் ஐரோப்பியர்களது ஆட்சி இடம்பெற்றது.
> - போர்த்துக்கீசர், ஒல்லாந்தர் ஆகிய ஐரோப்பியர் ஆட்சிக் காலத்தில் சைவம் நலிவுற்றது. பின்னர் ஆங்கிலேயர் ஆட்சியில் சைவம் மீட்டுருவாக்கம் பெற்றது.

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- வேலைகளை ஒப்படைத்து, குழுக்களைத் தேடியாய்வில் ஈடுபடுத்துங்கள்.
- தேடியாய்ந்தவற்றைக் குழுக்கள் முன்வைப்பதற்கான ஆயத்தங்களை செய்து கொள்ளுமாறு அறிவுறுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இலங்கையின் முதலாவது ஐரோப்பியர் காலமாக போர்த்துக்கேயர் காலம் அமையும்.
- போர்த்துக்கேயர் காலம் கி.பி. 1505-1658 வரை காணப்பட்டது.
- போர்த்துக்கேயர் காலமே சைவசமயத்தின் வீழ்ச்சிக் காலம் எனக் கூறப்படுவதற்குப் பின்வரும் காரணங்களை முன்வைப்பர்.
- புகழ் பெற்ற ஆலயங்கள் அழிக்கப்பட்டு அவ் ஆலயக் கற்களைக் கொண்டு கோட்டைகள் அமைக்கப்பட்டன.
- பெறுமதிமிக்க ஆலயச் சொத்துக்கள் சூறை யாடப்பட்டன.
- ஆலய விக்கிரகங்கள் உருக்கப்பட்டு மணிகளாக வார்க்கப்பட்டன. சைவமக்கள் வலுக்கட்டாய மாக மதம் மாற்றப்பட்டனர்.
- போர்த்துக்கேயரின் அடக்கு முறையின் குறியீடாக வாழையிலை சொருகலும், திரிசூல (வைரவர்) வழிபாடும் அமைந்தன.
- போர்த்துக்கேயரை அடுத்து இலங்கையை ஆட்சி செய்தவர்கள் ஒல்லாந்தராவார்.
- கி.பி. 1658 - கி.பி. 1796 வரையிலான காலப் பகுதியில் இலங்கையின் கரையோரப் பகுதியில் இவர்களது ஆட்சி இடம் பெற்றது.
- ஒல்லாந்தர் சைவ சமயத்தினர் மீது மேற்கொண்ட அடக்கு முறைகள் பின்வருமாறு அமையும்.
  - சைவக்கோயில்களை இடித்துக் கோட்டை களும் தேவாலயங்களும் கட்டினர்.
  - சைவ மக்கள் புனிதமாகப் போற்றும் பசுக்களை, பசுக்கொலையின் பொருட்டு அறவிட்டனர்.
- ஒல்லாந்தர் காலத்தின் பிற்பகுதியில் அமைக்கப் பட்ட சைவ ஆலயங்கள் வருமாறு:
  - வண்ணார் பண்ணை வைத்தீஸ்வரம்
  - நயினை நாகபூசணியம்மன் கோயில்

- மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில்
- வெருகல் சித்திர வேலாயுதர் ஆலயம்
- கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரர் ஆலயம்
- சித்தாண்டி முருகன் ஆலயம்

- இக்காலத்தில் பல சைவத்தமிழ் பிரபந்தங்கள் எழுந்தன.
  (உ-ம்)
  - பறாளை விநாயகர் பள்ளு
  - மறைசையந்தாதி
  - கல்வளையந்தாதி
  - நல்லைக் குறவஞ்சி
  - ஏகாதசிப்புராணம்
  - சிவராத்திரி புராணம்
  - பிள்ளையார் கதை
  - பஞ்சவண்ணத்தூது

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- ஐரோப்பியர் காலத்தில் நிலவிய ஈழத்துச் சைவ சமயத்தின் நிலைமைகளைக் குறிப்பிடுவர்.
- இலங்கையில் ஆங்கிலேயர் காலத்தில் வளர்ச்சி பெற்ற சைவ சமய மரபினைப் போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் காலப் பகுதியில் நிலவிய சைவ சமயப் போக்குடன் ஒப்பிட்டு, எழுதுவர்.
- இலங்கை வரைபடத்தில் போர்த்துக்கேயரால் அழிக்கப்பட்ட ஆலயங்கள் அமைந்திருந்த இடங்களைக் குறித்துக் காட்டுவர்.

**இணைப்பு 8.1.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப்படிவத்தினை பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்

(1) இலங்கையில் ஐரோப்பியர் காலத்தில் ஆட்சி செய்தவர்களுள் பின்வருவோர் பற்றிக் கவனம் செலுத்துங்கள்.

குழு -1. 3. • போர்த்துக்கேயர்

குழு -2. 4. • ஒல்லாந்தர்

(2) உங்கள் குழுவுக்குக் கிடைத்த ஐரோப்பியர் காலப் பகுதியை அடிப்படையாகக் கொண்டு கீழ்வரும் தகவல்களைத் திரட்டுங்கள்.

- இவர்களின் ஆட்சியில் ஈழத்து சைவ ஆலயங்களின் நிலை
- சைவப் பெரியார்களின் பங்களிப்பு
- ஈழத்துச் சைவ சமய இலக்கியங்கள்

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : 19 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் நிலவிய சைவ சமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :
- 19 ஆம் நூற்றாண்டு என்பது எந்த ஆண்டிலிருந்து எந்த ஆண்டு வரை உட்படுத்திக் காணப்படும் என்பதையும், அக்காலப் பகுதியில் இலங்கையை ஆண்ட ஆட்சியாளர் யாவர் என்பதனையும் மாணவர் களிடம் கேட்டு விடை கூறச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - 1801 முதல் 1900 வரையான காலப்பகுதி 19 ஆம் நூற்றாண்டை உள்ளடக்கியதாக அமையும்.
> - ஆங்கிலேயர் ஆட்சி 1796 முதல் 1948 வரை யான காலப்பகுதியாகும்.
> - இக்காலப் பகுதியில் ஆங்கிலேயர் ஆங்கில மொழியையும் கிறிஸ்தவத்தையும் பரப்பும் நோக்கோடு ஆட்சி செய்தனர்.

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஆங்கிலேயர் ஆட்சியும், ஆங்கிலக் கல்வியும் அரச உத்தியோகமும் அளித்து, சைவர்களை தமது மதமாற்றக் கொள்கைக்கு உட்படுத்தினர்.
- கிறிஸ்தவ மிஷனரிமார்களிடம் தங்களது கல்விக் கொள்கையைக் கையளித்தனர்.
- இந்நிலையில் சைவ சமயத்தை நிலைநிறுத்தப் பல சைவப் பெரியார்கள் தோன்றினர்.

  உ-ம்:
  - ஆறுமுகநாவலர்
  - காசிவாசி செந்திநாதையர்
  - கோப்பாய் சபாரெட்ணம்
  - சபாபதி நாவலர்
  - காசுபதிச் செட்டியார்
- சைவ சமய நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டன.
  - சைவப்பிரகாச சபை
  - சைவப்பிரகாச சமாஜம்
  - சைவ பரிபாலன சபை
- நாட்டின் பல பிரதேசங்களில் கதிரேசன் கோயில் கள், சிவன், விநாயகர், அம்மன் முதலான தெய்வங்களுக்குப் பெருங்கோயில்கள் எழுந்தன. குறிப்பாக ஒல்லாந்தர் காலத்தில் எழுந்த கோயில் கள் இக் காலத்தில் பெருங்கோயிலாகவும், உற் சவங்களையும் பல்வேறு விழாக்களையும் கொண்டதாகக் கோயில்கள் விளங்கின.
- இந்த நூற்றாண்டில் மலையகத்தில் தமிழ் மக்கள் குடியேறினர். அதனால் முத்துமாரியம்மன் வழிபாடு அப்பகுதியில் சிறப்புப் பெற்றது.
- நாட்டார் தெய்வங்களுக்கு வெளிப்படையான சடங்குகள் நடைபெற்றன.
- வன்னிப் பிரதேசத்தில் கண்ணகியம்மன், நாக தம்பிரான் முதலான தெய்வங்கள் முக்கியத்துவம் பெற்று விளங்கின.
- மட்டக்களப்பு பிரதேசத்தில் கண்ணகியம்மன், திரௌபதையம்மன் வழிபாடுகள் முக்கியத்துவம் பெற்றன.

- அச்சியந்திர வருகையால் சைவ உதயபானு, இந்து சாதனம் முதலான பத்திரிகைகள் தோன்றின.
- சைவ ஆலயங்கள் மீது பல பிரபந்தங்கள் பாடப்பட்டன.
- பிரபந்த வடிவில் காவியங்களும் பாடப்பட்டன.

(20 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:

- 19 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் காணப்பட்ட சைவ சமய மரபுகளை மாணவர்கள் அறிந்து கூறுவர்.
- இக்காலத்தில் சமயத்தை வளர்ப்பதற்கு முன்னின்றவர்களை அறிந்து, அவர்களுக்கு மதிப்பளிப்பர்.
- சைவ சமயத்தை வளர்ப்பதற்கு முன்னின்றவர்கள் போல் தாங்களும் பணிகளை ஆற்ற முன்வர விரும்புவர்.
- 19 ஆம் நூற்றாண்டில் சைவ சமய வளர்ச்சிக்கான காரணங்களைக் குறிப்பிடுவர்.
- சைவ சமய வளர்ச்சிக்காகச் சமய நிறுவனங்களுடன் சேர்ந்து ஒத்துழைப்பு வழங்குவர்.

**இணைப்பு 8.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

குழு - 1. 19 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் நிலவிய சைவசமயத்தின் நிலை பற்றி எழுதுங்கள்.

குழு - 2. 19 ஆம் நூற்றாண்டில் சைவ சமய வளர்ச்சிக்காக ஆறுமுகநாவலர் மேற்கொண்ட பணிகளைக் குறிப்பிடுங்கள்.

குழு - 3. 19 ஆம் நூற்றாண்டின் சைவ சமய வளர்ச்சியின் பொருட்டு அர்ப்பணிப்புடன் செயற்பட்ட சமயப் பெரியார்களின் பெயர்களைப் பட்டியற்படுத்தி அவர்களில் ஒருவரைப் பற்றி எழுதுங்கள்.

குழு - 4. அச்சியந்திர வருகையால் சைவ சமய இலக்கிய வளர்ச்சியில் ஏற்பட்ட மாற்றங்களைக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : 1901 முதல் 1948 வரையான காலப் பகுதியில் இலங்கையில் நிலவிய சைவசமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :
- இலங்கையில் ஆங்கிலேயர் ஆட்சி எத்தனையாம் ஆண்டு முதல் எத்தனையாம் ஆண்டு வரை நிலவியது என மாணவர்களிடம் வினாவுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - இக்காலம் ஆங்கிலேயர் ஆட்சி காலமாகும். இதில் ஆங்கிலேயக் கல்வியும், அரச உத்தி யோகமும் கிறிஸ்தவ மதமும் பலம் பெற்றுக் காணப்பட்டது.
> - இதனால் சைவசமயத்தவர்கள் கிறிஸ்தவ சமயத்திற்கு மாறினர். மத்திய வகுப்பார் தோற்றம் பெற்றனர்.
> - இவற்றைக் கண்டிப்பதோடு தமது சமய நிலைபேற்றுக்குச் சைவப் பெரியார்கள் பலர் தொண்டு செய்தனர்.

**(05 நிமிடங்கள்)**

படி 8.1.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

**(15 நிமிடங்கள்)**

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- 1900 முதல் 1948 காலப் பகுதியில் பல சைவப் பெரியார்கள் பணிபுரிந்தனர்.
  - கொக்குவில் சபாரத்தின முதலியார் - 1858-1922
  - காசிவாசி செந்தில்நாதையர்
  - வித்துவான் சரவணமுத்துப் புலவர்
  - அம்பலவாண நாவலர் - 1855-1933
  - நாகமணிப்புலவர் - 1892-1947
  - சுவாமி விபுலானந்தர் - 1892-1947
- இக்காலத்தில் பல சைவ சமய நூல்களும் பிரபந்தங்களும் தோற்றம் பெற்றன.
- தனியார் துறையினரும் சைவ சமய வளர்ச்சியில் ஈடுபட்டனர்.

  நிறுவனரீதியாக,

  உ-ம்:
  - சைவ பரிபாலன சபை
  - இராமகிருஷ்ண மிசன்
  - தெல்லிப்பளை மகாஜனக் கல்லூரி
  - மானிப்பாய் இந்துக் கல்லூரி
  - சாவகச்சேரி இந்துக் கல்லூரி
- சுவாமி விபுலானந்தரால்
  - மட்டக்களப்பு சிவானந்த வித்தியாலயம்
  - திருகோணமலை இந்துக்கல்லூரி

  என்பன உருவாக்கப்பட்டன.
- மட்டக்களப்பு ஆனைப்பந்தியில் பெண்களுக் காக சாரதா வித்தியாலயமும் காரைதீவில் சாரதா வித்தியாலயமும் அமைக்கப்பட்டு, பின்னர் அவை அரசாங்கத்தால் பொறுப்பேற்கப்பட்டன.
- ஊர்களில் புராண படனம் செய்யப்பட்டன.
  - கந்தபுராணம்
  - பெரியபுராணம்
  - திருச்செந்தூர்ப்புராணம்
  - திருவாசக முற்றோதல்
  - கதைப்படிப்பு
  - பிள்ளையார் கதை
  - கண்ணகி வழக்குரை காதை
- பெரியோர்களின் கதாப்பிரசங்கங்களும் இடம் பெற்றன.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் (1901 - 1948) ஈழத்தில் சமயத்தை வளர்க்கும் பணியில் ஈடுபட்ட பெரியார்களின் பெயர்களைப் பட்டியற்படுத்துவர்.
- இக்காலத்தில் ஈழத்தில் சைவத்தை வளர்க்கும் பணிகளில் ஈடுபட்ட பெரியார்களை அறிந்து, அவர்களுக்கு மதிப்பளிப்பர்.
- சுவாமி விபுலானந்தரின் சமூகப் பணிகளைத் தொகுத்து எழுதுவர்.
- இக்காலப் பகுதியில் தத்தம் பிரதேசங்களில் சமயம் வளர்த்தவர்கள் பற்றிய தேடியறிதலில் ஈடுபடுவர்.

**இணைப்பு 8.1.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்

குழு - 1. 20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியில் (1901 - 1948) இலங்கையில் சமயப்பணி புரிந்த பெரியார்களின் பணிகளைப் பட்டியற்படுத்துங்கள்.

குழு - 2. இக்காலப் பகுதியில் எழுந்த சைவ சமய நூல்களையும் அவற்றின் ஆசிரியர்களின் பெயர்களையும் எழுதுங்கள்.

குழு - 3. 20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் (1901 -1948) சமய வளர்ச்சியில் ஈடுபட்ட நிறுவனங்களின் பட்டியல் ஒன்றைத் தயாரியுங்கள்.

குழு - 4. "சுவாமி விபுலானந்தர் சமயப் பணிகளில் முன்னின்று உழைத்தவர்" இக்கருத்தை ஏற்றுக் கொள்கிறீர்களா? அவற்றுக்கான காரணங்களை முன்வையுங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : 1948 முதல் 2000 வரையான காலப் பகுதியில் இலங்கையில் நிலவிய சைவ சமய மரபுகளை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :

- இலங்கை எப்போது சுதந்திரம் அடைந்தது என வினாவி அக்காலச் சைவ மரபுகளை அறிந்து கொள்ளச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- அக்காலச் சைவப் பெரியார்கள் பற்றி வினாவி, அது பற்றி மாணவர் விடை கூறச் சந்தர்ப்பம் அளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - சுதந்திரத்தின் பின் சைவ சமயம் பல்வேறு வழிகளிலும் வளர்ச்சிக்குரிய காலமாகக் காணப்பட்டது.
> - இக்கால கட்டத்தில் சமய நிறுவனங்களின் தோற்றமும் அதன் செயற்பாடுகளும் பல மடங்கு அதிகரித்து வந்துள்ளது.
> - அச்சியந்திரங்கள் மூலம் சைவ சமயம் பற்றிய பெருமைகள் வெளிவந்தன.

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :

- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சுதந்திரத்தின் பின் சைவ சமய நிறுவனங்கள் மூலம் சமயம் வளர்க்கப்பட்டது.
- சைவ சமயக் கல்வி அரசின் அங்கீகாரத்துடன் பாடசாலையில் கற்பிக்கப்பட்டது.
- இந்துக் கலாசாரத் திணைக்களமும் இந்து கலா சார அலுவல்கள் அமைச்சும் உருவாக்கப் பட்டன.
- பல்கலைக்கழகத்தில் உயர் கல்வி வரையும் இந்து நாகரிகம் அறிமுகம் செய்யப்பட்டு தனித் துறையாக உருவாக்கப்பட்டது. அதற்குத் தனியான பேராசிரியர் பதவி வழங்கப்பட்டது.
- அரசு, தமது அமைச்சு மூலம் இந்துசமயம் பற்றிய மாநாடுகளைப் பிரதேச ரீதியாகவும் உலகளாவிய மட்டத்திலும் நடாத்தி வருகின்றது.
- சினிமா, வானொலி, பத்திரிகை, (இந்தியப் பத்திரிகை), சஞ்சிகைகள் முதலான ஊடகங்கள் சைவத்தை வளர்க்க உதவுகின்றன.
- 1980 இன் பின் போர்ச் சூழ்நிலை சைவசமய வளர்ச்சியினைப் பெரிதும் பாதித்தது. (தளர்ச்சி நீண்ட காலமாக இருந்தது.)
- சமயத்தை ஆவணப்படுத்துகின்ற முறையில் ஆய்வு முறைகள் காணப்படுகின்றன.
- சைவ சமய பாடம் இந் நூற்றாண்டில் கட்டாய பாடங்களில் ஒன்றாகக் கொள்ளப்படுகின்றது.
- அரசு மானியங்களை வழங்கி, ஆலயங்களைப் புனருத்தாரணம் செய்து வருகின்றது.
- ஆசிரிய கலாசாலை, கல்வியியற் கல்லூரி என்ப வற்றில் சைவசமயப் பாடத்துறை தனியாக ஏற்படுத்தப்பட்டது.
- சமய நிறுவனங்களினால் காலத்துக்குக்காலம் கருத்தரங்குகள், செயலமர்வுகள் ஏற்படுத்தப் படுகின்றது.
- தமிழகத்திலிருந்து ஆலயம், சோதிட நூல்கள், பக்தி, ஞான ஒளி போன்ற பத்திரிகைகள் வெளி யாகின்றன.
- பாடசாலைகளில் சைவ சமய பாடத்திட்டத்துடன் நவராத்திரிவிழா முதலான இணைப்பாடவிதானச் செயற்பாடுகளும் இணைக்கப்பட்டுள்ளன.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- இலங்கையில் சுதந்திரத்தின் பின் தோன்றிய சைவ சமய நிறுவனங்களைக் குறிப்பிடுவர்.
- சுதந்திரத்தின் பின் சைவ சமயக் கல்வியில் இலங்கை அரசினது பங்களிப்பினை மதிப்பிடுவர்.
- இலங்கையில் சைவ சமயத்தின் வளர்ச்சியில் ஊடகங்களின் பங்களிப்பினைக் குறிப்பிடுவர்.
- 1980க்குப் பின் இலங்கையில் சைவசமய வளர்ச்சி தளர்ச்சி கண்டது - இது பற்றிக் கலந்துரையாடி எழுதுவர்.
- பாடசாலைகள் மூலம் சைவ சமயத்தை வளர்க்க முன் வந்து செயற்படுவர்.

**இணைப்பு 8.1.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

குழு 1, 2

(1) இலங்கையில் சுதந்திரத்தின் பின் தோன்றிய சைவ சமய நிறுவனங்களைக் குறிப்பிடுங்கள்.
(2) சுதந்திரத்தின் பின் சைவ சமயத்தின் வளர்ச்சியில் ஊடகங்களின் பங்களிப்பு - இது பற்றிய கருத்துக்களை முன்வையுங்கள்.
(3) 1980 இன் பிற்பகுதியில் சைவசமயத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் அல்லது தளர்ச்சி பற்றி விபரியுங்கள்.

குழு 3, 4

(1) சுதந்திரத்தின் பின் சைவசமயக் கல்வியில் இலங்கை அரசினது பங்களிப்பு பற்றி விவரியுங்கள்.
(2) சைவசமய நிறுவனங்கள் சுதந்திரத்தின் பின் எவ்வாறான பங்களிப்பைச் செய்து வருகின்றன என்பதை விளக்கி எழுதுங்கள்.
(3) "உயர் கல்வித்துறையில் சைவ சமயத்தின் இடம்" என்னும் கூற்றுப் பற்றிய கருத்துக்களை முன்வையுங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.1 : ஈழத்துச் சைவ மரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

செயற்பாடு 8.1 : இலங்கையில் சைவ, பௌத்த உறவைப் பேணுவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 8.1.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.1.1 :

- இலங்கையில் என்னென்ன சமயங்கள் உள்ளன. அதில் பெரும்பான்மையினர் வழிபாட்டுச் சமயம் எது? அதற்கும் சைவசமயத்திற்கும் உள்ள தொடர்பு பற்றி அறிந்தீர்களா? என மாணவரிடம் விசாரித்து விடை கூற இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்திலிருந்து பௌத்த சமயத்திற்கும் சைவசமயத்திற்கும் நெருங்கிய தொடர்பு காணப்பட்டுள்ளது.
> - கி.மு. காலத்திலிருந்து சைவ பௌத்த மரபுகள் நன்கு பேணப்பட்டன. இக்காலப் பகுதியில் இலங்கையில் பௌத்தத்திற்கும், சைவத்திற்கும் நெருங்கிய தொடர்புகள் காணப்படுகின்றன.
> - சைவக் கடவுளை பௌத்தர்கள் வழிபட்டு வருவதன் மூலம் இத் தொடர்பினை உறுதிப் படுத்த முடியும்.

(05 நிமிடங்கள்)

படி 8.1.2 :

- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுது கடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.1.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- பௌத்தமும் சைவமும் கோட்பாட்டு அடிப்படையில் வேறுபட்டாலும் அவை காலத்துக்குக் காலம் ஒன்றை ஒன்று ஆதரித்தே இலங்கையில் வளர்ச்சி அடைந்தன.
- சைவ ஆலயங்கள் பல பௌத்த மன்னர்களால் கட்டப்பட்டும் புனருத்தாரணம் செய்யப்பட்டும் உள்ளன.
- கஜபாகு மன்னனால் அறிமுகப்படுத்தப்பட்ட பத்தினி - கண்ணகி வழிபாடு சிறப்புற்றுப் போற்றப் படுகின்றன.

  உ-ம்: தலதா மாளிகையின் எசல பெரஹர
- கதிர்காமக் கந்தன், தெவிநுவர விஷ்ணு, சிவனொளிபாதமலை, முன்னேஸ்வரம் போன்ற ஆலயங்கள் பௌத்தர்களால் விசேடமாக வழிபடும் இடங்களாகும்.
- பௌத்த விகாரைகள் அதனை ஒட்டிய கட்டிடங்கள் என்பன திராவிடக் கட்டிடக் கலைப்பாணியில் அமைந்தன.
- நாயக்கர் கால கலைப் பின்னணியும் அவற்றில் உள்ளன.

  உ-ம்: கேகாலை அலவதுர விகாரை
  கண்டி நலித தேர விகாரை
  அம்பெக்க தேவாலயம்
- சைவர்கள் போன்று கஜலட்சுமியின் உருவத்தினை வாசற்கதவின் நிலையில் பொருத்தும் மரபு காணப்பட்டது.

  உ-ம்: தெவிநுவர விஷ்ணு ஆலயம்
  அலுதெனிய விகாரை
  கண்டி நாத தேவாலயம்
- பௌத்த மன்னர்கள் சைவசமய மரபுகளை அறிவதில் ஆர்வம் கொண்டிருந்தனர்.

  உ-ம்:

  சரசோதி மாலை என்னும் சோதிட நூலை 3 ஆம் பராக்கிரமபாகுவின் அவைக்களப் புலவர் தேநுவரப் பெருமாள் என்ற போசராசப் பண்டிதர் இயற்றினார்.

- சிங்களப் பௌத்தர்களான ஆண்கள், பெண்களின் பெயர்கள், முடிக்கும் விகுதி பெறாவிட்டாலும் அவைகள் இந்துப் பெயர்களாகக் காணப்படு கின்றன.
  உ-ம்:
  விக்கிரமசிங்கா - விக்கிரமசிங்கன்
- சைவசமய மந்திரச் சடங்கு முறைகளான இளநீர் ஓதுதல், நூல் கட்டுதல், அஞ்சண மை பார்த்தல், பஞ்சாங்கம் பார்த்தல், வளவு காவல் பண்ணுதல், வைரவர் வழிபாடு, வயல்களில் பூசை முதலான சைவச் சடங்கு முறைகள் பௌத்தர்களால் பின் பற்றப்படுகின்றன.
- பௌத்த இலக்கியப் பொருள் மரபுகள் தமிழ் சைவ இலக்கியங்களைத் தழுவியதாக காண‌ப் படுகின்றன.
  உ-ம்:
  கதைப் பாடல்கள், புராணக் கதைகள்
- கண்டி, கோட்டை, யாழ்ப்பாணம், யாப்பகூவ, தம்பதெனிய, அனுராதபுர, பொலநறுவை முதலான கால கட்டங்களில் சைவ பௌத்த உறவுகள் பெரிதும் போற்றப்பட்டன.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சைவத்துக்கும் பௌத்தத்துக்கும் இடையிலான தொடர்புகளை அறிந்து கூறுவர்.
- பௌத்தர்களின் வழிபாடுகளில் சைவசமயக் கடவுளர்களின் முக்கியத்துவம் பற்றிய கருத்துக்களை முன்வைப்பர்.
- பௌத்த சைவ சடங்கு முறைகள் பற்றிய தொடர்புகளை இனங்கண்டு கூறுவர்.
- பௌத்த மன்னர்கள் சைவசமய மரபுகளை அறிவதில் கொண்டிருந்த ஆர்வம் பற்றி உதாரணங்களுடன் குறிப்பிடுவர்.

இணைப்பு 8.1.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

குழு 1, 2

(1) பௌத்த மன்னர்களின் பங்களிப்பினால் கட்டப்பட்ட சைவ ஆலயங்களைக் குறிப்பிடுங்கள்.
(2) கண்ணகி வழிபாட்டுக்கும் பௌத்த சமயத்துக்கும் இடையிலான தொடர்பு களைச் சுருக்கமாக விபரியுங்கள்.
(3) பௌத்தர்களின் வழிபாட்டில் காணப்படும் சைவசமயக் கடவுள் பற்றி விபரியுங்கள்.

குழு 3, 4

(1) பௌத்த மன்னர்கள் சைவசமய மரபுகளை அறிவதில் ஆர்வம் கொண்டிருந்தமையை உதாரணங்களுடன் முன்வையுங்கள்.
(2) தற்காலத்தில் சைவ சமயச் சடங்குகள் பௌத்த சமயத்தில் காணப்படு வதற்கான உதாரணங்களைக் குறிப்பிடுங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.2 : ஈழத்துச் சைவ ஆலயங்களையும் அவற்றின் சிறப்பம்சங் களையும் விபரிப்பர்.

செயற்பாடு 8.2 : இலங்கையில் உள்ள ஆலயங்களையும் அவற்றின் பல்வேறு அம்சங்களையும் பகுத்து நோக்குவோம்.

நேரம் : 120 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 8.2.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.2.1 :

- "ஆலயம் தானும் அரன் எனத் தொழுவோம்" இக் கூற்றினைக் கரும்பலகையில் எழுதி, அது பற்றி மாணவர் கூறுவதற்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கிடைக்கப் பெறும் ஆலயங்களின் படங்களைக் காட்சிப்படுத்துங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பதன் மூலம் ஆலயங்களின் முக்கியத்துவம் உணர்த்தப்படுகின்றது.
> - ஆன்மா லயப்படும் இடம் ஆலயம் எனப்படும்.
> - ஆலயங்களில் வீற்றிருக்கும் மூலவரை அடிப் படையாகக் கொண்டு ஆலயங்கள் வேறுபடுத்தப் படும்.

**(15 நிமிடங்கள்)**

படி 8.2.2 :

- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுதுகடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

**(45 நிமிடங்கள்)**

படி 8.2.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஆலயங்களில் வீற்றிருக்கும் மூல மூர்த்தியை அடிப்படையாகக் கொண்டு ஆலயங்களை வகைப்படுத்தலாம். உ-ம்:
  - விநாயகர் ஆலயம்
  - சிவன் ஆலயம்
  - முருகன் ஆலயம்
  - அம்மன் ஆலயம்
  - வைரவர் ஆலயம்
  - விஷ்ணு ஆலயம்
- ஈழத்தில் சிறப்புற அமைந்த விநாயகர் ஆலயம், சிவன் ஆலயம், முருகன் ஆலயங்கள் சில வற்றை இங்கு நோக்குவோம்.
- ஈழத்தில் விநாயகர் ஆலயம் பல உள்ளன. அவற்றுள் மாமாங்கப் பிள்ளையார் ஆலயச் சிறப்பினைச் சுருக்கமாகக் கற்போம்.
  - இத்தலம் கிழக்கிலங்கையில் மட்டக் களப்பில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஒருங்கே அமையப் பெற்ற ஆலயமாகும்.
  - இத் தலத்தை இராமபிரான் தரிசித்தான்.
  - இவ்வாலயத்தின் மூலவர் சுயம்பு லிங்கமாக வீற்றிருப்பவர்.
  - ஆடிஅமாவாசைத் தீர்த்தம் இங்கு சிறப்பாக நடைபெறும்.
  - மட்டக்களப்பின் பல்வேறு பகுதிகளில் இருந்து வரும் அடியவர்கள் இவ்வாலயத் தீர்த்தத்தில் பிதிர்க்கடன் செய்வதன் மூலம் பிதிர்கள் ஆன்மீக ஈடேற்றத்தைப் பெறுவர் என மக்கள் நம்புகின்றனர்.
  - இவ்வாலயத்தின் சிறப்புக்களையும் வரலாறு களையும் கூறும் பல நூல்களும் பிரபந்தங் களும் உள்ளன.
    - மாமாங்கேஸ்வரர் கீர்த்தனை
    - மாமாங்கேஸ்வரர் பதிகம்

- ஈழத்தில் சிவாலயங்கள் பல உள்ளன. இவற்றில் நாம் திருக்கேதீச்சரம், திருக்கோணேச்சரம், பொன்னம்பலவாணேச்சரம் என்பன பற்றி இங்கு பார்ப்போம்.
- திருக்கேதீச்சரம் பற்றிய சில தகவல்கள்:
  அமைவிடம் - மாதோட்டம் மன்னார் மாவட்டத்தில் உள்ளது.
  மூர்த்தி - திருக்கேதீச்சரநாதர் கௌரி அம்பாள்
  தீர்த்தம் - பாலாவி
- ஈழத்தில் சோழர் ஆட்சியின்போதும் யாழ்ப்பாண இராச்சியத்தின்போதும் இவ் ஆலயம் சிறப்புற்றுக் காணப்பட்டது.
- அந்நியரான போர்த்துக்கீசர் காலத்தில் இவ்வாலயம் இடித்து அழிக்கப்பட்டது.
- சம்பந்தர், சுந்தரர் ஆகியோரால் தேவாரம் பாடப் பெற்ற தலமாகும்.
- இதன் புனருத்தாரணப் பணியை நாவலர் வற் புறுத்தினார். பசுபதிச் செட்டியார் இந்த ஆலயத்தைப் புனருத்தாரணம் செய்தார்.
- இங்கு நடைபெறும் உற்சவங்களில் சிவராத்திரி உற்சவம் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.
- யாத்திரிகர்கள் தங்குதல் பொருட்டு பல மடங்கள் உள்ளன.
- திருக்கேதீச்சரத் திருப்பணிச் சபையின் பணிகளே இன்றைய ஆலயச் சிறப்பிற்கு அடிப்படையாக அமைந்தது.
- இவ்வாலயத்தின் வரலாறுகளையும் சிறப்புக்களை யும் கூறும் பல நூல்களும் பிரபந்தங்களும் உள்ளன.
- திருக்கோணேச்சரம் பற்றிய சில தகவல்கள்:
  அமைவிடம் - திருகோணமலை திருகோணமலை மாவட்டத் தில் உள்ளது.
  மூர்த்தி - திருக்கோணேச்சரநாதர் மாதுமையாள்
  தீர்த்தம் - பாவநாசம்
- போர்த்துக்கீசர் காலத்தில் அந்நியர் வருகையால் இடித்து அழிக்கப்பட்டது.
- சோழமன்னர்களும், சிங்கள மன்னர்களும் இதற்கு பெருமளவு மானியங்களை விட்டுச் சென்றனர்.
- சம்பந்தர், நாவுக்கரசர் ஆகிய நாயன்மாரால் பாடல் பெற்ற தலமாகும்.

- பொன்னம்பலவாணேச்சரம் பற்றிய சில தகவல்கள்:
  அமைவிடம் - கொழும்பு கொட்டாஞ்சேனை
  மூர்த்தி - பொன்னம்பலவாணேச்சரர்
- இவ்வாலயம் சேர். பொன். இராமநாதன் முதலியார் அவர்களால் கருங்கல் கொண்டு ஆகம முறை சார்ந்ததாகக் கட்டப்பட்டது.
- இக்கோயிலின் மண்டபத்தில் நித்தியாக்கினி குண்டம் எப்போதும் எரிந்து கொண்டிருப்பது சிறப்பிற்குரியது.
- பங்குனி உத்தரத்தைத் தீர்த்த நாளாகக் கொண்டு பத்துத் தினங்கள் மகோற்சவம் நடைபெறும்.
- இவ்வாலயத்தின் தேர்த்திருவிழாவின்போது ஐந்து தேர்கள் இழுக்கப்படும். அதில் அம்பாளுக்குரிய தேரை பெண்கள் மட்டும் இழுப்பது சிறப்பிற் குரியது.
- ஈழத்தில் முருகன் ஆலயங்கள் பல உள்ளன. அவற்றுள் திருக்கோயில் சித்திரவேலாயுதர், மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயங்கள் என்பவற்றைக் கற்போம்.
- திருக்கோயில் சித்திர வேலாயுதர் ஆலயம் பற்றிய சில தகவல்கள்:
  அமைவிடம் - திருக்கோயில் அம்பாறை மாவட்டத்தில் உள்ளது
  மூர்த்தி - சித்திரவேலாயுதர் சுவாமி
  தீர்த்தம் - கிழக்குத் திருக்கடல்துறை
- இக்கோயில் குளக்கோட்டன், பரராசசேகரன் என்போரால் கட்டப்பட்டது.
- இதன் பழைய பெயர் நாகர்முனையாகும்.
- இவ்வாலயம் திருப்படைக்கோயில்களுள் முதலாவதாகக் காணப்படுகின்றது.
- திருக்கோயில் என்று சிதம்பரத்தை அழைப்பது மரபு. அதற்கு அடுத்ததாக இக்கோயில் அழைக்கப்படுகின்றது.
- இவ்வாலயத்தின் வரலாறு பற்றி வேல் வந்த வரலாறு, சித்திரவேல் முருகன் வருக்கமாலை என்னும் பிரபந்தங்கள் மூலம் அறியலாம்.
- மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயம் பற்றிய சில தகவல்கள்:
  அமைவிடம் - மாவிட்டபுரம் யாழ்ப்பாண மாவட்டத்தில் உள்ளது.
  மூர்த்தி - கந்தசுவாமி
  தீர்த்தம் - கீரிமலை

- இவ்வாலயம் 1250 ஆண்டுகள் பழமை வாய்ந்தது. இவ்வாலயத்திற்கு அழகையும், பொலிவையும் கொடுப்பது சிற்பவேலைப்பாடுகளுடன் கூடிய கோபுரமாகும்.
- மாருதப்புரவீக வல்லியின் குதிரை முகம் நீங்கப் பெற்றதனால் மாவிட்ட புரம் எனும் பெயர் பெற்றது.
- போர்த்துக்கீசர் காலத்தில் இவ்வாலயம் இடித் தழிக்கப்பட்டு மீண்டும் ஒல்லாந்தர் காலத்தில் இவ்வாலயம் அமைக்கப்படத் தொடங்கியது. 1815 ஆம் ஆண்டுக்கு முன்னர் மறைத்து வைக்கப் பட்ட திருவுருவை ஸ்தாபித்து, மகா கும்பாபிடேகம் நடைபெற்றது.
- இவ்வாலயத்தின் மகோற்சவம் ஆனி மாதப் பூர்வ பட்ச சஷ்டியில் கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி 25 நாட்கள் விழா நடைபெற்று ஆடி அமாவாசை யில் தீர்த்தம் இடம்பெறும்.
- முதன்முதலாக ஐந்து தேர்கள் ஓடிய சிறப்பை இவ்வாலயம் பெறுகின்றது.
- இவ்வாலய முருகப்பெருமானைப் பற்றி
  முத்துக்குமார கவிராயர்,
  சோமசுந்தரப் புலவர்,
  அ. குமாரசுவாமிப் புலவர்
  போன்றோர் பாடியுள்ளனர்.

(60 நிமிடங்கள்)

கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:

- மாணவர்களுக்குத் தெரிந்த சிவாலயங்கள் ஐந்தினைக் குறிப்பிடுவர்.
- ஆலயங்களின் பெருமையை அறிந்து, அவற்றுக்கு மதிப்பளிப்பர்.
- பல்வேறு பிரதேசங்களிலும் காணப்படும் சிறப்புமிக்க ஆலயங்களைத் தேடியறிவர்.
- குழுவாகச் சேர்ந்து ஆலயங்களுக்குத் தலயாத்திரை செய்வர்.
- தத்தம் பிரதேசங்களில் காணப்படும் ஆலயங்களில் திருப்பணிகளைச் செய்ய முன்வருவர்.

இணைப்பு 8.2.1

## குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

(நான்கு குழுக்களுக்கும் பகிர்ந்தளிக்கவும்.)

(1) ஆலய வழிபாட்டின் மூலம் கிடைக்கப்பெறும் பயன்களை முன்மொழியுங்கள்.

(2) கோபுர தரிசனம் கோடி புண்ணியம் எனும் கூற்றின் மூலம் நீங்கள் விளங்கிக் கொள்வதைக் குறிப்பிடுங்கள்.

(3) ஆன்மா லயப்படும் இடம் ஆலயம் என்பதன் மூலம் நீங்கள் சிந்திப்பதை வெளிப்படுத்துங்கள்.

(4) ஆலய வழிபாடுகள் மூலம் வளர்க்கப்படும் நற்பழக்க வழக்கங்களைப் பட்டியல்படுத்துங்கள்.

குழு (1) ஈழத்திலுள்ள சிறப்பிற்குரிய விநாயகர் ஆலயங்களைக் குறிப்பிடுங்கள். அவற்றுள் ஒன்றினை விபரித்து எழுதுங்கள்.

குழு (2) ஈழத்திலுள்ள சிறப்பிற்குரிய சிவாலயங்களைக் குறிப்பிடுங்கள். அவற்றில் ஓர் ஆலயம் பற்றி, சிறு குறிப்புக்களை எழுதுங்கள்.

குழு (3) ஈழத்திலுள்ள சிறப்பிற்குரிய முருகன் ஆலயங்களைக் குறிப்பிடுங்கள். அவற்றுள் ஒன்றினைப் பற்றி எழுதுங்கள்.

குழு (4) இலங்கையிலுள்ள சிறப்பிற்குரிய ஆலயங்களின் வரலாற்றுச் சிறப்பினை அட்டவணைப்படுத்துங்கள்.

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.3 : ஈழத்துச் சைவப் பிரபந்தங்களின் வகைகளை இனங்கண்டு விளக்கம் பெறுவர்.

செயற்பாடு 8.3 : ஈழத்துச் சைவ பிரபந்தங்கள் கூறும் கண்ணகி வழக்குரை காதை பற்றி அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.3.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.3.1 :
- "ஈழத்தில் எழுந்த சைவ சமய நூல்கள்" என்னும் தலைப்பினைக் கரும்பலகையில் எழுதுங்கள்.
- ஈழத்தில் எழுந்த சைவசமய நூல்கள் எவையென மாணவர்களிடம் வினவுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - இந்தியாவைப் போன்று இலங்கையிலும் பல சைவ சமய நூல்கள் தோற்றம் பெற்றுள்ளன.
> - இலங்கையில் காலத்துக்குக்காலம் பல சைவ சமய நூல்கள் தோற்றம் பெற்றன.
> - இலங்கைச் சைவ சமய நூல்கள் (பிரபந்தங்கள்).
>   - தெய்வங்கள், தேவர்கள்
>   - ஆலயங்கள்
>   - விரதங்கள், ஒழுகலாறுகள்
>
>   என்பன பற்றிக் கூறுகின்றன.

(05 நிமிடங்கள்)

படி 8.3.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் இணைப்பு 8.3.1 இன் செயற்பாட்டுப்படிவம், எழுதுகடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.3.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஈழத்தில் சைவ சமயம் சார்பான பிரபந்தங்கள் காலந்தோறும் தோற்றம் பெற்றுள்ளன.
  உ-ம் காவியம் - கண்ணகி வழக்குரை காதை
  புராணம் - சிவராத்திரி புராணம்
  கதைப் பாடல் - பிள்ளையார் கதை
- ஈழத்தில் எழுந்த கண்ணகி வழக்குரை என்னும் நூல், முத்த காவியம் என்று போற்றப்படும் சிலப்பதிகாரத்தைத் தழுவி எழுந்த ஒரு காப்பியமாகும்.
- நூலின் சிறப்பு
- சிலப்பதிகாரக் கதை பொதுமக்களின் பிரார்த்தனைக்காகப் பழகு தமிழில் பாடப்பட்டது.
- 2219 பாடல்கள் கொண்டது. சில இடங்களில் வேறுபடும்.
- அகவல், வெண்பா, சிந்து முதலிய யாப்புகளால் ஆனது.
- யாழ்ப்பாண ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்தில் மட்டக்களப்பில் வாழ்ந்த "சகவீரன்" என்ற புலவரால் பாடப்பட்டது.
- கண்ணகி வழக்குரை வரம்பெறு காதை, கப்பல் வைத்த காதை, பொன்னுக்கு மறிப்புக் காதை, வழிநடைக் காதை, அடைக்கலக் காதை, கொலைக்களக் காதை, வழக்குரைத்த காதை, குளிர்ச்சிக் காதை முதலான 15 காதைகளைக் கொண்டுள்ளது.
- கண்ணகி வழக்குரை மட்டக்களப்புக் கண்ணகி அம்மன் ஆலயங்களில் திருவிழாக் காலங்களின் போது படனம் செய்யப்படுகின்றது.
- கோவலனார் கதை யாழ்ப்பாணப் பகுதியிலும், "சிலம்பு கூறல்" வன்னிப் பகுதியிலும் உள்ள கண்ணகி அம்மன் ஆலயங்களில் படனம் செய்யப் படுகின்றது.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- ஈழத்தில் தோன்றிய சைவப் பிரபந்தங்களின் வகைகளைப் பெயரிடுவர்.
- ஈழத்துச் சைவ பிரபந்தங்களுக்கு மதிப்பளிப்பர்.
- ஈழத்தில் தோன்றிய சைவப் பிரபந்தங்களை வகைப்படுத்துவர்.
- ஈழத்துச் சைவப் பிரபந்தங்களில் தாம் இனங்கண்டு சுவைத்த பகுதியைப் பிறருக்கு எடுத்துரைப்பர்.
- அம்மன் உற்சவ காலங்களில் கோவலனார் கதை/ கண்ணகி வழக்குரை / சிலம்பு கூறல் என்பவற்றைப் பாடுவர்.

**இணைப்பு 8.3.1**

குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

செயற்பாட்டுப்படிவம்

கண்ணகி வழக்குரை சார்பான பின்வரும் தகவல்களைத் தொகுத்து எழுதுங்கள்.

குழு - 1. 2. (அ) கண்ணகி வழக்குரை காதை நூலின் ஆசிரியர்:
(ஆ) நூல் எழுந்த காலம்:

குழு - 3. 4. (இ) கண்ணகி வழக்குரை காதை நூலின் பொருள் மரபும் நூல் வலியுறுத்தும் விழுமியப் பண்புகளும்
(ஈ) இந்நூல் படனம் செய்யப்படும் காலம்:

**தேர்ச்சி 8.0** : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

**தேர்ச்சி மட்டம் 8.3** : ஈழத்துச் சைவப் பிரபந்தங்களின் வகைகளை இனங்கண்டு விளக்கம் பெறுவர்.

செயற்பாடு 8.3 : 'பிள்ளையார் கதை' பற்றி அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.3.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்
- பிள்ளையார் கதை (நூல்)

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.3.1 :
- ஈழத்தில் எழுந்த சைவ சமய இலக்கியங்கள் எவை என மாணவர் கூறுவதற்கு இடமளியுங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - ஈழத்தில் பல சைவ சமய நூல்கள் எழுந்துள்ளன.
> - ஈழத்தில் எழுந்த சைவ சமய நூல்கள்
>   - தெய்வங்கள், தேவர்கள்
>   - விரதங்கள், ஒழுகலாறுகள்
>   - ஆலயங்கள் பற்றிக் கூறுகின்றன.
> - அந்நியர் ஆட்சிக் காலத்தில் விட்டுக் கொடுக்கும் மனப்பாங்கு, வேற்றுமையில் ஒற்றுமை பேணப் பட வேண்டும் என்ற நிலையில் சுதேசிகள் மத்தியில் தமது சமயத்தைப் பேண வேண்டும் என்ற மனநிலை இருந்தது. அந்நிலையில் புலவர்கள் பல புராணங்களையும் பிரபந்தங்களையும் பாடினர்.

(05 நிமிடங்கள்)

படி 8.3.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுதுகடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

(15 நிமிடங்கள்)

படி 8.3.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஒல்லாந்தர் காலத்தில் எழுந்த கதைப்பாடல்களில் ஒன்று பிள்ளையார் கதையாகும்.
  - இதனை இயற்றியவர் சுன்னாகம் வரத பண்டிதராவார்.
  - இவரது காலம் 18 ஆம் நூற்றாண்டாகும்.
- பிள்ளையார் கதை பின்வரும் பொருள் மரபினைக் கொண்டதாக அமையும்.
  - காப்புச் செய்யுள்
  - விநாயகர் துதி
  - சப்பாணி
  - சரஸ்வதி துதி
  - அதிகாரம்
  - கதை
  - நூற்பயன்
- காப்புச் செய்யுளில் இக்கதைக்கு விநாயகப் பெருமான் துணை செய்ய வேண்டுமென வேண்டுதல் செய்யப்படுகின்றது.
- பிள்ளையார் கதையில் பின்வரும் கதைகள் காணப்படுகின்றன.
  - உமை பிறந்த கதை
  - உமை, சிவன் திருமணம்
  - பிள்ளையார் பிறப்பு
  - அற்புதம்
  - பிள்ளையார் கஜமுகாசுரனை அழித்து, அவனை மூஷிக வாகனமாக்கிய கதை
  - விநாயக சஷ்டி விரதமும் அதனை அனுட்டிக்கும் முறைகள் பற்றிய செய்திகளும்
- விநாயகர் சஷ்டி விரதம் அனுட்டித்தவர்களும் அவர்கள் பெற்ற பேறுகளும்.

  உ-ம்:
  - சிவன் - முற்புரங்களை எரித்தமை
  - உருத்திரன் - விருத்திராசுரனை வென்றமை
  - அகலிகை - கணவனை அடைந்தமை
  - தமயந்தி - நளனை அடைந்தமை

- இராமன் - சீதையை அடைந்தமை
- பகிரதன் - கங்கா நதியை வையகத்துக்கு அழைத்தமை.
- அட்டதேவதைகள் - அட்டயோகம், அமிர்தம் என்பவற்றைப் பெற்றனர்.
- தருமரும் ஏனையோரும் - இழந்த அரசைப் பெற்றனர்.
- வச்சிரமாலிமன்னன் - உடம்பில் ஏற்பட்ட கடும்பிணி நீங்கி மன்னனாகி பின்னர் திலோத்தமையை மணம் புரிந்தார்.
- இலக்கணசுந்தரி - பிரிந்த தன் கணவனை மீண்டும் அடைந்தார்.

- இக்கதையில் வரும் இலக்கண சுந்தரியின் கதை மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ளது.
    - விக்கரமாதித்தன் மனைவி இலக்கணசுந்தரி இந்த விரதத்தை அனுட்டித்து கட்டிய காப்பை அறுத்து காய்ந்த கொவ்வைக் கொடியில் போட்டாள். அத்துடன் விரதத்தையும் கைவிட்டாள்.
    - அக்கொடி துளிர்விட்டு படர்வதைக் கண்ட ஒருத்தி அக்காப்பினை எடுத்துக் கட்டினாள். அவளுக்கு இரட்டிப்பு அருள் கிடைத்தது.
    - பின்னர் விக்கிரமாதித்தன் கனவில் பிள்ளை யார் தோன்றிக் கூறியதற்கமைய மன்னன் இலக்கணசுந்தரியை புறந்தள்ளி வைத் தான். அதனால் அவள் பல்வேறு இன்னல் களுக்கு ஆளானாள்.
    - வணிகன் வீட்டுக்குச் சென்றதும் அவனிடம் இருந்த மணிமுத்துக்கள் கல்லாகின.
    - உழவன் வீட்டில் சென்றதும் வளர் பயிர்கள் அழிந்தன.
    - குயவன் வீட்டிற்குச் சென்றதும் குயக் கலங்கள் உடைந்தன.
    - மாலை கட்டுபவன் வீட்டில் சென்றதும் மாலைகள் பாம்பாயின.
    - அவள் ஔவையாரின் வீட்டில் சென்றதும் ஔவையாரைக் கண்டவர்கள் தூற்றினர், கல் எறிந்தனர், தள்ளினர், கைகளால் குத்தினர், பழித்தனர். பின்னர் ஔவையார் அவளை விசாரித்து யாரென அறிந்து அவளை விநாயகர் நோன்பிருக்கச் (விநாயகர் சஷ்டி விரதத்ததை அனுட்டிக்கச்) செய்தார்.

- 21 இழைகள் கொண்ட காப்புக்கட்டி, பண்டங்கள் படைத்து, ஔவையார் பிள்ளையார் கதையினைப் படித்தார். இலக்கண சஞ்சரி அதனைக் கேட்டு முறைப்படி விரதமிருந்தாள்.

- இலக்கண சுந்தரி முறைப்படி விநாயகர் சஷ்டி விரதத்தை அனுட்டித்ததால் அடைந்த பேறுகள்
  - அவள்ஒரு பணிகாரமும், சிறிதளவு குடிநீரும் கொண்டு, அரசன் அவரது படைகள், குதிரை, யானைகளுக்குக் கொடுத்தும் அவை முடிவடையாது இருந்தன.
  - தனது கணவனால் அழைத்துச் செல்லப் பட்டு சுகத்துடன் வாழ்ந்தாள். அவளது கணவனும் உயர் பதவியை அடைந்தான்.
- பிள்ளையார் கதையில் விநாயகர் வழிபாடு மேற்கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்கள், அதனால் கிடைக்கும் பயன்கள் என்பன கூறப்படுகின்றன. உ-ம்:
  - வீட்டிலிருந்து புறப்படும்போது
  - யுத்தம் செய்யும்போது
  - வித்தியாரம்பம் செய்யும்போது
  - உத்தியோகம் செய்யும்போது

  பயன்கள்
  - சந்ததி தழைக்கும்
  - சம்பத்து உண்டாகும்
  - நினைத்த பொருள் கிடைக்கும்; கைகூடும்
  - மேலவர்களை வென்றிடலாம்.
- பிள்ளையார் கதையின் நூற்பயன்கள் பின்வருமாறு அமையும்.
  - பொன் கிடைக்கும்
  - கல்வி அதிகமாகும்
  - எல்லாப் பொருளும் செல்வமும் தேடிவரும்
  - இக் கதையை கற்றவர்கள் மட்டுமன்றி நோற்றவர்களும் நோராது அருகில் இருந்து கேட்டவர்க்கும் கேடு வராது.
  - பிள்ளைப் பாக்கியம் பெறுவர்.
  - நோய்களில் இருந்து விடுபடுவர்.
  - பிறப்புக்களில் நல்ல பெரும் செல்வம் பெற்று சிறந்து வாழ்வர்.
- பிள்ளையார் (பெருங்) கதை கார்த்திகை மாதத்தில் வரும் விநாயக சஷ்டியின் போது படனம் செய்யப்படும்.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- ஈழத்தில் தோன்றிய சைவப் பிரபந்தங்களில் பிள்ளையார் கதையின் சிறப்பமசங களைப் பட்டியலிடுவர்.
- பிள்ளையார் விரதங்களையும் அவற்றை அனுட்டிப்பதால் கிடைக்கும் பயன்களை யும் அறிந்து, தாமும் அனுட்டிக்க முன்வருவர்.
- பிள்ளையார் கதையில் தாம் படித்துச் சுவைத்த பகுதியை பிறருக்கு எடுத்துரைப்பர்.
- பிள்ளையார் கதையினைப் பிள்ளையார் விரதம் அனுட்டிக்கும் காலத்தில் படனம் செய்வர்.

**இணைப்பு 8.3.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

**செயற்பாட்டுப்படிவம்**

குழு 1, 2

பிள்ளையார் கதை தொடர்பான பின்வரும் விடயங்களைச் சுருக்கமாக முன் வையுங்கள்.
(1) நூல் எழுந்த காலச் சூழல்:
(2) அதன் ஆசிரியர்:
(3) நூலின் பொருள் மரபு:
(4) இலக்கண சுந்தரியின் கதைச்சுருக்கம்:
(5) பிள்ளையார் கதையைப் படித்ததன் மூலம் நீங்கள் உணர்ந்து கொண்ட விடயங்கள்:

குழு 3, 4

பிள்ளையார் கதை தொடர்பான பின்வரும் விடயங்களைச் சுருக்கமாக முன் வையுங்கள்.
(1) விநாயகர் சஷ்டி விரதம் அனுட்டிக்கும் காலமும் முறையும்
(2) விநாயகர் வழிபாடு மேற்கொள்ளும் சந்தர்ப்பங்களும் பயன்களும்
(3) விநாயகர் சஷ்டி அனுட்டித்தோரும், அவர்கள் பெற்ற பயன்களும்
(4) பிள்ளையார் கதையில் காணப்படும் ஏனைய கதைகள்
(5) பிள்ளையார் கதையின் நூற்பயன்

தேர்ச்சி 8.0 : ஈழத்துச் சைவ மரபினை பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

தேர்ச்சி மட்டம் 8.4 : ஈழத்துச் சமய நிறுவனங்களையும் அவற்றின் பணிகளையும் பகுப்பாய்வு செய்வர்.

செயற்பாடு 8.4 : இராமகிருஷ்ண மிஷன், சைவபரிபாலன சபை என்பவற்றை அறிவோம்.

நேரம் : 80 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :
- இணைப்பு 8.4.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்
- பிள்ளையார் கதை (நூல்)

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 8.4.1 :
- தாங்கள் அறிந்த சமய, சமூக சீர்திருத்த இயக்கங்கள் பற்றிக் குறிப்பிட மாணவரகளுக்கு இடமளியுங்கள்.
- அவற்றின் மூலம் சமய, சமூக நிறுவனங்கள் பற்றி மாணவர்கள் விளங்குவதற்கு சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - சமய நிறுவனங்கள் பல உள்ளன. அவற்றுள் பின்வருவன குறிப்பிடத்தக்கன.
>   - விவேகானந்த சபை
>   - இந்து மாமன்றம்
>   - இராமகிருஷ்ணமிசன்
>   - சைவபரிபாலன சபை
>
>   போன்றனவாகும்.
> - இந் நிறுவனங்கள் சமயத்தைப் பாதுகாத்து வளர்க்கும் பணிகளில் ஈடுபடுகின்றன.
> - இந்நிறுவனங்கள் அக்காலச் சூழ்நிலையை அடிப்படையாகக் கொண்டு எழுந்தன.

**(10 நிமிடங்கள்)**

படி 8.4.2 :
- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுதுகடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

**(30 நிமிடங்கள்)**

படி 8.4.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இலங்கையில் இந்துசமய நிறுவனங்கள் பல உள்ளன. அவற்றுள் பின்வரும் நிறுவனங்கள் பற்றி அறிவோம்
  - இராமகிருஷ்ண மிசன்
  - சைவ பரிபாலன சபை
- இவை இரண்டையும் பின்வரும் அடிப்படையில் நோக்கலாம்.
- இராமகிருஷ்ண மிசன்
  தோற்றம் - 1897 மே 01 ஆம் திகதி
  ஸ்தாபகர் - விவேகானந்தர்
- **குறிக்கோள்**
  - தனிமனித குல மேம்பாடு, ஆன்மீக விடுதலை
- **இந்நிறுவனத்தின் நோக்கம்:**
  - இராமகிருஷ்ணரின் சிந்தனைகளைச் செயற்படுத்தல்.
  - வேத, உபநிடத தத்துவங்களுக்கு நவீன விளக்கம் கொடுத்தல்.
  - பக்தி ஞான மார்க்கங்களுக்கு முதன்மை
  - துறவியின் உன்னத மேன்மையைப் பரப்புதல்
  - சமய சமரச சன்மார்க்க நெறிகளை உணர்த்தல்.
  - இந்துக் கல்விப் பாரம்பரியத்தை வளர்த்தல்.
  - நலிந்தோரைப் பேணுதல்.
  - ஆன்மீக விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தல்.
- இது 160 கிளை நிறுவனங்களைக் கொண்டது.
- **பணிகள்**
- **சமயப்பணிகள்**
  - ஆன்மீக விழிப்புணர்வை ஏற்படுத்தல்.
  - துறவியர், ஆச்சிரமம், துறவு மார்க்கம் பற்றி சிந்தனைகளை வளர்த்தல்
  - பஜனைகளை நடாத்துதல்
  - வேதாந்த கோட்பாட்டிற்கு முதன்மை அளித்தல்
  - மத இணக்கம்
  - சேவை மூலம் கடவுளை வழிபடுதல்

- **கல்விப்பணிகள்**
    - வேதாந்தப் பாடசாலை நிறுவுதல்
    - சமஸ்கிருதப் பாடசாலை நிறுவுதல்
    - கல்லூரிகள் அமைத்தல்
    - நூல்கள், சஞ்சிகைகள் வெளியிடுதல்
    - ஞாயிறு பாடசாலை நடாத்துதல்
    - ஆங்கிலக் கல்லூரிகளை நிறுவி, நிருவகித்தல்
    - சமய நூல்களைப் பதிப்பித்தலும் வெளி யிடுதலும்
- **சமூகப்பணிகள்**
    - அநாதைகளுக்குப் புகலிடம் அளித்தல்
    - இயற்கை அனர்த்தங்களால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் அளித்தல், பாதுகாத்தல்
    - அநாதைகளுக்குக் கல்வி கற்கும் வாய்ப்பைப் பெற்றுக் கொடுத்தல்
    - அங்கவீனர்களுக்கு உதவுதல்
    - நோயுற்றோரைப் பாதுகாத்தல்
- சைவபரிபாலன சபையின் பணிகளை பின்வரும் அடிப்படையில் நோக்கலாம்.
    - தோற்றம் - 1888-4-29
- ஆறுமுக நாவலரின் சைவப் பிரகாச வித்தியாசாலை யில் வித்துவ சிரோன்மணி ந. ச. பொன்னம்பலப் பிள்ளையின் தலைமையில் இந்நிறுவனம் ஆரம் பிக்கப்பட்டது.
- **சைவ பரிபாலன சபை தோற்றத்திற்கான காரணம்**
    - அந்நியர் ஆதிக்கம்
    - கிறிஸ்தவ மிசனரிமாரின் கண்டனம்
    - பழைய ஆலயங்கள் அழிக்கப்பட்டமை
    - கிறிஸ்தவ மிசனரிமார் கல்வியில் செலுத்திய ஆதிக்கம்
    - ஆங்கிலத்தை அரசமொழி ஆக்கியமை
- **நோக்கம்**
    - சைவ மக்கள் அந்நிய சமயங்களைச் சேராது தடுத்தல்
    - சைவப் பிள்ளைகள் சைவசமயத்தைப் பேணி ஆங்கிலத்தையும், தமிழையும் பயில வித்தியாசாலைகளை ஊர்கள் தோறும் ஏற்படுத்தல்
    - சைவப் பிரசாரங்களைக் கொண்டு சமயப் பிரசங்கம் செய்வித்தல்
    - சைவ சமயத்தை வளர்த்தற் பொருட்டுப் பத்திரிகைகளை நடாத்துதல்

    - சைவாலயங்கள், மடங்கள் என்பவற்றைப் புதுப்பித்தல்
    - கோயில், மடங்கள் என்பவற்றின் சொத்துக்களைப் பாதுகாத்தல்
    - கைவிடப்பட்ட ஆலயங்களையும் அவற்றின் சொத்துக்களையும் பொறுப்பேற்று நடத்துதல்.
    - வாசிகசாலைகளையும், நூல்நிலையங் களையும் நடாத்துதல்.
    - சைவசமயப் பிரசாரம் செய்தல், புராண படனம், குருபூசை, பண்ணிசை முதலான வற்றை நடாத்துதல்.
    - சிறைக் கைதிகளுக்குப் பிரசாரம் செய்தல்.
- பணிகள்
- பிரசங்கம் செய்தல்
    - 1889 முதல் நிரந்தரப் பிரசங்கம் செய்வோர் நியமிக்கப்பட்டனர்.
    - ஞாயிறுதோறும் சிறைக் கைதிகளுக்குச் சைவப் பிரசங்கம் செய்தல்.
- பத்திரிகை வெளியிடல்
    - 1889 இல் (புரட்டாதி மாதம்) சைவப் பிரகாச யந்திரசாலையை நிறுவுதல்
    - 1889 புரட்டாதி மாதம் 11 ஆம் திகதி இந்துசாதனம், இந்து ஓகன் (Hindu Organ) ஆகிய இரு பத்திரிகைகளையும் வெளியிடல்
- பாடசாலைகள் தாபித்தல்
    - 1889 ஆம் ஆண்டில் இந்து உயர் பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது.
    - இது 1895 இல் யாழ். இந்துக்கல்லூரி எனப் பெயர் பெற்றது.
- தரும சாதனங்களைப் பொறுப்பேற்றல்
    - புண்ணிய நாச்சிமார் மடம் 1933 இல் பொறுப்பேற்றல்
    - சிதம்பரம் மாலைகட்டித் தெருவிலுள்ள மடம், விக்டோரியா வாசிகசாலை என்பன வற்றைப் பொறுப்பேற்றல்
- நூல்களை வெளியிடல்
    - நாவலர் நூல்களை மறு பதிப்புச் செய்தல்
    - இந்து சாதனத்தின் விடயங்களை நூல் வடிவம் பெறச் செய்தல்
    - பாட நூல்களை வெளியிடல் (தமிழ், ஆங்கிலம்)

- ஆங்கிலப் பாடசாலைகள் நிறுவுதல்
    - உரும்பிராய் இந்துக்கல்லூரி
    - காரைநகர் இந்துக்கல்லூரி
- மகாநாடுகள் நடாத்துதல்
- சமய பாடப் பரீட்சைகளை நடாத்துதல்
- குருகுலக் கல்விச் சபையை நிறுவி நடாத்துதல்
- சமய தீட்சை செய்வித்தல்
- பிரசார சபையை நிறுவி நடாத்துதல்
- புராண படனம் செய்வித்தல் போன்ற பணிகளைக் கொண்டு காணப்படுகின்றது

(40 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- சைவசமய நிறுவனங்களைப் பட்டியற்படுத்துவர்.
- மேலே குறிப்பிட்ட நிறுவனங்களின் நோக்கங்களைக் குறிப்பிடுவர்.
- இந்நிறுவனங்களின் பணிகளைப் பகுத்து நோக்குவர்.
- இவைபோன்ற நிறுவனங்களுடன் இணைந்து செயலாற்ற முன்வருவர்.

**இணைப்பு 8.4.1**

**குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்**

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

## செயற்பாட்டுப்படிவம்

### குழு i

(1) இலங்கையில் இந்நிறுவனங்கள் தோன்றுவதற்கான காரணங்களை முன்வையுங்கள்.
(2) இலங்கையில் சமயப்பணி புரியும் சைவசமய நிறுவனங்களைப் பட்டியற் படுத்துங்கள்.
(3) இந்நிறுவனங்களின் தற்கால செயற்பாடுகள் பற்றிய கருத்துக்களை முன்வையுங்கள்.

### குழு 2

(1) சைவ பரிபாலன சபையின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுங்கள்.
(2) இந்நிறுவனத்தின் நோக்கங்கள் பற்றி எழுதுங்கள்.

### குழு 3

(1) சைவப் பரிபாலன சபையின் பணிகள் பற்றிக் குறிப்பிடுங்கள்.
(2) இப்பணிகள் பற்றிய உங்களது கருத்துக்களை முன்வையுங்கள்.

### குழு 4

(1) இராமகிருஷ்ண மிஷனின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுங்கள்.
(2) இந்நிறுவனத்தின் நோக்கம் பற்றிக் குறிப்பிடுங்கள்.
(3) இலங்கையில் இந்நிறுவனத்தின் பணிகள் பற்றி விரிவாக எழுதுங்கள்.

தேர்ச்சி 9.0 : சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விருத்தி செய்வதற்கான முயற்சிகளில் ஈடுபடுவர்.

தேர்ச்சி மட்டம் 9.0 : சமய வாழ்க்கையும் சூழலும்

செயற்பாடு 9.0 : சமய வாழ்வுக்கேற்ப சூழலைப் பயன்படுத்தும் முறையினை அறிவோம்.

நேரம் : 40 நிமிடங்கள்

தரவிருத்தி உள்ளீடுகள் :

- இணைப்பு 9.0.1 இல் உள்ள செயற்பாட்டுப்படிவம்
- எழுது கடதாசி, நிறப்பேனாக்கள்

கற்றல்-கற்பித்தல் செயலொழுங்கு :

படி 9.0.1 :

- "ஆலயச் சுற்றாடலைப் பேணுவோம்" என்னும் தலைப்பினைக் கரும்பலகையில் எழுதி ஆலயச் சுற்றாடல் பற்றி மாணவர்கள் தம் கருத்துக்களை வழங்க வழிப்படுத்துங்கள்..
- மாணவர்களின் விடைகளின் மூலம் சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விளக்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடல் ஒன்றை நிகழ்த்துங்கள்.

> - சமய வாழ்வும் சூழலும் ஒன்றோடு ஒன்று பிரித்துப் பார்க்க முடியாதவாறு இணைந்துள்ளன.
> - சமய மரபுகளின் அடிப்படையில் சூழலைப் பேணுதலும் பாதுகாத்தலும் வேண்டும்.
> - சமய மரபுகளின் மூலம் சூழலைப் பாதுகாத்த சமயச் சான்றோர்களை அறிந்து கொள்ளுதல்.
>   உ-ம்: நாவுக்கரசர்

**(05 நிமிடங்கள்)**

படி 9.0.2 :

- மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரியுங்கள்.
- ஒவ்வொரு குழுவுக்கும் செயற்பாட்டுப்படிவம், எழுதுகடதாசி, நிறப்பேனாக்கள் என்பவற்றைப் பகிர்ந்து அளியுங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டிற்கும் உதவியும் ஆலோசனையும் வழங்குங்கள்.
- ஒவ்வொரு குழுவின் செயற்பாட்டையும் அவதானித்து வழிப்படுத்துங்கள்.

**(15 நிமிடங்கள்)**

படி 9.0.3 :

- ஒவ்வொரு குழுவும் தங்கள் அறிக்கைகளைச் சமர்ப்பிக்கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- ஒரு குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் அதே குழுவிலுள்ள ஏனைய அங்கத்தவர்கள் அறிக்கையைப் பூரணப்படுத்த இடமளியுங்கள்.
- மேலதிக கருத்துக்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்குச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.
- கீழே குறிப்பிடப்படும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- கோயில், வழிபாட்டு இடமாக மட்டுமன்றி, சமூகத்திலும் முக்கியமான இடத்தினை பெற்று இருந்தது.
  உ-ம்:
  சோழர் காலக் கோயில்கள்
- சமூகப் பிரிவுகள் புறக்கணிக்கப்பட்டு அடியார்கள் பக்தர்கள் எனப் போற்றுவதற்கு ஆலயங்களே வழிவகுத்தன.
- நீர்நிலைகளைப் பேணும் முகமாக திருக்கேணி, கிணறு அமைத்தல்.
- ஆலயச் சூழலை அழகுபடுத்தும் வகையில் மரங்களை நாட்டுதல்.
- ஆலயச் சூழலில் காணப்படும் வெப்பத்தை தணிக்கும் வகையிலும் அடியவர்களின் களைப்பை நீக்கும் வகையிலும் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்தல்
- தண்ணீர்ப்பந்தல்களில் பல்வேறு வகையான நீராகாரங்கள் வழங்குதல்.
- யாத்திரிகர் தங்கும் பொருட்டு மடங்கள் அமைத்தல்.
- ஆலயங்களுக்குச் செல்லும் முகமாகக் கீலமுற்ற வீதிகளைத் திருத்தி அமைத்தல்.
- ஆலயத்தை ஒட்டி திருமண மண்டபம், நூல் நிலையம், அறநெறிப் பாடசாலைகள் அமைத்தல்.
- கலைப் பயிற்சிக்கான கலைக்கூடங்களை அமைத்தல்.
- ஆலயம் கூட்டுப் பொறுப்பினை வளர்க்கும் நிறுவனமாக விளங்குதல்.
- ஆலயம் மன ஒருமைப்பாட்டையும் ஞானத்தையும் பக்தியையும் வளர்க்கும் இடமாகும்.
- சைவ நாயன்மார்கள் ஆலயத்தை மையமாகக் கொண்டு பல அற்புதங்களை நிகழ்த்தியதனால் சமூகம் ஆலயத்தை நோக்கி வளர்ச்சியடைந்தது.

(20 நிமிடங்கள்)

**கணிப்பீட்டு / மதிப்பீட்டு நியதிகள்:**

- மாணவர்கள் சமய வாழ்க்கையின் ஊடாக தாம் வாழுகின்ற சூழலை எங்ஙனம் அமைத்துக் கொள்ளலாம் என்பது பற்றிக் கூறுவர்.
- நந்தவனம், திருக்கேணி என்பவற்றைப் புனித இடங்களாக மதித்துச் செயற்படுவர்.
- தமது பிரதேச ஆலயங்களுக்கும் அதன் சுற்றாடலுக்குமுள்ள தொடர்பினையும் அறிய முற்படுவர்.
- தாம் வசிக்கும் சூழலில் சமய வாழ்க்கை சார்பான அம்சங்களை ஏற்படுத்துவர்.
- கோயில் சூழலை அழகுபடுத்தும் பொருட்டு அனைவருடனும் கூட்டாக இணைந்து செயற்படுவர்.

**இணைப்பு 9.0.1**

### குழுச் செயற்பாட்டிற்கான அறிவுறுத்தல்கள்

- உங்கள் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாட்டுப் படிவத்தினைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
- உங்கள் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுங்கள்.
- கலந்துரையாடிப் பெற்றுக் கொண்ட விடயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.
- வகுப்பறையில் முன்வைக்கத் தயாராகுங்கள்.

### செயற்பாட்டுப்படிவம்

(1) பின்வரும் சுற்றாடல் நிலைகளில் உங்கள் குழுவுக்குக் கிடைப்பவற்றைப் பற்றி கவனஞ் செலுத்துங்கள்.

குழு - 1. • நீர்நிலைகள்
குழு - 2. • பூ மரங்கள், நிழல் தரும் மரங்கள்
குழு - 3. • மடங்கள்
குழு - 4. • வீதிகள்

கிடைக்கப்பெற்ற விடயத்தை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் தலைப்பு களின் கீழ் தகவல்களைத் திரட்டுங்கள்.

(1) இவற்றின் பயன்பாடுகள்
(2) இவற்றினைப் பராமரிக்கும் செயற்பாடுகள்

# பகுதி - 3

# கணிப்பீடும் மதிப்பீடும்

11.2.1 கணிப்பீடும் மதிப்பீடும்

11.2.2 கற்றல் - கற்பித்தற் செயற்பாடுகளை மேலும் விரிவுபடுத்துதலுக்கான கருவிகள்

### 11.3.1 கணிப்பீடும் மதிப்பீடும்

கற்றல் - கற்பித்தற் மூலம் எதிர்பார்க்கப்படும் கற்றற் பேறுகளைத் தெளிவாகப் பெற்றுக் கொள்வதற்கும், மாணவர்கள் எதிர்பார்க்கப்படும் தேர்ச்சி மட்டத்தைப் பெற்றுக் கொள்வதற்குமாக, வகுப்பறையில் இலகுவாகச் செயற்படுத்த முடியுமான, ஒன்றுக்கொன்று தொடர்புபட்ட இரண்டு வேலைத்திட்டங்களாகக் கணிப்பீட்டையும், மதிப்பீட்டையும் கருதலாம். கணிப்பீடு சரியான முறையில் நடைபெறுமெனின், வகுப்பில் கற்கும் ஒவ்வொரு பிள்ளையும் உரிய தேர்ச்சியின் (நிபுணத்துவத்தின்) அண்மிய மட்டத்தையாவது பெற்றுக் கொள்வது கடினமல்ல. மதிப்பீட்டின் மூலம் எதிர்பார்க்கப்படுவது பிள்ளைகள் பெற்றுக் கொண்ட தேர்ச்சி எம்மட்டத்தில் காணப்படுகிறது என்பதைக் கண்டுகொள்வதாகும்.

கணிப்பீட்டைச் செயற்படுத்தும்போது ஆசிரியர்கள் மாணவர்களுக்கு இரண்டு விதமாக வழிகாட்டல்களை வழங்கலாம். இவ்வழிகாட்டல்கள் இரண்டும் பொதுவாகப் பின்னூட்டல் (Feed Back), முன்னோக்கிய ஊட்டல் (Feed Forward) என அழைக்கப்படுகின்றன. மாணவர்களின் பலவீனம், இயலாமை என்பவற்றை இனங்கண்டு கொண்ட பின், அவர்களிடம் காணப்படும் கற்றல் தொடர்பான பிரச்சினைகளை நீக்கிக் கொள்வதற்குப் பின்னூட்டலையும், மாணவர்களின் பலம், இயலுமை என்பவற்றை இனங்கண்டு கொண்ட பின், அவற்றை மேலும் விருத்தி செய்து கொள்வதற்கு முன்னோக்கிய ஊட்டலையும் வழங்குவது ஆசிரியரின் கடமையோடு சார்ந்த பொறுப்பாகும்.

கற்றல் - கற்பித்தல் செய்கையின் வெற்றி, பாடத்திட்டதிலுள்ள தேர்ச்சிகளில் எத்தேர்ச்சிகளை மாணவர்கள் எந்த மட்டத்தில் அடைந்துள்ளனர் என்பதை அறிவதன் மூலம் இனங் காணப்படுகின்றது. கற்றல் - கற்பித்தல் செய்கையின்போது, மாணவர்கள் அடைந்த தேர்ச்சி மட்டங்களை அளவிடுவது எதிர்பார்க்கப்படுவதோடு, அடைந்த தேர்ச்சி மட்டங்கள் பற்றிய விபரங்களைப் பெற்றோர் உள்ளிட்ட மற்றும் உரிய நபர்களுக்கும் தொடர்பாடல் செய்வது ஆசிரியரின் பொறுப்பாகும்.

உங்களிடம் முன் வைக்கப்பட்டுள்ள இப்பாடத்திட்டம் மாணவர் மையமான (Student Centered), தேர்ச்சி மட்ட (Competency - Based), செயற்பாடு சார்ந்த (Activity - Oriented) பிரவேசத்தைக் கொண்டது. வாழ்வைக் கருத்துள்ளதாக்கிக் கொள்வதற்கு, செயற்பாட்டி னூடாகக் கற்றல் என்பது ஆசிரியரின் உருமாற்றப் பங்களிப்பில் காணப்படும் பிரதான அம்சமாகும்.

ஏற்கனவே தயாரிக்கப்பட்ட செயற்பாடுகளின் தொடரகத்தின் ஊடாகச் செயற்படுத்தப்படும் இப்பாடத்திட்டமானது, கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினை, கணிப்பீடு - மதிப்பீடு என்பவற்றோடு ஒன்றிணைப்பதற்கு முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு செயற்பாட்டிலும் அதன் இரண்டாம் படியில் மாணவர்கள், குழுவாக ஆய்வில் ஈடுபடும்போது அவர்களைக் கணிப்பீடு செய்வதற்கும் செயற்பாட்டின் மூன்றாம் படியில் மாணவர்கள் தமது கண்டுபிடிப்புக்கள், பேறுகள் என்பவற்றைச் சமர்ப்பிக்கும்போது மாணவர்களை மதிப்பீடு செய்வதற்கும் ஆசிரியருக்கு முடியுமாகின்றது. மாணவர்கள் குழுவாக ஆய்வில் ஈடுபட்டிருக்கும்போது அவர்களினூடே சென்று அவர்களது வேலைகளை அவதானிப்பதன் மூலம், மாணவர்கள் முகங்கொடுக்கும் பிரச்சினைகளை வகுப்பறையில் தீர்ப்பதற்குரிய வசதிகளையும், வழிகாட்டல்களையும் வழங்குவது ஆசிரியரிடம் எதிர்பார்க்கப்படுகின்றது.

கணிப்பீடு, மதிப்பீடு என்பவற்றை இலகுவாக்கிக் கொள்வதற்கு ஐந்து பொது நியதிகள் முன்வைக்கப்படுகின்றது. இந்நியதிகளில் முதன் மூன்று நியதிகளும் உரிய தேர்ச்சி

மட்டத்தோடு தொடர்பான அறிவு, மனப்பாங்கு, திறன்கள் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டதாகவும், அடுத்த இரண்டு நியதிகளும் வாழ்க்கைக்குத் தேவைப்படும் முக்கியமான இரண்டு திறன்களை விருத்தி செய்து கொள்வதற்கானதாகவும் இருத்தல் வேண்டும். இந்த ஐந்து நியதிகளுடன் இணைந்ததான நடத்தை மாற்றங்கள் வகுப்பறையில் மாணவர்களிடம் காணப்படுகின்றதா என்பதைக் கண்டு கொள்வதற்கு ஆசிரியர் முயற்சி எடுக்க வேண்டியதோடு, கணிப்பீட்டின் மூலம் கண்டு கொள்ளப்படும் மாணவர்கள் பெற்றுள்ள இத்திறன்களின் அளவை மதிப்பீட்டின் மூலம் ஆசிரியர் அளந்து கொள்ள வேண்டும்.

கணிப்பீடு தொடர்பான வேலைத்திட்டங்களை அபிவிருத்தி செய்து கொள்வதன் மூலம் கற்றல் - கற்பித்தற் செய்கையை விரிவுபடுத்திக் கொள்ளலாம். இதற்காக முதலில் செயற்பாட்டுத் தொடரகத்தில் வழங்கப்பட்டுள்ள செயற்பாடுகளை கணிப்பீட்டு வகைகளை அடிப்படையாகக் கொண்டதான தொகுதிகளாக வேறாக்கிக் கொள்ளுங்கள்.

மாணவர்களின் கற்றலை மலரச் செய்யக்கூடியதாக, உரிய பாட விடயத்துடன் தொடர்பான செயற்பாட்டைத் தெரிவு செய்யுங்கள். இனி, உரிய கற்றல் - கற்பித்தல் செய்கைக்கான சாதனங்களைத் தயாரித்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு செயற்பாட்டின் ஆரம்பத்தில் உரிய உபகரணங்களைக் குழுக்களுக்கு வழங்க வேண்டும். கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினை விரிவாக்கும் போது அவை அமையக்கூடிய வகைகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- எண்ணக்கருப்படம் (Concept Maps)
- சுவர்ப்பத்திரிகை (Wall papers)
- புதிர்ப்போட்டி (Quizzes)
- வினாவிடைப்புத்தகம் (Question and Answer Books)
- மாணவர் செயற்பாட்டுக் கோவை (portfolios)
- கண்காட்சி (Exhibitions)
- விவாதம் (Debates)
- குழுக் கலந்துரையாடல் (Panel Discussions)
- கருத்தரங்கு (Seminars)
- திடீர்ப் பேச்சு
- நடிபங்கு (Role Plays)
- இலக்கியக் கருத்துக்களையும், விமர்சனங்களையும் முன்வைத்தல் (Presentation of Literature Reviews)
- வெளிக்களப் புத்தகம்/ தினக் குறிப்புப் புத்தகம்/ வேலைப் புத்தகம் (Field Books/ Nature Diaries)
- செய்முறைச் சோதனை (Practical Tests)

பாட வழிகாட்டியின் மூன்றாம் பகுதி, உத்தேசக் கற்றல் - கற்பித்தற் செய்கைகளை விரிவாக்கும் வகைகளைக் கொண்ட செயற்பாடுகளையும் அதற்கான கற்றல் - கற்பித்தல் சாதனங்களையும் அறிமுகஞ் செய்வதற்குத் திட்டமிடப்பட்டுள்ளது. இவ்வாறான செயற்பாடுகளினுள் கணிப்பீடும், அதனோடு தொடர்பான மதிப்பீடும் இணைக்கப்பட்டுள்ள தால், கற்றல் - கற்பித்தற் செய்கை மேலும் விரிவாக்கப்பட்டுள்ளதோடு, மாணவர்கள் ஆர்வத்தோடும் மகிழ்ச்சியோடும் கற்றலில் ஈடுபடுவதற்கு முடியும்.

## கற்றல்-கற்பித்தற் செயற்பாடுகளை மேலும் விரிவுபடுத்தலுக்கான கருவிகள்

### கருவி இலக்கம் : 01

01. பாடசாலைத்தவணை : முதலாந்தவணை

02. உள்ளடங்கும் தேர்ச்சிமட்டங்கள் : 1.5

03. விடய உள்ளடக்கம் :
- விரதங்கள் அறிமுகம்
- ஆடி அமாவாசை விரதம்
- சித்திரா பௌர்ணமி (சித்திரைப் பூரணை)

04. கருவியின் தன்மை :
- விரதம் பற்றிய விளக்கத்தைப் பெறுவர்.
- முக்கியமான விரதங்கள் பற்றித் தெளிவாக அறிந்து, விரதம் கடைப்பிடிக்கும் முறைகளைப் பற்றி, சஞ்சிகை தயாரித்தல்.

05. கருவியின் நோக்கம் :
- விரதம் பற்றிய விளக்கத்தைப் பெறுவர்.
- இரு விரதங்களின் முக்கிய விடயங்களைப் பெற்றுக் கொள்வர்.
- பெற்றுக் கொண்ட விபரங்களை அடிப்படையாகக் கொண்டு சஞ்சிகையைத் தயாரிப்பர்.

06. கருவியைச் செயற்படுத்துவதற்கான ஆலோசனைகள்:
ஆசிரியருக்கானது :
- செயற்படிவத்தைக் கொடுக்க முன்பு அது பற்றி மாணவர்களுக்கு அறிமுகஞ் செய்யுங்கள்.
- குழுவாகச் சேர்ந்து தகவல்களைத் திரட்டி, சஞ்சிகை தயாரிக்க வேண்டுமென மாணவர் களுக்குக் கூறுங்கள்.
- மாணவர்களை வசதிக்கேற்ப குழுக்களாகப் பிரியுங்கள்.
- குறிப்புக்கள் பெறத்தக்க (ஏனைய சைவசமய நூல்கள், பஞ்சாங்கம், பத்திரிகைகள், உறவினர், சமயப் பெரியார்கள் வாயிலாகவும் ஆலயக் குருக்கள்மார்) வழிகளைக் குறிப்பிடுங்கள்.
- திரட்டிய தகவல்களை அடிப்படையாக வைத்து சஞ்சிகைக்கான, கட்டுரை, கவிதை, சித்திரம், வாழ்த்து அட்டை போன்றவற்றை எழுத வழிப் படுத்துங்கள்.
- சஞ்சிகை தயாரிப்பதற்குத் தேவையான (எழுது கடதாசி, முகப்பு அட்டை, நிறப்பேனாக்கள்) பொருட்களை வழங்குங்கள்.

மாணவர்களுக்கானது:

- ஆசிரியரின் வழிகாட்டலுக்கு ஏற்பத் தொழிற் படுங்கள்.
- பெரியோரிடத்தும், நூல்களை வாசித்தும், பெற்ற தகவல்களைப் பயன்படுத்திப் பல்வேறு ஆக்கங் களைத் தயாரித்துக் கொள்ளுங்கள்.
- அவற்றைச் சஞ்சிகையாக அழகுறக் கட்டுங்கள்.
- ஏனைய வகுப்பு மாணவர்களும் அவற்றைப் பார்வையிட இடமளியுங்கள்.

குழுச் செயற்பாடுகள்:

குழு 01

**விரதங்கள்**
விரதம் என்பதன் விளக்கம், விரதங்களின் வகைகள், விரதங்கள் அனுட்டிக்கும் போது இடம்பெறும் பொது அம்சங்கள் என்பவற்றைத் திரட்டி கட்டுரைகள், கவிதைகள், சித்திரம் போன்ற ஆக்கங்களைத் தயாரித்து, சஞ்சிகையை அழகுற எழுதுங்கள்.

குழு 02

**ஆடி அமாவாசை விரதம்**
ஆடி அமாவாசை திதி (மாதம், தினம், நேரம்) போன்ற தகவல்களைத் திரட்டி அதனை அனுட்டிப்பதன் நோக்கம், முறை, பயன் போன்றவற்றை கட்டுரை, கவிதை, சித்திரம் போன்ற வகையில் எழுதி, சஞ்சிகையை மெருகூட்டுங்கள்.

குழு 03

**சித்திரா பௌர்ணமி**
சித்திரா பௌர்ணமியுடன் தொடர்புடைய (மாதம், தினம், நேரம்) காரணி களையும், அவற்றை அனுட்டிக்கும் முறை, அவற்றை யார் முக்கியமாகக் அனுடிக்க வேண்டும் என்பன போன்ற விபரங்களை அழகுற எழுதி, சஞ்சிகையை மெருகூட்டுங்கள்.

| புள்ளி வழங்கும் நியதிகள் / குழு இலக்கம் / பெயர் | குறிக்கோள்களை விளக்குவர். | ஆக்கத்துக்குக் கையாண்ட உத்திகளின் பொருத்தப்பாடு | ஒழுங்கமைப்பும் முன்வைப்பும் | பயன்தரு தன்மைக்கு அமைக்கப்பட்டுள்ளதா? | அலங்காரமும் உத்தியும் அவற்றின் பெறுமதியும் | மொத்தப்புள்ளிகள் 20 | இறுதிப்புள்ளிகள் 10 இற்கு |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | | | | | | | |
| 2. | | | | | | | |
| 3. | | | | | | | |
| 4. | | | | | | | |
| 5. | | | | | | | |
| 6. | | | | | | | |
| 7. | | | | | | | |

**புள்ளித்திட்டம்:**

| | |
|---|---|
| மிகநன்று | 4 |
| நன்று | 3 |
| சாதாரணம் | 2 |
| விருத்தியடைய வேண்டும் | 1 |

## கற்றல்-கற்பித்தற் செயற்பாடுகளை மேலும் விரிவுபடுத்தலுக்கான கருவிகள்

**கருவி இலக்கம் : 02**

01. பாடசாலைத்தவணை : இரண்டாந்தவணை

02. உள்ளடங்கும் தேர்ச்சிமட்டங்கள் : 5.3

03. விடய உள்ளடக்கம் :
- சித்தர்கள் ஐவர்
  - சித்தானைக்குட்டி
  - பெரியானைக்குட்டி
  - நவநாதச் சித்தர்
  - முத்துலிங்க சுவாமிகள்
  - யோகர் சுவாமிகள்

04. கருவியின் தன்மை :
- சித்தர்கள் பற்றிய அறிவைப் பெறுவர்.
- சித்தர்கள் பற்றி பரீட்சை வினாவிடைப் புத்தகம் தயாரித்தல்.

05. கருவியின் நோக்கம் :
- சித்தர்கள் பற்றிய விளக்கத்தைப் பெறுவர்.
- அவற்றைக் கொண்டு வினாவிடைகளைத் தயாரிப்பர்.
- தயாரித்தவற்றைப் பகுப்பாய்வு செய்து புத்தக மாகத் தயாரிப்பர்.

06. கருவியைச் செயற்படுத்து வதற்கான ஆலோசனைகள்:
ஆசிரியருக்கானது :
- செயற்பாட்டினை நடைமுறைப்படுத்த முன் அது பற்றி வகுப்பு மாணவர்களுக்கு அறிமுகஞ் செய்யுங்கள்.
- குழுவாகச் சேர்ந்து தகவல்களைத் திரட்டி பின்னர் தனித்தனியாக ஒவ்வொருவரும் வினாக்கள் தயாரிக்க வேண்டும் என மாணவர் களுக்குக் கூறுங்கள்.
- மாணவர்களை ஐந்து குழுக்களாகப் பிரியுங்கள்.
- கீழ்வரும் செயற்பாடுகளை ஒவ்வொரு குழுவுக் கும் வழங்குங்கள்.
- வினாக்கள் திரட்டுவதற்கான நூல்களைக் கையாள வழிப்படுத்துங்கள்.
- திரட்டிய வினாக்களையும் விடைகளையும் பதிவு செய்து கொள்ளும்படி கூறுங்கள்.
- தேடிப்பெற்ற வினாக்களையும் விடைகளையும் தமக்கிடையே கலந்துரையாட இடமளியுங்கள்.
- அவற்றைப் புத்தகமாகத் தயாரித்து முன்வைக் கச் சந்தர்ப்பம் வழங்குங்கள்.

- வினாவிடைப் புத்தகம் ஒப்படைக்க வேண்டிய தினத்தை மாணவருக்குத் தெரியப்படுத்துங்கள்.
- உரிய நியதிகளின்படி புள்ளிகளை வழங்குங்கள்.
- தேவையான பின்னூட்டல்களை மாணவருக்கு வழங்குங்கள்.

மாணவர்களுக்கானது:

- கொடுக்கப்பட்ட அறிவுறுத்தல்களுக்கு ஏற்ப, செயற்பாட்டில் ஈடுபடுங்கள்.
- ஆதாரபூர்வமான நூல்களிலிருந்து மிகச் சரியான தகவல்களை மட்டும் குறிப்பேட்டில் எழுதிக் கொள்ளுங்கள்.
- உரிய தினத்திற்கு முன்பு வினா விடைப் புத்த கத்தை ஒப்படையுங்கள்.

குழுச் செயற்பாடுகள்:

குழு 01

**யோகர் சுவாமிகள்**

1. இவரின் பிறப்பு, ஊர் என்பவற்றை விளக்கல்.
2. இவர் கூறிய உபதேசம், நற்சிந்தனை பற்றி விளக்கல்.
3. இவருடைய குரு பற்றி அறிந்து கொள்ளல்.
4. இவரால் நிறுவப்பட்ட தொண்டு நிறுவனங்கள் பற்றி அறிதல்.

குழு 02

**நவநாதச் சித்தர்**

1. குயின்ஸ்பரித் தோட்டமும் சுவாமிகளும் (நவநாதச்சித்தர்)
2. நவநாதசித்தரின் அற்புதங்கள்

குழு 03

**பெரியானைக்குட்டிச் சுவாமிகள்**

1. பெரியானைக்குட்டிச் சுவாமிகளின் வரலாறு.
2. வசிப்பிடம் பற்றி அறிந்து கொள்ளல்.
3. இவரது அற்புதம் பற்றி விளங்கிக் கொள்ளல்.

குழு 04

**சித்தானைக்குட்டிச் சுவாமிகள்**

1. பிறப்புப் பற்றி அறிந்து கொள்ளல்.
2. இளமைப் பெயர் பற்றி விளக்குதல்.
3. இவரது அற்புதம் பற்றித் தெரிந்து கொள்ளல்.

குழு 05

முத்துலிங்க சுவாமிகள்
1. இவரது பிறப்பு, ஊர் என்பன பற்றி அறிதல்
2. இவரது இளமைப் பெயர் பற்றி அறிதல்
3. இவரது அற்புதம் பற்றித் தெரிந்து கொள்ளல்

புள்ளி வழங்கும் நியதிகள்:

| நியதிகள் / குழு இலக்கம் / பெயர் | குறிக்கோள்களை விளக்குவர். | தகவல் சேகரிப்பதற்கு எடுத்த உபாயங்களின் பொருத்தப்பாடு | தகவல் சேகரித்து, குறிப்புக்களாக வைத்திருத்தல். | செயற்பாட்டு உபாயங்களின் பொருத்தப்பாடும் தர்க்கரீதியான தன்மையும் | முடிவுக்கு வருதலும் அறிக்கையின் பூரணத்துவம் | மொத்தப்புள்ளிகள் 20 | இறுதிப்புள்ளிகள் 10 இற்கு |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | | | | | | | |
| 2. | | | | | | | |
| 3. | | | | | | | |
| 4. | | | | | | | |
| 5. | | | | | | | |
| 6. | | | | | | | |
| 7. | | | | | | | |

புள்ளித்திட்டம்:

| | |
|---|---|
| மிகநன்று | 4 |
| நன்று | 3 |
| சாதாரணம் | 2 |
| விருத்தியடைய வேண்டும் | 1 |

## கற்றல்-கற்பித்தற் செயற்பாடுகளை மேலும் விரிவுபடுத்தலுக்கான கருவிகள்

### கருவி இலக்கம் : 03

01. பாடசாலைத்தவணை : மூன்றாந்தவணை

02. உள்ளடங்கும் தேர்ச்சிமட்டங்கள் : 8.2

03. விடய உள்ளடக்கம் : சைவ ஆலயங்கள்
- மாமாங்கப் பிள்ளையார் ஆலயம்
- திருக்கேதீச்சரம்
- திருக்கோணேச்சரம்
- பொன்னம்பலவாணேச்சரம்
- திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயம்
- மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயம்

04. கருவியின் தன்மை : சைவ ஆலயங்கள் பற்றி அறிந்து அவற்றின் சிறப்புக் களை விளங்கிப் பேசுதல்.

05. கருவியின் நோக்கம் :
- சைவ ஆலயங்கள் பற்றி தேடியறிவர்.
- இவற்றின் வரலாறுகளைச் சரியான முறையில் தேடிப் பெற்றுக் கொள்வர்.
- தேடிப் பெற்றுக் கொண்ட விடயங்களை அடிப்படையாகக் கொண்டு பேசுவர்.

06. கருவியைச் செயற்படுத்துவதற்கான ஆலோசனைகள்:
ஆசிரியருக்கானது :
- செயற்படிவத்தைக் கொடுக்க முன்பு அது பற்றி வகுப்பு மாணவர்களுக்கு அறிமுகஞ் செய்யுங்கள்.
- குழுவாகச் சேர்ந்து தகவல்களைத் திரட்டுவதில் ஆரம்பித்து ஒவ்வொருவரும் தனித்தனியாக பேசுவதற்கு தயாராக வேண்டுமென மாணவர் களுக்குக் கூறுங்கள்.
- மாணவர்களை ஐந்து குழுக்களாகப் பிரியுங்கள்.
- வழங்கப்படும் செயற்பாட்டுத் தலைப்புக்கு ஏற்ப தகவல்களைத் திரட்டி அவற்றைக் குறித்துக் கொள்ளும்படி வழிப்படுத்துங்கள்.
- தகவல்கள் பெறத்தக்க வழிகளைக் (பாடப் புத்தகம், வரலாற்றுக் கதை கூறும் புத்தகங்கள், தல புராணப் புத்தகங்கள்) குறிப்பிட்டு அவற்றி னூடாகவும் தகவல்களைத் திரட்டும்படி ஆலோசனை வழங்குங்கள்.

- திரட்டிய தகவல்களைத் தமது குழுவிடையே கலந்துரையாட இடமளியுங்கள்.
  குழுவிலே முதலில் உரை நிகழ்த்துபவர் யார் என்பதைத் தெரிவு செய்ய இடமளியுங்கள்.

**மாணவர்களுக்கானது:**

- கொடுக்கப்பட்ட அறிவுறுத்தல்களுக்கு ஏற்ப, செயற்பாட்டில் ஈடுபடுங்கள்.
- பொருத்தமான நூல்களில் இருந்தும், பொருத்த மானவர்களிடமிருந்தும் பெற்ற தகவல்களை மட்டும் குறிப்பேட்டில் குறித்துக் கொள்ளுங்கள்.
- உரிய தினத்தில் பேச்சை நிகழ்த்திக் காட்டத் தயாராகுங்கள்.
- இவ்வாறான பயிற்சிகளில் தொடர்ந்தும் ஈடுபடுங்கள்.

**குழுச் செயற்பாடுகள்:**

குழு 01

1. மாமாங்கப் பிள்ளையார் ஆலய வரலாறு பற்றி, நீர் அறிந்தவற்றைக் கொண்டு உரையாற்றுக.
2. மூர்த்திச் சிறப்புப் பற்றி விளக்கமாக கூறுதல்.

குழு 02

1. அந்நியர் ஆட்சியின்போது திருக்கேதீச்சரத்தின் நிலை பற்றி கூறுதல்.
2. ஆறுமுகநாவலரின் காலத்தில் இவ் ஆலயத்தின் தன்மையினை விளக்குதல்.

குழு 03

1. "அந்நியர் ஆட்சியின்போது திருக்கோணேச்சர ஆலயம்" பற்றி உரை யாற்றுதல்.
2. தற்காலத்தில் இவ்வாலயத்தின் சிறப்பினை விளக்கி உரையாற்றுதல்.

குழு 04

1. தலைநகரில் காணப்படும் ஆலயங்களில் பொன்னம்பலவாணேச்சரத்தின் சிறப்புப் பற்றி கூறுதல்.
2. திருக்கோயில் சித்திரவேலாயுத சுவாமி ஆலயத்தின் சிறப்பினைப் பற்றி உரையாற்றுதல்.

## குழு 05

1. மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயத்தின் சிறப்பினை தேடியறிந்து உரையாற்றுக.
2. மாவிட்டபுரம் எனப் பெயர் வரக் காரணமாக இருந்த வரலாறு பற்றி உரையாற்றுக.

புள்ளி வழங்கும் நியதிகள்:

| நியதிகள் (ஒவ்வொரு நியதிக்கும் நான்கு புள்ளிகள் வீதம்) / குழு இலக்கம் / பெயர் | நுழைவு, தலைப்பு, அறிமுகம், பொருத்தப்பாடு | தலைப்புக்கேற்ற விடயம், ஒழுங்குபடுத்தும் தன்மை, செம்மையான மொழிநடை | விசேட ஈடுபாடு, தனிப்பட்ட கருத்தை வெளியிடல் படைப்பாற்றல் | விளக்கம், தொனி, முகபாவம், நேரம் | தொகுப்பு, முடிவு | மொத்தப்புள்ளிகள் 20 | இறுதிப்புள்ளிகள் 10 இற்கு |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | | | | | | | |
| 2. | | | | | | | |
| 3. | | | | | | | |
| 4. | | | | | | | |
| 5. | | | | | | | |
| 6. | | | | | | | |
| 7. | | | | | | | |

புள்ளித்திட்டம்:

| | | |
|---|---|---|
| | மிகநன்று | 4 |
| | நன்று | 3 |
| | சாதாரணம் | 2 |
| | விருத்தியடைய வேண்டும் | 1 |

# மாதிரி வினாத்தாள்
## சைவநெறி - 1

* **எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.**
**(மொத்தம் 40 வினாக்கள்)**

(1) "செவ்வேள் ஏறிய மஞ்ஞை வாழ்க......" என்னும் பாடலடியில் வரும் **செவ்வேள்** என்ற பதம் குறித்து நிற்கும் பொருள்
1. விநாயகர் 2. சிவபெருமான்
3. முருகக் கடவுள் 4. தெய்வயானை

(2) பெரிய புராணத்தில் சொல்லப்படும் முக்கிய அம்சம்
1. மெய்யடியார்களின் வரலாற்றுச் சிறப்புகள்
2. மெய்யடியார்களின் மூலம் இறைவனின் சிறப்பு போற்றப்படுதல்
3. குறிப்பிட்ட ஒரு கோயிலின் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவற்றின் சிறப்புக்கள்
4. முருகப் பெருமான் தேவர்களைக் காத்தமை முதலான சிறப்புக்கள்

(3) ஆதிகாலத்தில் கேது பூசித்து அருள் பெற்ற ஈழத்துச் சிவத்தலம்
1. முன்னேஸ்வரம் 2. திருக்கேதீஸ்வரம்
3. திருக்கோணேஸ்வரம் 4. ந்குலேஸ்வரம்

(4) தைப்பொங்கல் பண்டிகை மூலம் பெரிதும் முதன்மைப்படுத்தப்படும் விழுமியம்
1. நடுவுநிலைமை 2. நீதி
3. வாய்மை 4. நன்றி மறவாமை

(5) சேக்கிழாரைக் குறிக்கும் சிறப்புப் பெயர்
1. தாண்டக வேந்தர் 2. தொண்டர்சீர் பரவுவார்
3. தென்னவன் பிரமராயன் 4. தேவாரமுதலி

(6) பஞ்சகௌவியம் என்பது
1. பசுவின் பால், இளநீர், தயிர், நெய், பழம்
2. பசுவின் பால், சர்க்கரை, அறுகம்புல், கோசலம், கோமயம்
3. பசுவின் பால், தயிர், நெய், கோசலம், கோமயம்
4. தயிர், நெய், இளநீர், கரும்பு, பன்னீர்

(7) சைவ சமயத்தில் யோக நெறியில் நிற்போர் அடையும் முத்தி
1. சாலோகம் 2. சாமீபம்
3. சாயுச்சியம் 4. சாரூபம்

(08) "நிலை பெறுமாறெண்ணுதியே நெஞ்சே நீ வா...." என்னும் பாடலைப் பாடியவர்
1. சுந்தரமூர்த்தி நாயனார்
2. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்
3. திருநாவுக்கரசு நாயனார்
4. மாணிக்கவாசக சுவாமிகள்

(09) சுந்தரமூர்த்தி நாயனாரின் குருபூசைத் தினம்
1. வைகாசி மூலம் 2. ஆனி மகம்
3. சித்திரைச் சதயம் 4. ஆடிச் சோதி

(10) சைவ சித்தந்த நூல்களில் "சித்தாந்த அட்டகம்" என அழைக்கப்படும் நூல்களைப் பாடியவர்,
1. மெய்கண்டார் 2. அருணந்தி சிவாசாரியார்
3. மறைஞான சம்பந்தர் 4. உமாபதி சிவாசாரியார்

(11) சுந்தர மூர்த்தி நாயனார் இறுதியாகப் பாடிய பதிகம்
1. "தலைக்குத் தலை மாலை......"
2. "பித்தாப் பிறை சூடி......"
3. "சுண்ணவெண் சந்தனச் சாந்தும்......"
4. "தம்மையே புகழ்ந்து....."

(12) திருச்சிராப்பள்ளியில் வீற்றிருக்கும் இறைவன்
1. அமிர்தகடேஸ்வரர் 2. வேகாவனமுடையார்
3. தாயுமான சுவாமி 4. திருக்கேதீச்சரநாதர்

(13) பிற உயிர்களின் நன்மைக்காகச் செய்யப்படும் பூசை
1. பரார்த்த பூசை 2. நித்திய பூசை
3. காமிக பூசை 4. நிஷ்காமிக பூசை

(14) "தோடுடைய செவியன்......" எனத் தொடங்கும் தேவாரத்தின் பண்
1. காந்தார பஞ்சமம் 2. நட்டபாடை
3. தக்கேசி 4. பழந்தக்கராகம்

(15) மறைத்தல் தொழிலைப் புரியும் மூர்த்தம்
1. உருத்திரன் 2. பிரம்மா
3. மகேசுரன் 4. விஷ்ணு

(16) பன்னிரு திருமுறைகளுள் அடங்காத துதிப்பாடல்கள்
1. தோத்திரப் பாடல்கள் 2. திருமந்திரம்
3. திருக்கோவையார் 4. பெரியபுராணம்

(17) திருத்தம்பலேஸ்வரம் என அழைக்கப்பட்ட தலம்
1. நகுலேஸ்வரம்
2. முன்னேஸ்வரம்
3. கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம்
4. மண்டூர் முருகன் ஆலயம்

(18) ஒட்டுசுட்டான் தான்தோன்றீஸ்வர இறைவனின் பெயர்
1. பூலோக நாயகன் 2. வேகாவனமுடையார்
3. தான்தோன்றீஸ்வரர் 4. முன்னைநாதர்

(19) தல மகிமை கூறும் புராணங்களில் ஒன்று
1. சிவராத்திரி புராணம் 2. ஏகாதசிப் புராணம்
3. சிவ புராணம் 4. திருக்கரைசைப் புராணம்

(20) சைவ வித்தியா விருத்திச் சங்கம் ஆரம்பிக்கப்பட்ட ஆண்டு
1. 1920 2. 1923 3. 1983 4. 1924

(21) சூடு மிதிப்பதற்கு முன் நடைபெறும் சடங்கு

| | | | |
|---|---|---|---|
| 1. | ஏர்மங்கலம் | 2. | முளைப்பாலிகை |
| 3. | ஆயுத பூசை | 4. | பொலிச்சடங்கு |

(22) முருகனுக்குரிய விரதங்களில் ஒன்று

| | | | |
|---|---|---|---|
| 1. | தைப்பூசம் | 2. | பங்குனித் திங்கள் |
| 3. | பங்குனி உத்தரம் | 4. | மாசி மகம் |

(23) விசாரசருமர் எனும் இயற்பெயர் கொண்ட நாயனார்

| | | | |
|---|---|---|---|
| 1. | பூசலார் நாயனார் | 2. | சண்டேஸ்வர நாயனார் |
| 3. | சாக்கிய நாயனார் | 4. | குங்கிலியக் கலய நாயனார் |

(24) பொய்கையாழ்வார் பாடிய திருப்பாசுரங்கள்

1. திருவாய் மொழி, திருப்பாவை
2. முதலாம் திருவந்தாதி
3. பெருமாள் திருவந்தாதி
4. திருமாலை, பெரிய திருமடல்

(25) ஆலயக் கிரியைகளில் மௌனோற்சவம் குறிப்பது,

| | | | |
|---|---|---|---|
| 1. | படைத்தல் | 2. | காத்தல் |
| 3. | அழித்தல் | 4. | மறைத்தல் |

(26) சகலாகம பண்டிதர் என அழைக்கப்படுபவர்

1. அருணந்தி சிவாச்சாரியார்
2. உமாபதி சிவாச்சாரியார்
3. மறைஞான சம்பந்தர்
4. சத்திய ஞான தரிசினி

(27) அட்டமா சித்திகளில் பிராத்தி என்பது

| | | | |
|---|---|---|---|
| 1. | நுண்மை | 2. | மென்மை |
| 3. | விரும்பியதை எய்துதல் | 4. | நிறைவுண்மை |

(28) ஆணவ மலத்தை மட்டும் உடையவர்

| | | | |
|---|---|---|---|
| 1. | சகலர் | 2. | பிரளயாகலர் |
| 3. | விஞ்ஞானகலர் | 4. | சித்தர்கள் |

(29) நாட்டார் தெய்வ வழிபாட்டில் இடம்பெறும் ஆரம்பநாள் சடங்கு

| | | | |
|---|---|---|---|
| 1. | கன்னிக்கால் நாட்டல் | 2. | கதவு திறத்தல் |
| 3. | தெய்வமாடல் | 4. | சந்தனக் காப்பிடல் |

(30) திருக்கார்த்திகைத் திருநாள் என்பது

1. குமாராலய தீபத் திருநாள்
2. தீபாவளித் திருநாள்
3. விநாயக விரத நாள்
4. காலை சந்திப் பூசை

# மாதிரி வினாத்தாள்
## சைவசமயம் - 11

* **முதலாம் வினா உட்பட விரும்பிய ஐந்து வினாக்களுக்கு விடை எழுதுக.**

(1) (i) பின்வரும் பாடல்களுள் இரண்டினை அடிமுறை பிழையாது திருத்தமாக எழுதுக.
(ii) அவற்றின் பொழிப்புரையை எழுதுக.
(iii) அவற்றைப் பாடியோர், அவை எச்சந்தர்ப்பத்தில் பாடப்பட்டன என்பதையும் எழுதுக.
(அ) "திருக்கோயில் இல்லாத......"
(ஆ) "ஆலந்தானுகந்த......"
(இ) "ஆதியும் அந்தமும்......"
(ஈ) "தாதையைத் தாளற......"
(உ) "பாதிமதி நதி......"

(2) (i) கடவுள் ஒருவரே உண்மைப் பொருள் என்பதனைச் சைவ சித்தாந்த நூல்களை ஆதாரமாகக் கொண்டு விளக்குக.
(ii) "கோயிலும் சமயமும்" என்னும் விடயம் பற்றி உமது கருத்துக்களை முன் வைக்குக.
(iii) வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய சமய விழுமியங்கள் நான்கினை எழுதுக.
(iv) பதியின் இயல்புகளைச் சமய நூல்களின் ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டுக.

(3) (i) "சைவசமயமே உண்மையான சமயம்" என சாக்கிய நாயனார் ஏற்றுக் கொண்ட விதத்தினை விளக்கமாக எழுதுக.
(ii) பெரிய புராணத்தில் சாக்கிய நாயனார் பாடப்பட்டுள்ளமைக்கான காரணங்களைத் தருக.
(iii) சாக்கிய நாயனார் கதை மூலம் நீங்கள் உணர்ந்து கொண்ட சமய நம்பிக்கைகள் பற்றி விபரிக்குக.
(iv) சாக்கிய நாயனாரின் வாழ்வும் பணியும் பற்றி சுருக்கமாகத் தருக.

(4) (i) பொலனறுவைக் காலத்தில் இலங்கையில் சைவசமயம் மேன்மையுற்றிருந்த-வாற்றைச் சுருக்கமாக எழுதுக.
(ii) யாழ்ப்பாண இராச்சிய காலத்தில் சைவசமயம் பேணப்பட்டவாற்றை விளக்குக.
(iii) ஈழத்தில் போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் காலங்களில் சைவ சமய மரபுகள் எவ்வாறு பாதுகாக்கப்பட்டன என்பதை ஆராய்ந்து கூறுக.
(iv) ஈழத்தில் சைவ பௌத்த உறவு எவ்வாறு காணப்பட்டன என்பதனை மதிப்பிடுக.

(5) (i) ஈழத்தில் சைவப் பிரபந்தங்கள் எழுந்தமைக்கான காரணங்களை கூறுக.
(ii) பிள்ளையார் கதையை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் விடயங்களை விளக்குக.
- ஆசிரியர்
- பொருள் மரபு
- நூற்பயன்

(iii) விநாயகர் சஷ்டி விரதம் அனுட்டித்த ஐந்து பேர்களையும் அதனால் அவர்கள் பெற்ற பயன்களையும் எடுத்துக் காட்டுக.
(iv) கண்ணகி வழக்குரைக் காதையில் காணப்படும் சமயக் கருத்துக்களை முன் வைக்குக.

(6) (i) திருமுறை என்பதன் பொருளை விளக்குக.
(ii) முதல் ஏழு திருமுறைகளும் எவ்வாறு அழைக்கப்படும்? அவற்றைப் பாடியோரை நிரற்படுத்துக.
(iii) "வேயுறு தோளி பங்கன்....." எனும் திருமுறைப் பாடலில் காணப்படும் புராணக் கதைகள் இரண்டினைக் குறிப்பிட்டு, அவற்றுள் ஒன்றை விபரிக்குக.
(iv) கந்த புராண நூலின் ஆசிரியர், அதன் உள்ளடக்கம் என்பவற்றைச் சுருக்கமாக விளக்குக.

(7) (i) சித்தர்கள் என்போர் யார்? அவர்களின் இயல்புகளைச் சுருக்கமாக விளக்குக.
(ii) பெரியானைக்குட்டி சுவாமிகளின் அருளுரைகளைத் தொகுத்துக் கூறுக.
(iii) நவநாதச் சித்தரிடம் இருந்து வெளிப்பட்ட மகா வாக்கியங்களைக் குறிப்பிடுக.
(iv) சித்தர்களின் அற்புதச் செயல்களால் சைவசமயம் எவ்வாறான வளர்ச்சியைப் பெற்றது என்பதனை விளக்குக.

(8) பின்வருவனவற்றுள் எவையேனும் மூன்றினுக்குச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) இந்துபோர்ட் சு. இராசரத்தினம்
(ii) நாட்டார் கலைகள்
(iii) சமய இலக்கியங்களில் இதிகாசக் கதைகள்
(iv) வாழ்வியல் சடங்குகளில் திருமணம்
(v) நாட்டார் வழிபாட்டில் கண்ணகியம்மன்

